# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...





தெவிட்டாத தேரழகு!

32 பக்க இணைப்பு



KALKI ● 28.06.2009 ● ரூ.10.00 ● 96 பக்கங்கள்

உப்பு தேசத்தில் ஓர் உலா!

சிறைக்கு வந்த நீதிபதி!

திருவாரூர் - நாகை மாவட்ட ஸ்பெஷல் - II

பரம-ஏழ்மை புற்று நோயாளிகளின் கண்ணீரைத் துடைத்து
அன்போடு அரவணைக்கும் ஒரே தொண்டு நிறுவனம்

# ஸ்ரீ மாதா டிரஸ்ட்



நிறுவனர் மற்றும் நிர்வாக அறங்காவலர்

**வி. கிருஷ்ணமூர்த்தி.** கைபேசி: 94440 01065

உங்கள் சேவை தொடர, தொடர்புகொள்ளுங்கள்:

திரு. காமாட்சிமணி - 93848 33326 | அமிமா. என். சங்கரம் - 93848 20727
திருமதி. என். ரமா - 93810 20727 | திரு. ஏ. அமெரிக்கன் - 9003247887

ஸ்ரீ மாதா டிரஸ்ட் என்ற இந்த தொண்டு நிறுவனம், ஸ்ரீ காஞ்சி பெரியவர்களின் அருளாசியுடன் திருமலை ஸ்ரீ பாலாஜி தெய்வசன்னிதானத்தில் ஆரம்பிக்கப்பட்டது. அதிக துன்பத்திற்கு ஆளாகும் புற்று நோயாளிகளில் மிகவும் ஏழ்மை நிலையில் இருப்பவர்களைப் பாதுகாக்கும் நோக்கத்தோடு பாடுபட்டுவரும் அடையாறு கேன்சர் இன்ஸ்டிட்யூட், இந்த நோயாளிகளுக்கான காப்பகத்தைக் கட்டி பயன்பாட்டுக்கு கொண்டுவந்தார்கள்.

இந்த ஸ்தாபனம் ஸ்ரீ காஞ்சி பெரியவர்களுக்கு விடுத்த வேண்டுகோளுக்கு இணங்கி, ஸ்ரீ மாதா டிரஸ்ட் இந்த தர்மசாலாவை ஆரம்பித்து பராமரிக்கும் மிகப்பெரிய பொறுப்பை ஆகஸ்டு மாதம் 2000ம் ஆண்டு ஏற்றுக் கொண்டது. அன்றிலிருந்து இன்றுவரை எந்தவித தொய்வும் இன்றி, பொதுமக்கள், நல்ல உள்ளங்கள் அளித்து வரும் நன்கொடைகளின் உதவியின் பலனாக, பல மாகாணங்களிலிருந்து வரும் பல்லாயிரக்கணக்கான ஏழைகளுக்கும் உடன்வரும் அவர்களது ஒரு உதவியாளருக்கும் இலவசமாக உணவும், இருக்க இடமும் கொடுத்து காப்பாற்றி வருகிறது இந்த ஸ்ரீ மாதா டிரஸ்ட்.

மூன்று வேளை சுகாதாரமான, சுவையான உணவு காலை தேநீர், காபி, படுத்து உறங்க அறைகள் மின்விசிறியுடன்... சுத்தமான கழிப்பறை, குளியலறை வசதிகள்... உடல் வலியை மறக்க டிவி சேனல்கள்... தினமும் தெய்வ அருள் வேண்டி பிரார்த்தனை ஆகியவை இங்கு வழங்கப்படுகின்றன.

தங்கவரும் நோயாளிகளை அன்போடு அரவணைத்து கருணை உள்ளத்தோடு உதவி, அவர்கள் கண்ணீரைத் துடைக்க தினமும் அரும்பாடுபட்டு, சேவை உள்ளத்துடன் இந்த தர்மாசாலையை நடத்தி வருகிறது எங்கள் ஸ்ரீ மாதா டிரஸ்ட்.



## கேன்சர் துயர் துடைக்கும் தர்மசாலை!

அடையாறுகூவம்பாலத்தைநெருங்கும்போது ஏதோ அரசுக்கட்டடம்போல தட்டுப்படுகிற இந்த தர்மசாலைக்குள் நுழைந்தால் ஆச்சர்யங்கள் ஆயிரம். புற்று நோயால் பாதிக்கப்பட்ட ஏழைகளுக்கு சிகிச்சை முடிகிற வரை இலவச உணவும் தங்குமிடமும் தருகிற புனிதப் பணியை ஸ்ரீ மாதா டிரஸ்ட் ஒன்பது வருடங்களாகச் செய்து வருகிறது. கேன்சருக்கு ஏழை பணக்காரன்கிற பாகுபாடு எல்லாம் கிடையாது. ஒருபக்கம் உயிரைத் துளைக்கிற வலி. இன்னொரு பக்கம் வாழ்க்கையே முடிஞ்சுடுமோங்கிற பயம். கையில் காசு இருக்கறவங்களுக்கு இந்த வேதனை மட்டும் தான். ஆனால் தினசரி கூலி வேலை செஞ்சு வயிற்றை கழுவ வேண்டிய ஏழைகளுக்கு? வேலைக்குப் போறதை எல்லாம் அப்படியே நிறுத்திட்டு கேன்சருக்கு சிகிச்சை எடுக்க வேண்டிய கட்டாயம். வேலைக்குப் போக முடியாததால் குடும்பச் செலவுக்கு திணற வேண்டிய அவலம் இப்படி கஷ்டப்படுகிற ஏழைகளின் வலியை நாம் பகிர்ந்துக்க முடியாது. இலவசமா உணவும் தங்குமிடமும் கொடுத்து ஆரம்பிச்சோம் என்று முன்னுரை தருகிறார் தர்மசாலையின் நிறுவனரும் நிர்வாக அறங்காவலருமான கிருஷ்ணமூர்த்தி.

மாதாவின் நித்தமும் அன்னமிடும் கைகளுக்குப் பின்னால் இருப்பவை அடையாறு கேன்சர் இன்ஸ்டிட்யூட்டும், காஞ்சி சங்கர மடமும். அடையாறு இன்ஸ்டிட்யூட்டில் சிகிச்சை பெறுவதற்கு தொலைதூரத்திலிருந்து வரும் ஏழைகள் தங்குவதற்காக அதன் நிர்வாகம் சில நன்கொடையாளர்களின் உதவியுடன் 1999ல் இங்கே கட்டடத்தை மட்டும் நிறுவியது. போதுமான நிதி வசதிகள் இல்லாததால், திறக்கப்பட்டதிலிருந்து ஒரு வருடமாக கட்டடம் யாருக்கும் பயன் இன்றி பூட்டிக் கிடந்ததாம். முடிவில் சங்கர மடத்தின் முயற்சியில் தர்மசாலையைத் திறம்பட நடத்துவதற்கு வழி பிறந்திருக்கிறது.

# Sri Matha Trust

(ஜாதி, மத, இன சார்பு அற்ற ஏழை புற்றுநோயாளிகளுக்கு புகலிடம் தரும் தொண்டு நிறுவனம்)

    

மாதாவின் விதிமுறைகள் மிகவும் எளிமையானவை. அடையாறு இன்ஸ்டிட்யூட்டுக்கு வரும் ஏழ்மை நிலையிலுள்ள வெளியூர் நோயாளிகள் அங்கே சிகிச்சை பெற வேண்டிய கால அளவைப் பொறுத்து, நிர்வாகம் அவர்களை இங்கே அனுப்பி வைக்கும். கேன்சரால் பாதிக்கப்பட்டவர்கள் சிகிச்சை முடியும் வரை யாரேனும் ஒருவருடன் மாதாவில் தங்கலாம். பண்டிகை நாட்களில் வேஷ்டி சேலை எடுத்துக் கொடுப்பதிலிருந்து சிகிச்சை முடிந்த பிறகு அவர்களை ஊருக்கு பத்திரமாக அனுப்புவது வரை மாதா பார்த்து பார்த்துச் செய்யும் தொண்டுகளால் அந்த தர்மசாலை அவரவருக்கு சொந்த வீடாக உருமாறி நிற்கிறது.

ஆரம்ப நாட்களில் தர்மசாலையின் ஒரு நாள் செலவு ஐயாயிரம் ரூபாய். இப்போ முன்னூறு பேர் தங்கியிருக்காங்க. இன்னிக்கு கையில் 12 ஆயிரம் ரூபாய் இருந்தால்தான் தர்மசாலையை ஒரு நாள் நடத்த முடியும். சிலர் "ஸ்ரீ மாதா"வைப் பற்றி யார் மூலமாகவோ கேள்விப்பட்டு எங்களை மெனக்கெட்டு வந்து பார்த்து, தங்களால் முடிஞ்ச நன்கொடையை கொடுத்துட்டுப் போறாங்க. இன்னும் சிலர் தங்கள் அம்மா, அப்பா நினைவு நாட்களில் இங்கு வந்து, எல்லோருக்கும் ஒரு வேளை சாப்பாடு போட்டுட்டுப் போறாங்க. நாலு பேருக்கு நல்லது பண்றதுக்காக ஆரம்பிச்ச காரியங்கள் என்றைக்கும் தடைபடாது சார், நம்பிக்கையுடன் கிருஷ்ணமூர்த்தி சொல்வது முற்றிலும் உண்மை.

- ஆனந்த செல்லையா

**உங்கள் உதவிகளை இப்படி அளிக்கலாம்...**

- ஒரு நாளைக்கு ஒரு நோயாளியின் உணவுக்காக ரூ. 60 அளிக்கலாம்.
- ஒவ்வொரு மாதமும் ஒரு நோயாளி என்ற அடிப்படையில் ஆண்டு முழுவதும் ரூ. 720 அளிக்கலாம்.
- இந்த தர்மசாலாவின் ஒரு நாள் சாப்பாடு செலவான ரூ. 7000 அளிக்கலாம்.
- ஏழை நோயாளிகளுக்கு மதிய உணவு அல்லது இரவு உணவு அளிக்க ரூ. 3000 வழங்கலாம்.
- காலை சிற்றுண்டி மட்டும் கொடுக்க ரூ. 2000 வழங்கலாம்.
- காலை முதல் இரவு வரை முழுநாள் உணவை ஆண்டுக்கு ஒரு முறை கொடுக்க உங்கள் சார்பாக ரூ. 60000 கொடுத்து நீங்கள் ஒரு "வள்ளல்" ஆகலாம். நீங்கள் கொடுக்கும் இந்த தொகை டிரஸ்டின் காப்பு நிதியில் சேர்க்கப்பட்டு, அதன் வட்டியிலிருந்து இந்த தர்மம் செய்யப்படும்.
- பெரிய மனதுடன் ரூ. 100000 கொடுத்து, நீங்கள் இந்த புனித சேவையின் ஒரு நிரந்தர காப்பாளர் ஆகலாம்.

தாங்கள் எங்கள் தர்மசாலாவிற்கு விஜயம் செய்து, எங்கள் செயல்பாடுகளை நேரிடையாக அறிந்துகொண்டு உங்கள் உதவியை எங்களுக்கு அளிக்கலாம். நீங்கள் அளிக்கும் நன்கொடையை, ஸ்ரீ மாதா டிரஸ்ட் என்ற பெயரில் காசோலையாக கீழ்கண்ட விலாசங்களில் ஒன்றிற்கு அனுப்பி வைக்கலாம். நீங்கள் அளிக்கும் நன்கொடைக்கு 80 (G) பிரிவின்படி வருமான வரிவிலக்கு உண்டு.

## ராஜஸ்தானி தர்மசாலா

*நிர்வாக அலுவலகம்:*
"குரு கிருபா", 3, சாஸ்தா அவென்யூ,
திருமழிசை தெரு, சுந்தரம் காலனி,
கிழக்கு தாம்பரம், சென்னை - 59.

பழைய கேன்சர் இன்ஸ்டிட்யூட் வளாகம்,
ஈஸ்ட் கனால் பேங்க் ரோடு, காந்தி நகர்,
அடையாறு, சென்னை - 20.
போன்: 2442 0727, 2440 4950

முப்பத்திரண்டு கோடியில், இயக்குநர் செல்வராகவன் எடுத்துக் கொண்டிருக்கும் படம்தான் 'ஆயிரத்தில் ஒருவன்'. 250 நாட்கள் படப்பிடிப்பு நடத்தி ஏறக்குறைய இரண்டாயிரம் ஜூனியர் ஆர்ட்டிஸ்டுகளைக் கொண்டு படம்பிடித்து இருக்கிறார் இயக்குநர். தொல்பொருள் ஆராய்ச்சியாளர் வேடத்தில் ஆண்ட்ரியா கதாபாத்திரம். கடலின் நடுவே ஒரு தீவில் படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்த வேளையில், யாரும் எதிர்பாராவண்ணம் கடல் நன்னீர் தீவை நோக்கி வரவும் அதே சமயத்தில் யூனிட்டில் உள்ள ஒருவருக்கு 'சுனாமி' வரப்போவதாக எஸ்.எம்.எஸ். வர, படத்தின் மொத்தக் குழுவும் இருட்டில் அலறி அடித்துக் கொண்டு வழி தெரியாது திரிந்து, கரைக்கு வந்து பெருமூச்சு விட்டிருக்கின்றனர்.

'மலை மலை' திரைப்படத்தின் ஆடியோ ரிலீஸ் வெளியீட்டு விழாவை சென்னை மட்டுமல்லாது தமிழகத்தின் பிற முக்கிய மாவட்டங்களிலும் நடக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. இது திரைப்பட வரலாற்றில் முதன்முறையாக நடக்கும் நிகழ்வாகும். படத்தில் மொத்தம் ஆறு சண்டைக் காட்சிகளையும் வெவ்வேறு விதத்தில் வடிவமைத்திருக்கிறார் கனல்கண்ணன்.

'ஊர்ல மலை மாதிரி பலத்தோட இருக்கிற இளைஞன் ஒருத்தன் சென்னையில மலை மாதிரி பலத்தோட இருக்கிற ஒருத்தன்கிட்ட மோதுறான். ஏன், எதற்கு, எப்படிங்கறதுதான் 'மலை மலை'. இதுவரை அருண் விஜய் பல படங்களில் நடித்திருந்தாலும் அவருடைய முழுத் திறமையும், நடிப்பும் சரியாக வெளிப்படவில்லை என்பதே உண்மை. 'மலை மலை' அதனை சரிசெய்யும் என்கிற நம்பிக்கையில் இருக்கிறார் நாயகன்!

'பிதாமகன்' திரைப்படத்தைத் தயாரித்த வி.ஏ.துரையின் நிறுவனமான எவர்கிரீன் மூவி இண்டர்நேஷனல் தயாரிக்கும் படம்தான் 'நாய்க்குட்டி'. அறிமுக நாயகனாக செல்வின். அவருக்கு ஜோடியாக நிக்கோல். விலங்குகளில் நன்றியுடையது என்றால் நாயை மட்டுமே சொல்வார்கள். அப்படி பாராட்டி, சோறூட்டி வளர்த்தவனையே அந்த நாய் கடிக்க நேர்ந்தால் என்னவாகும் என்பதே படத்தின் கதையாம். சென்னையின் பரபரப்பான பகுதிகளில் படப்பிடிப்பு நடந்து வருகிறது.

2008ம் ஆண்டின் 'பெமினா மிஸ் இந்தியா' அழகிப் போட்டியில் மூன்றாம் இடத்தைப் பிடித்த ராகினி திவேதி தமிழில் 'அறியான்' படம் மூலமாக அறிமுகமாகிறார். படத்தின் தொழில்நுட்பக் கலைஞர்கள் அனைவரும் இளைஞர்களாக இருப்பதால், புது வேகத்துடன் படைப்பு வெளிவரப் போகிறது என யூனிட்டே காத்திருக்கிறதாம். பார்க்கலாம்! ●

# சுனாமி எஸ்.

ம்.எஸ்!

— நியூஸ்பாய் —



# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்**

தொலைபேசி :
**044 - 4343 8888 (30 lines)**

தொலைநகல் : **044 - 4343 8899**

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள் :
info@kalkiweekly.com
கல்கி இண்டர்நெட் முகவரி :
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
**ஒரு வருடம் : ரூ.3,800/-**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

என்ன பெரிய நஷ்டம் என்கிற தொனியில்தான் பேட்டி கொடுக்கிறார் தோனி. உலகக்கோப்பை போட்டிக்காக இங்கிலாந்துக்குச் சென்ற நாள்முதலே விடாது துரத்தின பிரச்னைகள். பயிற்சி ஆட்டங்களில் ரோஹித் சர்மா ஆடியதைப் பார்த்து ஷேவாக்கை மட்டம் தட்டுவது போலப் பேசினார் தோனி. ஷேவாக் காயம் குறித்த மர்மம் நீடித்த நிலையில் பத்திரிகையாளர்களிடம் மிகவும் திமிராக நடந்துகொண்டார். பனிக்கட்டி மனமுள்ள மனிதர் என்கிற பெருமைக்குச் சொந்தக்காரரான தோனியை இங்கிலாந்தில் தேடவேண்டியிருந்தது.

ஐ.பி.எல். ஆட்டங்களில் கிடைத்த பலமான பயிற்சிகளால் இந்திய அணி கோப்பையை வெல்வதில் சிரமமேதும் இருக்காது என்று எல்லோருமே கற்பூரம் ஏற்றி சத்தியம் செய்தார்கள். சூப்பர் 8 ஆட்டங்கள் ஆரம்பித்தவுடன்தான் இந்திய அணியின் பலவீனம் வெளிப்பட ஆரம்பித்தது. கங்குலி போன்ற சில இந்திய வீரர்கள் ஷார்ட் பிட்ச் பந்துகளில் ரன் எடுக்கச் சிரமப்படுவார்கள் என்பது உண்மையே. ஆனால் இந்த ஓர் ஆயுதத்தை வைத்துக்கொண்டு மேற்கு இந்திய அணி ஒட்டு மொத்த இந்திய அணியையும் நிலைகுலைய வைத்தது. உடனே இங்கிலாந்து விழித்துக்கொண்டது. அதே ஆயுதத்தால் இந்திய அணியை மீண்டும் அடித்து உலகக் கோப்பையிலிருந்து வெளி

# என்ன காரணம்?



யேற்றிவிட்டனர். இதுபோன்ற எகிறும் பந்துகளை தெண்டுல்கரும் திராவிடும் லக்ஷ்மணனும் அநாயசமாக ஆடுவார்கள். ஷேவாக்கும் இந்தப் பந்தில் சிக்ஸர் அடிக்கப் பழகிக் கொண்டார். ஆனால் மற்ற வீரர்களுக்கு கிரிக்கெட்டை ஆத்ம சுத்தியுடன் கற்றுக்கொள்ள விருப்பம் இல்லை. தாம் ஒரு குறை பாடுள்ள ஆட்டக்காரர் என்கிற நிஜத்தை அவர்கள் இந்நேரம் உணர்ந்திருப்பார்கள்.

ஐ.பி.எல்.லிலிருந்தே தோனியின் அணித்தேர்வு மிக மோசமாக இருந்து வருகிறது. யுவ்ராஜின் உடல் மொழி எதிரணியினரை நடுங்க வைத்தாலும் அவருடைய பங்களிப்பையும் தோனி சரிவர பயன்படுத்திக்கொள்ளவில்லை. ஆர்.பி.சிங்கைக் கூடாரத்துக்குள் அமர வைத்த பாவத்துக்கும் பலன் கிடைத்துவிட்டது. ரெய்னா, ரோஹித் சர்மாக்கள் எல்லாம் ஐ.பி.எல். லிலேயே தங்களுடைய மொத்தச் சரக்கையும் காலி செய்துவிட்டார்கள். இந்திய அணியின் ஃபீல்டிங்கின் தரம் உயர வேண்டுமென்றால் பயிற்சியாளர் ராபின் சிங் மாற்றப் படவேண்டும்.

**20-20**யில் எதிர்பார்ப்பு உருவாக்கும் அணிகள் வெற்றி பெறுவதில்லை. சென்ற முறை சுற்றுலாவுக்குச் செல்வதுபோல கிளம்பிய இந்திய அணி கோப்பையோடு திரும்பியது. இன்னொரு முறை கோப்பையை வெல்ல நினைத்ததற்கு, கனவு மட்டுமே போதாது என்பது நிரூபணம் ஆகியிருக்கிறது. எது எப்படியோ, இப்போது கிடைத்திருக்கும் உபரி ஓய்வு நாட்களில் நிறைய விளம்பரப் படங்களில் நடிக்க அபார வாய்ப்பு!

**ச.ந.கண்ணன்**

● உ.குணசீலபாண்டியன்,

ராஜபாளையம்

? பெண்கள் இடஒதுக்கீடு மசோதா நிறைவேறினால் மாநிலக் கட்சிகள் அழியும் என்று லாலு பிரசாத் யாதவ் கருத்து கூறியிருக்கிறாரே?

! உள் ஒதுக்கீடு இல்லாததால், பெண்கள் இடஒதுக்கீடு மூலம் முற்பட்டவர்களின் செல்வாக்கு மறைமுகமாகக் கூடிவிடும் என்பதுதான் லாலுவுடைய பேச்சுக்கான 'கோனார்' உரை. ஆக மொத்தம், ஒதுக்கீடு என்றாலே மேலும் மேலும் ஒதுக்கீடு, மேலும் மேலும் குழப்பம்தான்.

● கே.தெய்வசிகாமணி,

சென்னை-82

? மது குடித்துவிட்டு வாகனம் ஓட்டுபவர்களை உடனே கைது செய்யலாம் என்று சென்னை ஹைகோர்ட் அறிவித்துள்ளது பற்றி?

! டாஸ்மாக்கில் குடித்துவிட்டு யாரும் வண்டி ஓட்டுவதில்லையாம்; வண்டியில் இருப்பவர்கள் வாங்கிக்கொண்டு, வீட்டுக்குத்தான் எடுத்துப் போகிறார்களாம் - அரசு அளித்த தகவல் இது. இது உண்மையானால், போலீஸ் யாரைக் கைது செய்வதாம்? உயர்நீதிமன்றம் யோசிக்க வேண்டாமோ?

● சி.சசிகலா தேவி, விருதுநகர்

? பாராளுமன்ற புதிய பெண் சபாநாயகர் திறமையாகச் செயல்பட இயலுமா? சபை கூச்சல்-குழப்பம் இன்றி, தடையின்றி இயங்குமா?

! அவரால் நிச்சயமாக திறமையாகச் செயல்பட முடியும். ஆனால், அவரைச் செயல்பட எம்.பி.க்கள் அனுமதிப்பார்களா என்பதுதான் சந்தேகம்.

● ச.ஆ.கேசவன்,

தூத்துக்குடி

? மறதி யாருக்கு நல்லது? யாருக்குக் கெட்டது?

! தவறு செய்தவனுக்கு 'மறதி' கெட்டது - திரும்பவும் அதே தவறைச் செய்யாமலிருக்க வேண்டும் என்பதால். எதிராளியின் தவறால் பாதிக்கப்பட்டவனுக்கு 'மறதி' நல்லது - பகைமை உணர்வு மனத்தில் தங்காமல் இருக்க.

● ஆர்.கே.லிங்கேசன்,

மேலகிருஷ்ணன்புதூர்

? ஆங்கிலப் படிப்பு மோகம் - (எல்.கே.ஜி., யு.கே.ஜி.) அதிகமாகி விட்டதே?

! ஐயா ராமதாஸின் பேத்தி பெயர் சமஸ்கிருதத்தில் இருக்கிறது. படிப்போ ஆங்கில வழியில் (CBSE) நடக்கிறது. தாய்மொழி, தமிழினம்... எல்லாம் உங்



## நீங்கள் கேட்டவை - தராசு

# புயலுக்குப் பெண் பெயர் ஏன்?



● செலவற்ற களவி



★ உணராத உண்மை



★ அளிக்கும் ஆறுதல்



★ திறமைக்குச் சவால்!



★ கைமேல் பலன்!

களுக்குத்தான். ஊருக்கு உபதேசம்தான்!

● அ.ராஜா ரஹ்மான், கம்பம்

***? பயங்கரவாதிகளை அடியோடு ஒழிக்கும் வரை பாகிஸ்தானுடன் எந்தவிதமான பேச்சு வார்த்தையும் நடத்தப்படமாட்டாது என்று வெளியுறவு அமைச்சர் கிருஷ்ணா சொல்கிறாரே?***

! வீட்டிலும் சரி, நாட்டிலும் சரி, பேச்சு வார்த்தைக்கு இறங்கி வராமல் எந்தப் பிரச்னையும் தீராது. கிருஷ்ணா இதை உணராது போனாலும் மன்மோகன் சிங் உணர்ந்து ருஷ்யாவில் ஜர்தாரியுடன் கை குலுக்கியிருப்பது ஆறுதல்.

● ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்

***? சோனியா வெளிநாட்டவர் என்ற பிரச்னையை எழுப்பியதற்காக சங்மா மன்னிப்பு கேட்டது..?***

! அதற்கான பலன்தான் கைமேல் கிடைத்து விட்டதே! அவர் மகள் மத்திய அமைச்சராகி உள்ளாரே, கவனிக்கலையா நீங்க?

● எம்.ஏ.பாஹுஷா, அய்யம்பேட்டை ★

***? நமக்கு வழங்கப்பட்டுள்ள வோட்டுரிமை வரமா? பண்டமாற்று வியாபாரமா?***

! வோட்டுரிமை, பஸ்மாசுரனுக்கு வழங்கப்பட்ட வரம் போன்றது. திறமையும் நேர்மையுமற்ற அரசியல்வாதியின் தலையில் கை வைத்து அவரது அதிகாரங்களைப் பொசுக்கிவிட முடியும். வோட்டுரிமையை துஷ்பிரயோகம் செய்தால் பஸ்மாசுரன் தன் தலையில் தானே கையை வைத்துக் கொண்டது போலாகிவிடும்.

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

***? துணை முதல்வரைக் குறைசொல்ல ராமதாசுக்கு என்ன அருகதை இருக்கிறது என்று ஆற்காடு வீராசாமி கேட்கிறாரே?***

! அவர் கேட்பதில் வீரமில்லை; அறியாமைதான் உள்ளது. பா.ம.க. நாடாளுமன்றத் தேர்தலில் தோல்வியைச் சந்தித்ததால் இந்நாட்டின் குடிமகன் ஒவ்வொருவனுக்கும் உள்ள அருகதை ராமதாசுக்கு இல்லாமல் போய்விடாது.

● எம்.எஸ்.கே.அருள், அரியலூர்







• ஒதுக்கீடு கவலை • அருவதை குறித்த அறியாமை • தொலைநோக்கு எச்சரிக்கை!

**? தமிழகத்தில் ஏற்படும் புயலுக்கு ரேஷ்மி, லைலா, பிரியா என்று பெண் பெயர் சூட்டுவது யார்? எதற்காக?**

! வானிலை ஆய்வு மைய அதிகாரிகள்தான். இதில் ஆணாதிக்கம் இருப்பதாக எண்ணாதீர்கள். பாரதியாரின் ஊழிக் கூத்தும் சக்தி பற்றிய இதர பாடல்களும் படித்துப் பார்த்தால், புயலுக்குப் பெண்கள் பெயர் சூட்டுவதில் தவறில்லை என்பது புரியும்.

**● பி.ஜெயபிரகாஷ், சர்கார்பதி**

**? சிக்கனமாக வாழக் கூடிய ஏழு இந்திய நகரங்களுள் ஒன்றாக சென்னை விளங்குகிறதாமே? சரியா ஸார்?**

! சிக்கனம் என்பது நமது செயல்பாடுகளைப் பொறுத்தே உள்ளது. வறட்டு கௌரவத்தை விட்டால் எங்கும் சிக்கனமாக வாழலாம்.

**● கே.வி.ராமன், சென்னை-73**

**? ஐ.சி.சி. இருபது ஓவர் போட்டியில் ஆஸி. அணி ஆரம்பத்திலேயே இரண்டு படுதோல்விகளைச் சந்தித்துள்ளதே?**

! பாராளுமன்றத் தேர்தல் முடிவுகளைப் போன்றுதான் டி-20 போட்டிகளும். யார் ஜெயிப்பாங்க, யார் தோற்பாங்கன்னு கணிக்கவே முடியலை. ஆஸ்திரேலியாவைத் தொடர்ந்து இந்தியாவும் அதிர்ச்சித் தோல்வி அடைந்து விட்டதே!

**● டி.முருகேசன், திருவாரூர்**

**? இனிமேல் நடைபெறும் தேர்தல்களில் ஒரு ரூபாய் கூட செலவு செய்யாமல் வெற்றி பெறுவோம் என்கிறாரே டாக்டர் ராமதாஸ்?**

! முன்னுதாரணமாகத் திகழ்ந்து செயல்பட்டால், மற்ற கட்சிகளும் பின்பற்ற வாய்ப்பு உண்டு. அரசியல் தூய்மைக்கு முதல் அடி எடுத்து வைத்ததாகவும் இருக்கும்.

**● என்.காளிதாஸ், சிதம்பரம்**

**? "இலங்கை ராணுவத் தளமாக கச்சத்தீவு மாறும் அபாயம் உள்ளது'' என டி.ராஜா எச்சரிக்கை விடுத்துள்ளாரே?**

! கவலைக்குரிய விஷயம்தான். தாரை வார்த்துவிட்ட பகுதி என்றாலும், நிச்சயமாக நாம் கவனம் செலுத்த வேண்டிய பகுதிதான்.

**● ஆ.கண்ணதாசன், சென்னை-87**

**? மற்ற மாநிலத்தவர்களை தமிழக மக்கள் தலையில் தூக்கிவைத்துக் கொண்டு ஆடுவது ஏன்? திருத்த என்ன வழி?**

! தமிழ்ப் பற்று ஆணிவேர்; தமிழகப் பற்று விழுதுகள்; பல்வேறு மாநிலங்களும் கிளைகள். விழுதுகளால்தான் இந்த மரமே நீடிக்கிறது. எதற்கு, யாரைத் திருத்துவது?

**● வி.எம்.செய்யதுபுகாரி, அதிராம்பட்டினம்**

**? பிரபாகரன் உயிருடன் இருப்பதாக 'நக்கீரன்' தொடர்ந்து செய்தி வெளியிடுகிறதே?**

! புதிய நேதாஜி; பழைய வியாபாரம்.

**❑ ரூ. 150/- பரிசு பெறுபவர்: கே.தெய்வசிகாமணி, சென்னை-82**

**★ ரூ.75/- பரிசு பெறுபவர்: எம்.ஏ.பாதுஷா, அய்யம்பேட்டை**

திரைவிமர்சனம்



# மஞ்சள் வெயில்

தன் தோழியின் காதலனைத் தேடிக் கண்டு பிடித்து, அவளோடு அவனைச் சேர்த்து வைத்து விட்டு, போராடி உயிர் துறக்கும் நண்பனின் கதை தான் 'மஞ்சள் வெயில்'. லூசு குண்டம்மா - காயத்ரியாக சந்தியா, காயத்ரியின் நண்பனாக விஜய் கதாபாத்திரத்தில் பிரசன்னா, காமெடி ரவுடியாக எப்போதும் டாடாசுமோவில் காதலர்களைத் துரத்திக் கொண்டிருக்கும் ஆர்.கே. என இவர்களைச் சுற்றியே படத்தின் பெரும்பகுதி நகர்கிறது.

சந்தியாவின் அக்காவான தாரிகாவுக்கு, ஆர்.கே.வை மணம் முடிக்க ஏற்பாடு நடக்கிறது. திருமணத்துக்கு வரும் சந்தியா மீது மோகம் கொண்டு, அக்காவை விட்டுவிட்டு தங்கையை மணந்துகொள்ள சூழ்ச்சி செய்கிறார் ஆர்.கே. இவரிடமிருந்து தப்பித்து, நண்பனோடு சேர்ந்து தன் காதலனான பாலாவை, சந்தியா எவ்வாறு கரம் பிடிக்கிறார் என்பதே மீதிக்கதை.

கல்லூரியில் மாணவர்கள் செல்ஃபோன் வைத்துக் கொண்டு எம்.எஸ்.பாஸ்கரை வாட்டியெடுக்கும் காட்சிகள் ரசிக்க வைக்கின்றன. ''அப்பாவி மாதிரி முகம் வைச்சுக்கிட்டு 'அஞ்சாதே' பட வில்லன் வேலையா செய்யுற...'' என ஆங்காங்கே வசனங்களைத் தூவி யிருக்கிறார் இயக்குநர். நட்புக்காக கிரிக்கெட் மட்டையால் கோயில் பெல்லை அடித்து சந்தியாவின் காதலைச் சேர்த்து வைத்து கைத்தட்டு வாங்குகிறார் பிரசன்னா.

ஒளிப்பதிவு சுமார் ரகம். 'உனக்காகவே வாழ்கிறேன்...' பரத்வாஜின் குரலில் கேட்கும்படி உள்ளது. மற்றபடி அழுத்தமான கதையை, வலுவான திரைக்கதை கொண்டு அமைக்காமல் இயக்குநர் விட்டுவிட்டதால் ஊட்டி ரயில் மாதிரி படம் மெதுவாகவே நகர்கிறது. மஞ்சள் வெயில் - மாலை நேரத்து மயக்கம்!

- கிராபியென் ப்ளாக்

● **த.சத்தியநாராயணன், அயன்புரம்**

**ஷீரடி சென்று பாபாவை தரிசித்ததுண்டா?**

ஹேமபந்த் அவர்கள் மராட்டியில் எழுதி, சொக்கலிங்கம் சுப்ரமணியன் அவர்களால் தமிழாக்கம் செய்யப்பட்ட ''ஸ்ரீ சாயி சத்சரித்திரத்தில்'' ஒரடி படிக்க ஷீரடி நாதரின் நேரடி தரிசனம்.

● **வாசுதேவன், அயிரோலி**

**மல்லிகைப் பூவுக்கு மட்டும் ஏன் தனி அட்ராக்ஷன்?**

கடவுளை யோசித்தபடி மல்லியை வாங்கினால், மனத்தில் பக்தி மணம் கமழ ஆசுவாசம் வீசும். மனைவியை யோசித்தபடி வாங்கினால், இல்லற விசுவாசம் வீசும். காதலியை யோசித்தபடி வாங்கினால், அவளின் சுவாசம் வீசும். ஒன்றுமே யோசிக்காமல் வாங்கினால், சாவாசமாய் வீசும். இப்படி யோசனைக்கு ஏற்ற வாசனை மல்லிகைப் பூவுக்குத்தான் உண்டு.

● **ஆர்.கோபாலன், மேற்கு மாம்பலம்**

**திருமணத்துக்கு முன்பு நீங்கள் L.B.W வில் (LOVE BEFORE WEDDING) அவுட் ஆனதுண்டா....?**

திருமணத்துக்கு முன்பு நான் Twelfth man. இப்போ Third umpire. மற்றவர்கள் காதலிப்பதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறேன்!

● **இ.ரங்கசாமி, ஸ்ரீரங்கம்**

**தமிழில் பெரியவர்களுக்கு சின்ன 'ர' போடுகிறோம்; சிறுவர்களுக்கு பெரிய 'ற' போடுகிறோம். இது என்ன நியாயம்?**

அப்படிப் பார்த்தால் கேள்விக்கு அழுத்தமா 'ள்' போடுகிறோம். மாஞ்சு மாஞ்சு சொல்லும் பதிலுக்கு லேசா 'ல்' போடுகிறோம். சோ, திருப்பூர் கிருஷ்ணன், அரசு, மதன், அந்துமணி சார்பாக அடியேன் கேட்கிறேன்; ''இது மட்டும் சரியா? நீங்களே நியாயத் 'தராசு'ல வச்சுப் பாருங்க!''

● **லலிதா செல்லப்பா, பம்மல்**

**திருமணங்கள் 'சொர்க்கத்தில்' முடிவாகின்றன... விவாகரத்து எங்கு முடிவாகின்றது...?**

முடிவில்லாத 'தர்க்கத்தில்' முடிவாகிறது.

● **குமரேசன், திருவொற்றியூர்**

**தொலைந்து போனதுண்டா?**

தினமும் தூக்கத்தில் தொலைந்துதான் போகிறோம்; எழுப்பித் தொலைத்து விடுகிறார்களே!

● **அனன்யா, திருச்சி**

**'கர்வம்' தலைக்கு ஏறாமல் இருக்க என்ன செய்ய வேண்டும்?**

தலையைப் பிய்த்துக் கொண்டாவது சொட்டை ஆகுங்கள். வழுக்கைத் தலையில் 'கர்வம்' ஏற கஷ்டப்படும்....!

● **எம்.மிக்கேல் ராஜ், சாத்தூர்**

**விதியை மதியால் வெல்ல முடியுமா?**

மதியின் வளர் பிறையில், விதி தோற்கும். மதியின் தேய் பிறையில், விதி ஜெயிக்கும். பதி-பசு-பாசம் என்பார் திருமூலர். இதில் மதிதான் பசு, பாசம்தான் விதி. எப்போதும் பௌர்ணமியாக இருக்க, பதியை நம்புங்கள்.

● **நப்பின்னை சுந்தரராஜன், பெங்களூர்**

**ஒப்பிடுக... புத்தகம் படிப்பது... புத்தகம் எழுதுவது...?**

எம் அனுபவத்தில் புத்தகம் படிப்பது யாம். புத்தகம் எழுதுவது 'யாமொன்றும் அறியேன் பராபரமே'.... ○

சென்ற ஆண்டைவிட நடப்பு கல்வி ஆண்டுக்கு (2009 - 2010) ரூ.1,10,000 அதிகரித்து, ரூ.4,10,000/- உதவித் தொகைகளாக பின்வருமாறு விநியோகமாகும்.

* ஒருவருக்கு ரூ.5,000/- வீதம், பத்து பட்ட மேற்படிப்பு அல்லது ஆராய்ச்சி மாணவர்களுக்கு ரூ.50,000/-.
* ஒருவருக்கு ரூ.2,500/- வீதம், 70 பட்டப் படிப்பு மாணவர்களுக்கு ரூ.1,75,000/-.
* ஒருவருக்கு ரூ.2000/- வீதம், 80 மேல் நிலைப்பள்ளி அல்லது பாலிடெக்னிக் மாணவர்களுக்கு ரூ.1,60,000/-.
* ஒருவருக்கு ரூ.5000/- வீதம் சிறப்புக் கல்விப் பயிற்சி தேவைப் படும் ஸ்பாஸ்டிக், டிஸ்லெக்ஸிக், ஆட்டிஸ்டிக் போன்ற பாதிப்புக்கு உட்பட்ட மாணவர்கள் ஐந்து பேருக்கு ரூ.25,000/-.
* இவற்றுள் அமரர் கல்கி படித்த மூன்று பள்ளிகளில் மூன்று மேல்நிலை மாணவர்களுக்கு மூன்று உதவித் தொகைகள் ஒதுக்கப்படுகின்றன. மீதமுள்ள உதவித் தொகைகளைப் பெற மாணவ மாணவியர் விண்ணப்பிக்கலாம்.

**முக்கிய நிபந்தனைகள் :**

- விண்ணப்பங்களை மாணவர்கள் தங்கள் கைப்பட ஒரு கடிதம் வடிவில் எழுத வேண்டும். தட்டச்சு, கம்ப்யூட்டர் கடிதங்கள் நிராகரிக்கப்படும். பார்வையற்ற மாணவர்கள், பிறர் எழுதித்தர கைநாட்டு பதிக்கலாம். சிறப்புக் கல்விப் பயிற்சி தேவைப்படும் (ஸ்பாஸ்டிக் போன்ற) மாணவர்கள் சார்பில் பெற்றோர் விண்ணப்பிக்கலாம்.
- விண்ணப்பத்துடன் பின்வரும் அம்சங்களை உறுதி செய்து, கல்வி நிலையத்தின் முதல்வருடைய முத்திரை, கைெயழுத்துடன் சான்றிதழ் தேவை.

(அ) அரசு அங்கீகாரம் பெற்ற கல்வி நிலையத்தில் சேர்ந்து படிக்க அனுமதி பெற்றுள்ளது குறித்து (தாற்காலிக அனுமதி செல்லாது).

(ஆ) படிப்பில் சிறந்து விளங்கி, பொருளாதாரத்தில் பின்தங்கிய குடும்பத்தைச் சேர்ந்த மாணவர் / மாணவி என உறுதியளித்து.

(இ) உடல் ஊனமுற்றவர் எனில் அது பற்றிய விவரம்.

(ஈ) சென்ற ஆண்டின் இறுதித் தேர்வில் பெற்ற மதிப்பெண் பட்டியலின் ஜெராக்ஸ் நகல் - முதல்வரின் முத்திரை, கையெழுத்துடன்.

தபால் மூலம் மட்டுமே விண்ணப்பங்களை அனுப்பவும். கூரியர் கூடாது. நிபந்தனைகளைப் பூர்த்தி செய்யாத விண்ணப்பங்கள் நிராகரிக்கப்படும். தேவையற்ற சான்றிதழ்களை அனுப்புதல் விண்ணப்பதாரருக்குப் பின்னடைவாகி விடும்.

தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு விவரம் தெரிவிக்கப்படும். மற்றபடி கடிதப் போக்குவரத்து ஏதும் கிடையாது. சான்றிதழ்கள் / நகல்கள் திருப்பி அனுப்ப இயலாது.

உதவித் தொகை பெற தகுதி உடையவர்களைத் தேர்வு செய்வதில் அறங்காவலர்களின் முடிவே இறுதியானது.

***விண்ணப்பங்களை அனுப்ப வேண்டிய முகவரி:***

**நிர்வாக அறங்காவலர்,**
**கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை,**
புது எண் 14, நான்காவது பிரதான சாலை,
கஸ்தூர்பா நகர், அடையாறு,
சென்னை - 600 020.

**விண்ணப்பங்கள் வந்து சேரக் கடைசி தேதி: ஜூலை 31, 2009**



# கல்கி



2009 ஜூன் 28
விரோதி ஆனி 14
மலர் : 67
இதழ் : 48

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## நாளொரு ராஜினாமா நாடகம்!

**நா**ளொரு குற்றச்சாட்டும் பொழுதொரு ராஜினாமாவுமாக பா.ஜ.க. இப்படி குழாயடி சண்டையில் ஈடுபடும் என்று அக்கட்சியின் எதிர்ப்பாளர்கள்கூட கருதியிருக்க மாட்டார்கள்! ஆர்.எஸ்.எஸ். அமைப்பின் ஒழுங்கும் கட்டுப்பாடும் பா.ஜ.க. என்ற அரசியல் கட்சியையும் நிர்வகிக்கும் என்கிற எதிர்பார்ப்பு தவிடுபொடியாகியிருக்கிறது! ஆர்.எஸ்.எஸ்.ஸின் ஹிந்துத்வா கொள்கையைப் பற்றிக்கொண்ட அளவுக்கு, அவ்வமைப்பின் கட்டுப்பாடு நெறிமுறைகளை பா.ஜ.க. கடைப்பிடிக்கவில்லை! இதை பா.ஜ.க. ஏற்றிருந்தால், இன்றைய கேலிக்கூத்தான சூழல் உருவாகியிருக்காது!

'தேர்தல் தோல்விக்குக் காரணங்கள் என்ன? கொள்கையில் என்ன தவறுகள்? கட்சி நடைமுறையில் எங்கெங்கே ஓட்டைகள்?' என்று ஆராய்வதற்குப் பதிலாக, பா.ஜ.க.வின் முன்னணித் தலைவர்கள், 'தோல்விக்கு யார் பொறுப்பு?' என்று கேட்டு பரஸ்பரம் சிறுபிள்ளைத்தனமாகத் தனி நபர் விமர்சனம் செய்து, குற்றம் சாட்டிக் கொள்கிறார்கள்; தொடர்ந்து ராஜினாமா செய்கிறார்கள்!

ராஜினாமா நாடகத்தை ஆரம்பித்து வைத்தவர் அத்வானிதான்! உண்மையிலேயே தோல்விக்கு தார்மிகப் பொறுப்பு ஏற்று அவர் ராஜினாமா செய்திருப்பின், சகாக்களின் அழுத்தத்துக்குப் பணிந்து ராஜினாமாவை வாபஸ் பெற்றிருக்கக் கூடாது!

அருண் ஜேட்லிக்கு மாநிலங்களவை பா.ஜ.க. தலைவர் பொறுப்பு தரப்பட்டதால் யஷ்வந்த் சின்ஹா ராஜினாமா; ஜஸ்வந்த் சிங், யஷ்வந்த் சின்ஹா முதலானோர் குற்றம் சாட்டியதால் கட்சியின்




பொதுச் செயலாளர் பொறுப்பிலிருந்து அருண் ஜேட்லி விலகல் என நாடகம் தொடர்வது கட்சியை வலிமை இழக்கச் செய்யும். இது பா.ஜ.க.வுக்கு மட்டுமின்றி நாட்டுக்கும் நல்லதல்ல.

அத்வானிக்குப் பிறகு பா.ஜ.க. தலைமையை யார் ஏற்பது என்கிற போட்டியே இந்த நாடகத்துக்கு அடிப்படைக் காரணம். உண்மையிலேயே அத்வானி ஓய்வுபெற விரும்பினால், அதற்கான காலக் கெடுவை நிர்ணயித்து, அதற்குள் கட்சி பலம் பெற்று மாற்றுத் தலைவர் உருவாவதற்கு அவரே வழி வகுக்கவேண்டும். தலைவர், செயற்குழு உறுப்பினர், மாநிலங்களவை கட்சித் தலைவர் என்று எந்தப் பொறுப்புக்கும் நியமனங்களை அனுமதிக்காமல், முறையாகத் தேர்தல் நடத்தி அப்பொறுப்புகளை நிரப்ப அத்வானி வழிவகுக்க வேண்டும்.

உட்கட்சி ஜனநாயகம் உதவுகிற அளவுக்கு எந்தவொரு தனித் தலைவரின் ஆளுமையும் எந்த ஓர் அரசியல் கட்சிக்கும் உதவாது. பா.ஜ.க. இதற்கு விதிவிலக்கல்ல.

வேறு சில கட்சிகளைப் போலன்றி, தேர்தல் தோல்வியைத் தொடர்ந்து பா.ஜ.க.வின் தலைவர்கள் தோல்விக்கான காரணங்களை ஆராயத் தொடங்கியிருப்பதை வரவேற்கத்தான் வேண்டும். பா.ம.க.விலோ தே.மு.தி.க.விலோ இத்தகைய சலசலப்புகள் அறவே இல்லை என்பது ஆரோக்கியமானதல்ல. ஆயினும், பா.ஜ.க.வினரிடையே நிலவும் சலசலப்பு வெறும் தனிநபர் தாக்குதலாக அன்றி, ஆத்ம பரிசோதனையாகவும் கொள்கைகளின் மறுபரிசீலனையாகவும் உருமாற வேண்டும். ஹிந்துத்வா, வன்முறை பேச்சு, பிறமத துவேஷம் இவை எவ்வளவு தூரம் வெற்றி வாய்ப்புகளைப் பறித்திருக்கின்றன என்று அலசி, மாற்றுப் பொருளாதாரக் கொள்கை உருவாக வேண்டும். நாடாளுமன்றத்தில் வெறும் கூச்சல் போடாமல் ஆக்கபூர்வமான எதிர்க்கட்சியாகச் செயல்பட திட்டம் வேண்டும். அடுத்த தேர்தலுக்குள் கட்சியைப் பலப்படுத்தி, வெற்றிபெற வியூகமும் வகுக்கவேண்டும். அத்வானியின் தலைமையில் பா.ஜ.க. முன்னணித் தலைவர்கள் இந்த இலக்குகள் நோக்கி, தங்கள் சக்தியையும் சிந்தனையையும் செலுத்துவதே நல்லது. ●

# வட்டமேஜை

**வா**சகர்களைக் கொண்டே திருவாரூர், நாகை மாவட்ட ஸ்பெஷலைத் தயாரிக்கச் செய்து, எங்களைக் கௌரவித்த 'கல்கி'க்கு திருவாரூர் மாவட்ட வாசகர்கள் சார்பாக ஒரு 'ராயல் சல்யூட்!' - **ஆர். ராம்சுப்ரமணி, திருவாரூர்** ✉ திருவாரூர் - நாகை மாவட்ட ஸ்பெஷலில் இடம் பெற்ற 'துக்கடா நியூஸ்' பதினொன்றும் சுவையான பக்கோடா! - **கே. வர்ஷினி, முனியங்குறிச்சி** ✉ மனித நேயத்தோடு உதவிகள் செய்து வரும் 'ஹைடெக்' கணேசனின் எதிர்கால ஆசைகள் நிறைவேறட்டும். - **எஸ். சங்கர், திருப்பரங்குன்றம்** ✉ முற்கால நிகழ்வுகளை மறுபதிப்பிட்டு... கலைஞர் கருணாநிதியோடு பின்னிப் பிணைந்திருந்த நட்பை, திருவாரூர் தென்னன், திருகாணிபோல் சுழற்றி நெஞ்சில் சொருகியுள்ளார்! - **எஸ். ஆதிகேசவன், குருமலை** ✉ தன் உடலை வருத்தி நடித்திருக்கும் ஜெயம் ரவியின் 'பேராண்மை' ஜெயிக்கட்டும். இயக்குநர் ஜனநாதனின் தேசியப் பார்வை பேசப்படட்டும். - **கே. சுபாக்கனி, மேலகிருஷ்ணன்புதூர்** ✉ ஏதாவது ஒரு போட்டியை வைத்து வாசகர்களை மகிழ்ச்சிக் கடலில் மூழ்கடிக்கக்கிட்டே இருக்கீங்களே... ப்ளீஸ் கன்டினியூ...! - **எம். மிக்கேல்ராஜ், சாத்தூர்** ✉ 'பிரிமனை எறும்புகள்' சிறுகதை, திருவாரூர் - நாகை மாவட்ட ஸ்பெஷலுக்கு கிரீடமாக அமைந்தது. - **ஜி. கீர்த்தனா, நெய்வேலி - 1** ✉ கல்கி ராஜேந்திரன், எப்படி பலருக்கு பலவிதங்களில் மரணங்கள் ஏற்படுகின்றன என்பதை ஒருவித உணர்ச்சிப் பெருக்குடன் விவரித்து இருக்கிறார். - **ஜே. துரைராஜ், சென்னை - 87** ✉ அல்கைதா அமைப்பை ரஷ்யாவுக்கு எதிராக ஊக்குவித்த அமெரிக்காவுக்கு 'அல்கைதா'வாலேயே தலைவலி. (தலையங்கம்) சும்மாவா சொன்னார்கள் யானைப் பாகனுக்கு யானையாலேயே மரணம் என்று! - **எஸ்.பிரவீண் சங்கர், சென்னை- 53** ✉ ஆசை என்பது வாங்கல்; அன்பு என்பது கொடுக்கல் என்ற காஞ்சி மகா பெரியவரின் அருள்வாக்கு அமுதவாக்காகும். - **எஸ். முரளி, ஸ்ரீரங்கம்** ✉ பெண்கள் அணியக் கூடாதது - சூர்ப்ப 'நகை' எனக் கூறி... கூலி - சேதாரமில்லாத பெருநகையை வரவழைத்து விட்டார், கிரேஸி! - **ச.ஆ. கேசவன், கோவில்பட்டி-2** ✉ இந்தியாவிலேயே முதன்முதலில் அச்சுக்கூடம் நிறுவப்பட்டது (1718) தரங்கம்பாடியில் என்று கல்கி 21.06.2009 இதழில் வெளியாகியுள்ளது. அதற்கு முன்னரே கோவாவில் 1556ல் ஜோஹன்ஸ் கூடன்பர்க் என்பவரால் நிறுவப்பட்டு விட்டது - சி.நாச்சிமுத்து, ஈரோடு




---

**'ப்ளாக் அண்ட் வொய்ட்' கதை அடுத்த இதழில்...**

திருவாரூர், நாகை மாவட்டச் செய்திகள்:
**கதிர்பாரதி, ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

## அருள்வாக்கு

# தக்ஷிண மேரு விடங்கர்!



ஸப்த விடங்கர்கள் இருந்தாலும், 'விடங்கர்' என்ற மாத்திரத்தில் திருவாரூர் தியாகராஜாவின் நினைவுதான் வரும். சோழ ராஜாக்களுக்கு ஆதியில் தலைநகராயிருந்தது திருவாரூர்தான். மனுநீதிச் சோழன் தன் பிள்ளையைத் தேர்க்காலில் பலிகொடுக்கப் போனது திருவாரூரில்தான் என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். அதனால், ராஜராஜன் தான் புதுசாக, மஹா பெரிசாக ஒரு கோயில் கட்டினபோது தன் குல மூதாதைகளையும், குலதெய்வத்தையும் நினைவுகொண்டு, மற்றவர்களும் அவர்களை நினைக்கப் பண்ண வேண்டும் என்றே 'தக்ஷிண மேரு விடங்கர்' என்று ஸோமாஸ்கந்தருக்குப் பேர் வைத்தான்.

சிவாலயங்களில் இரண்டு ராஜாக்கள் முக்கியம். ஒன்று நடராஜா, மற்றது தியாகராஜா என்கிற ஸோமாஸ்கந்தர். தன் பேரிலேயே இரண்டு ராஜாக்களைக் கொண்டிருந்த ராஜராஜனுக்கு, இந்த இரண்டு ராஜாக்களிடமும் தனியான ஈடுபாடு! அதனால் ராஜராஜேச்வரத்தில் அந்த இருவருக்கும் தனியாக ஒவ்வொரு பேர் கொடுத்துச் சிறப்புச் செய்தான். தக்ஷிண மேரு என்று எந்த பிரம்மாண்ட விமானத்துக்குப் பேர் வைத்தானோ அதன் சொந்தக்காரரே இந்த ஸோமாஸ்கந்தர்தான் என்று த்வனிக்கும் படியாக அவருக்கு 'தக்ஷிண மேரு விடங்கர்' என்று பெயரிட்டான்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

# நல்லா பாத்துக்கங்க நானும் மந்திரிதான்



(நடிகர் வடிவேலு, சிங்கமுத்து, முத்துக்காளை, போண்டாமணி ஆகியோர் ஒரு கோயில் வாசலில் சிதறுதேங்காய் சாப்பிட்டபடி அமர்ந்திருக்கின்றனர்)

**வடிவேலு:** ஏன்டா... போண்டா... இப்படி காலம்பூரா சிதறுதேங்காய் தின்னுக்கிட்டே செத்துடவேண்டியது தானா?

**போண்டாமணி:** கவலைப்படாதீங் கண்ணே... நீங்க பெரிய ஆளா வரு வீங்கன்னு உங்க கண்ணுல ஓடுற காந்த ரேகை சொல்லுது.

**வடிவேலு:** அப்படியாடா... இந்தா இந்த தேங்காத் துண்டையும் நீயே சாப்பிடு.

**சிங்கமுத்து:**(கோபத்துடன்) ஹலோ... இப்படி... முறைவாசல் செய்றவனுக்கு ஓசியில தேங்கா கொடுத்தா கம்பெனி எப்படி விருத்தியாவும்? நான் எப்படி த்ரிஷாவைக் கல்யாணம் பண்ணிக்கறது?

**வடிவேலு:** என்னாது... த்ரிஷாவா?... கல்யாணமா?... டேய் நான் இன்னைக்கு கேவலமா தேங்காய் பொறுக்க காரணமே அந்த த்ரிஷாதான்டா. எல்லாம் அந்த மயில்சாமி பண்ணின வேலை தான். அவனை எங்க கண்டாலும் கொர வலையக் கடிச்சுத் துப் பாம விடமாட்டேன்டா..

**முத்துக்காளை:** அண்ணே தேங்காய் பொறுக்கறதை கேவலமாப் பேசாதீங்க... 'அமைதிப்படை' படத்துல சத்யராஜ் உங்கள மாதிரி பொறுக்கித் தின்னவர்தான் மினிஸ்டர் ஆகலையா?

**போண்டாமணி:** அதே மாதிரி உங் களை மந்திரியா மாத்திக் காட்டறோம். இது இந்த தேங்கா பத்தை மேல சத்தியம்.

**சிங்கமுத்து:** அதுக்கு முதல்ல பணம் சம்பாதிக்கணும். பள்ளிக்கூடம் கட் டணும். இல்லேன்னா சாமியாராகணும். பேசாம நீங்க சாமியாரா ஆயிடுங்க. காவி வேட்டி, கமண்டலம் இருந்தா மட்டும் போதும்.

**முத்துக்காளை:** முதல்ல சாமியாருக்குப் பேரு வைக்கணும். கையேந்தி சாமியார்... எப்படியிருக்கு?

**வடிவேலு:** வேணாண்டா கையேந்திகிட்டே இருக்கணும். கௌரவமா ஒரு பேர் வைங்கடா.

**சிங்கமுத்து:** குந்தி சாமியார். பப்பரக்கான்னு உட்கார்ந்திருந்தா போதும்... மத்ததை நாங்க பாத்துக்கறோம்.

*(அப்போது போண்டாமணி*



*மல்லாக்கப் படுத்துக் கொண்டு மரத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருக்கிறார்)*

**வடிவேலு:** டேய்... ஐடியா கொடுக்கச் சொன்னா மரத்துக்கு எதுக்குடா மந்திரம் போட்டுக்கிட்டு இருக்கே?

**போண்டாமணி:** அண்ணே... சாமி யாராகி மந்திரியாவறது ஊரைச் சுத்தி வூட்டுக்குள்ள வர்ற மாதிரி... அதனால எலும்பும் தோலுமா இருக்கிற ஊராட்சி, ஒன்றியப் பதவியில இருக்கிற ஆளை அடிச்சிங்கன்னா அந்தக் கட்சியிலயே உங்களைச் சேர்த்து பதவி கொடுப்பாங்க.

**வடிவேலு :** கேக்க நல்லாதான்டா இருக்கு. ஆனா என்னைவிட ஏப்ப சாப்பைக்கு எங்கடா போறது?

**சிங்கமுத்து :** எனக்குத் தெரிஞ்ச ஒரு பையன் இருக்கான்... மகாநதி சங்கர்னு. அவனைக் கூப்பிட்டா...?

**வடிவேலு :** யாரு... என்னை மூத்திரசந்துல மூணு நாளு வெச்சு அடிச்சானே அவனா...யோவ்... நல்லா இருக்குய்யா உன் வொர்க்கு... இப்படியே மெயின்டெய்ன் பண்ணு.

**முத்துக்காளை :** இல்லேன்னா கட்ட துரைன்னு என் பங்காளி ஒருத்தன்.

**வடிவேலு :** *(முறைத்தபடி)* நிப்பாட்டு... அவங்கக்கா மககிட்ட நான் ஒரண்டை இழுத்து, காலு கைய உடைச்சது போதும். நாளைக்கு சாகப்போறவன இன்னைக்குக் கொண்டாங்கடான்னா... என்ன பேச்சு... ராஸ்கல்...

*(அப்போது ஈரத் துண்டு போல நோஞ்சான் ஒருவனைக் கூட்டிவருகிறார் போண்டாமணி)*

**போண்டாமணி:** அண்ணே... இவன் குளிர்ல குப்புறப் படுத்திருந்தான் டப்புன்னு தட்டி டகால்னு தூக்கிட்டு

**உத்தமபுத்திரன்**



**“நல்லா இருக்குய்யா உன் வொர்க்கு... இப்படியே மெயின்டெய்ன் பண்ணு”**

வந்துட்டேன். சொந்த ஊர் மதுரையாம். ஒன்றியமான்னு கேட்டேன்... ஆமான்னான்... இவன்கிட்ட உங்க வெறியக் காட்டுங்க.

**வடிவேலு :** மதுரைன்னா... நம்ம ஊருக்காரனா இருக்கானேடா... அடிக்கலாமா?

**சிங்கமுத்து :** ஊராவது... ரோவது... நீங்க பேர் வாங்கி மந்திரி ஆவறதுதான் முக்கியம். கண்ண மூடிக்கிட்டு மூக்குல நச்சு... நச்சுன்னு குத்துங்க.

**வடிவேலு :** கண்ணு முழிக்கட்டும்... பாவம் அசந்து தூங்கறான். போதைல வேற இருக்கான்டா...

**போண்டா மணி :** அப்போ... இன்னும் வசதியாப் போச்சு. உடாதீங்க.

*(என்றதும் வடிவேலு படுத்திருக்கும் அவனை பல்டி அடித்து, பறந்து... பறந்து வந்து உதைக்கிறார். அவன் மூக்கில், வாயில் ரத்தம் சொட்டச் சொட்ட எழுந்து நிற்கிறான்.)*

**போதை ஆசாமி :** எக்ஸ்க்யூஸ் மீ.. யார்ட்டயாவது செல்ஃபோன் இருந்தா கொடுங்க... எங்க அண்ணனுக்கு ஃபோன் பண்ணிக்கறேன்.

**வடிவேலு:** கட்சியில இவனே பேசி பதவி வாங்கித்தரப் போறான்னு நெனைக்கிறேன். போண்டா உன் செல்லைக் கொடு.

**போதை ஆசாமி:** *(செல்லில்)* அழகிரி அண்ணே... எதிர்க்கட்சிக்காரன் எலெக்‌ஷன்ல வோட்டுப் போடலேன்னு என்னை குமுறு குமுறுன்னு கும்மிட்டாண்ணே... ஆறு ஆட்டோவுல ஆளை அனுப்புங்கண்ணே.

**வடிவேலு :** *(பதறியபடி)* ஐயய்யோ கோத்துவிடறதுலயே குறியா இருக்கீங்களேடா... யாரு ஆளுமேலடா கைய வைக்கச் சொன்னீங்க... சங்கத்தைக் கலைங்கடா...

*(என்றபடி தலைதெறிக்க விழுந்தடித்து ஓடுகிறார் வடிவேலு)*

**தமிழ்நாட்டிலேயே**

முதன் முதலில் விவசாயிகளுக்கென சங்கம் நிறுவப்பட்ட இடம் திருவாரூர் மாவட்டத்திலுள்ள ‘தென்பரை’யில்தான். இக்கிராமம் மன்னார்குடி அருகே அமைந்துள்ளது. விவசாயிகளின் சங்கத்தை நிறுவிய சீனிவாசராவ் நினைவிடம் திருத்துறைப்பூண்டி நகரில் அமைந்துள்ளது. தற்சமயம் அரசு சார்பில் அவருக்கு மணிமண்டபம் கட்டும் முயற்சி நடைபெற்று வருகிறது.

– மா.மீனா சுந்தர்,
மன்னார்குடி.



**துக்கடா நியூஸ்**




தொண்டாமுத்தூர், இளையாங்குடி, பர்கூர், கம்பம் ஆகிய தொகுதிகளில் நடக்கும் இடைத் தேர்தல்களில் போட்டி யிடுவதா, வேண்டாமா என்ற சிந்தனையில் ஜெயலலிதா மூழ்கியிருப்பதாகச் சொல்கிறார்கள் அ.தி.மு.க. பிரமுகர்கள். ''பாராளுமன்றத் தேர்தலின்போதே, பணமும் அதிகாரமும் அதிரடி ஆட்டம் ஆடியபோது இடைத்தேர்தல்களில் ஆளும்கட்சி எப்படி நடந்து கொள்ளும் என்பது தெரிந்ததுதானே'' என்கிறார் அ.தி.மு.க. சீனியர் தலைவர். தி.மு.க.வுக்கு ஒரு அதிர்ச்சி கொடுக்கும் வகையில், 'தே.மு.தி.க.வுடன் இடைத் தேர்தலில் தொகுதி உடன்பாடு கண்டால் என்ன?' என்ற சிந்தனையும் அ.தி.மு.க. பிரமுகர்களிடையே இருக்கிறது. கொடநாட்டில் இருக்கும் ஜெயலலிதா எல்லா யோசனைகளையும் பரிசீலிக்கிறார். ''இனி 2011ல்தான் தேர்தல். இடையில் எதிர்பாராத சம்பவங்கள் நடந்தால் மட்டுமே தமிழக அரசியல் பரபரப்பாய் இருக்கும். எனவே, தற்காலிகமான ஏற்பாடாக அ.தி.மு.க.வுடன் தொகுதி உடன்பாடு கண்டு தி.மு.க.வை ஒன்றிரண்டு தொகுதிகளில் தோற்கடித்தாலும் அதிர்ச்சி வைத்தியம்தானே'' என்கிறார்கள் தே.மு.தி.க. பிரமுகர்கள்.

## புதுசா ஒரு உடன்பாடு!





பகுஜன் சமாஜ் கட்சி பாராளுமன்றத் தேர்தலில் தமிழகத்தின் எதிர்பார்த்த வாக்குகளைப் பெற முடியாமல் டெபாஸிட்டைப் பறிகொடுக்கும் நிலை ஏற்பட்டது. உத்தரப்பிரதேசத்திலிருந்து பிரச்னையில்லாமல் தேர்தல் செலவுக்குப் பணம் அனுப்பிய மாயாவதி, ''இனி ஆறு மாதம் யாரும் பத்திரிகையாளர்களிடம் பேசக் கூடாது. ஒன்றிய, மாவட்ட அளவில் ஊழியர்களைக் கூட்டி கூட்டம் போட்டு கட்சியை வளர்ப்பதில் இறங்குங்கள்'' என்று கட்டளையிட்டு விட்டார். இதற்கிடையில் தொங்கலில் இருக்கும் செல்வப் பெருந்தகையின் ராஜினாமாவை சபாநாயகர் உடனடியாக ஏற்றுக்கொள்ளக் கூடும் என்கிறார்கள். இவரது மங்களூர் தொகுதி காலியானால் அதையும் சேர்த்து, ஐந்து தொகுதி இடைத்தேர்தல்களிலும் வெற்றி பெற்று தமது சட்டமன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கையை ஏற்றுவதே தி.மு.க.வின் உடனடி அஜண்டா.

– ஸ்ரீநி

மாண்புமிகு தமிழக முதல்வர் கலைஞர் கருணாநிதி குடும்பத்தோடு புது தில்லி சென்று முகாமிட்டு, இத்தனை மந்திரி பதவிகள் வேண்டும் என்று 'லிஸ்ட்' கொடுக்க, அது முழுமையாக ஏற்கப்படாதபோது கோபித்துக்கொண்டு, ''வெளியிலிருந்து ஆதரவு'' என்று முடிவெடுத்து சென்னை திரும்பினார் அல்லவா? அப்போது எனக்கு ரசிகமணி டி.கே.சி.யின் வாழ்க்கைத் துணைவியார் நினைவு வந்தது.

குற்றாலத்தில் ரசிகமணியின் விருந்தோம்பலை அனுபவித்துக் கொண்டு கல்கி குடும்பம் தங்கியிருந்தது. ரசிகமணியைச் சந்தித்து அளவளாவ ஏராள நண்பர்கள் நாள்தோறும் வந்து போவார்கள். எல்லோருக்கும் வேளா வேளைக்கு உணவு தயாராக இருக்கும். இதற்கென்றே சங்கரன், ஐயா என்று இரண்டு சமையல் கலைஞர்களை நியமித்திருந்தார் ரசிகமணி. ஒருநாள் மதிய உணவுக்காக நான்கு பந்திகளில் எல்லோரும் உட்கார்ந்திருந்தோம். சங்கரன் ஒரு சட்டி நிறைய புட்டு எடுத்து வந்தார். ஆறேழு வயது சிறுவனாகிய என் இலையில் சிறிதளவு பரிமாறிவிட்டு அடுத்த இலைக்குப் போனார். நான், ''இன்னும் கொஞ்சம் போடு'' என்றேன். சங்கரன் புன்னகையுடன் மேலும் ஓர் அரை கரண்டி பரிமாறினார். ''இன்னும் கொஞ்சம்'' என்றேன். எனக்கு இனிப்பு என்றால் ரொம்பப் பிடிக்கும். சங்கரன், ''இலையில் இருப்பது வயிற்றுக்குள் போகட்டும்; மறுபடி வைக்கிறேன்'' என்றார். அவ்வளவுதான். நான் 'ஓ' என்று பெருங்குரலெடுத்து அழ ஆரம்பித்து விட்டேன். நிலை வாசல் அருகே நின்று மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்த அண்ணி (ரசிகமணியின் வாழ்க்கைத் துணைவியார் பிச்சம்மாள் அவர்களை எல்லோரும் ''அண்ணி'' என்றுதான் குறிப்பிடுவார்கள்), உடனே சங்கரனிடமிருந்து புட்டு நிரம்பிய சட்டியை வாங்கிக் கொண்டார். என்னிடம் வந்து, ''இந்தாப்பா, உனக்கில்லாததா? எவ்வளவு வேணுமோ எடுத்துக்க; மிச்சம் மீதி ஏதாவது இருந்தா நாங்க பார்த்துக்கிடறோம்'' என்று கூறியபடி சட்டியை என் இலையருகே வைத்துவிட்டுப் போனார். எல்லோரும் சிரிக்க, நானும் மகிழ்ந்து போவேன். சட்டியை நான் தொடவே இல்லை என்பதும், இலையில் இருந்த புட்டையே சிறுவனாகிய என்னால் முழுமையாகச் சாப்பிட முடியவில்லை என்பதும் வேறு விஷயம்.



● அமரர் கல்கியுடன் ராஜேந்திரன்

11

அண்ணி மாதிரி, மன்மோகன் சிங்கும், ''இந்தாங்க, மிஸ்டர் கருணாநிதி, மொத்த மந்திரி பதவிகள் இவ்வளவுதான். இதில்

**கல்கி ராஜேந்திரன்**

# சட்டி நிறைய புட்டு; 'கல்கி' வைத்த 'குட்டு'!

எவ்வளவு வேணுமோ எடுத்துக்குங்க; மிச்சம் மீதி ஏதாவது இருந்தால் மற்றவங்களுக்குக் கொடுக்கிறேன்'' என்று கூறியிருக்க வேண்டாமோ!

எல்லோர் எதிரிலும் என்னைக் கோபித்துக் கொண்டால் என் மனம் புண்பட்டுப் போகும் என்பதால் அப்பா பொறுத்திருந்து, அன்று மாலை ஐந்தருவியில் குளித்துவிட்டு மாட்டு வண்டியில் திரும்பி வரும்போது சொன்னார்: ''சின்னப் பையன், புட்டுக்கு ஆசைப் பட்டது இயற்கை; ஆனால் அளவோடு ஆசைப்படணும்; அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷம் என்ற பழமொழியை எப்போதும் மறக்கக் கூடாது.'' நான் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, ''சரி'' என்றேன்.

''கல்கி'' தமது விரல்கள் எதிலும் மோதிரம் அணிந்ததே இல்லை. விரல்களை மடக்கி யாருக்கும் குட்டு வைத்ததும் இல்லை. அடிப்பது, தண்டிப்பது எல்லாம் அவருக்குப் பிடிக்காது. ஆனால் அவர் வார்த்தைகளால் வைக்கும் ''குட்டு'' உள்ளத்தைப் பலமாகத் தாக்கி, பண்படுத்தும்.

உறவினர்களில் பலரை ''கல்கி'' படிக்க வைத்து வேலையில் அமர்த்தியும் இருக்கிறார். அவர்களில் ஒருவர் பள்ளிப் படிப்பை முடித்து, டைப்ரைட்டிங் -ஷார்ட் ஹேண்ட் தேறி, வேலை வாய்ப்பு எதிர் பார்த்து எங்களுடனேயே தங்கியிருந்தார். அச்சமயம் ''கல்கி'' அவர்களுடைய கார் சிறிய விபத்துக்கு உள்ளாகியது. பழுது பார்க்கும் செலவை இன்ஷியூரன்ஸ் நிறுவனம் ஏற்கும் என்பதால் அதற்குரிய விண்ணப்பப் படிவத்தைப் பெற்று வரச் செய்து பூர்த்தி செய்யுமாறு அந்த உறவினரிடம் கூறினார். படிவத்தில் ஒரு கேள்வி: "Was the driver sober?" இதற்கு "No" என்று பதில் எழுதியிருந்தார் அந்த உறவினர். படிவத்தில் கையெழுத்திட்டவாறே பதில்களை நோட்டம் விட்ட ''கல்கி'' சிரித்து விட்டு, "sober என்றால் உனக்கு அர்த்தம் தெரியாவிட்டால் பரவாயில்லை. ஆனால் தெரியாததை தெரிந்த மாதிரி எப்போதும் காட்டிக் கொள்ளாதே! அது ஆபத்தில் உன்னைச் சிக்க வைக்கும். தெரியாததைத் தெரிந்துகொள்ள முயற்சி செய். டிக்ஷ்னரி என்று ஒன்று எதற்காக இருக்கிறது?'' என்று அறிவுரை வழங்கி அகராதியைக் கொண்டு வரச் சொன்னார். அதைப் புரட்டிப் பார்த்து விட்டு அந்த உறவினர் வெட்கத்துடன் "No" என்பதை "yes" என்று திருத்தி எழுதினார். திருத்தப்பட்ட இடத்தில் கூடுதல் கையெழுத்துப் போட்ட ''கல்கி'', ''நாங்களெல்லாம், எத்தனையோ நாள் மதுவிலக்குப் பிரசாரமும் கள்ளுக்கடை மறியலும் நடத்தி தடியடிகூட பட்டிருக்கிறோம். நீ என்னடா என்றால் ஒரே ஒரு இரண்டெழுத்து வார்த்தையில் என் டிரைவரைக் குடிகாரனாக்கிட்டே!'' என்றார். அருகில்

நின்றிருந்த எனக்கும் அவர் கூறியது மறக்கவே கூடாத - முடியாத படிப்பினையாகத்தான் இருந்தது.

**ப**தினாலு வயதில் எனக்கு திடீரென்று கதை எழுதும் ஆர்வம் பிறந்தது. ஒரு கையெழுத்துப் பத்திரிகை கூட தயாரித்து, யாரிடமும் காண்பிக்கக் கூச்சப்பட்டு நானே வைத்துக் கொண்டேன்! அந்தச் சமயம் (வானதி) திருநாவுக்கரசு குழந்தைகளுக்காக ''ஜில் ஜில்'' என்ற பெயரில் ஒரு பத்திரிகை நடத்திக் கொண்டிருந்தார். முதல் இரண்டு இதழ்களைப் படித்த நான், அதற்குக் கதை எழுதத் தீர்மானித்து, ஒரு புனைபெயருக்குள் ஒளிந்துகொண்டு அனுப்பி வைத்தேன். விலாசத்தை வைத்து, யார் எழுதியது என்பதைத் தெரிந்து கொண்ட திருநாவுக்கரசு, கதையைப் பிரசுரித்தது மட்டுமல்லாமல், ''மீன் குஞ்சுக்கு நீந்தக் கற்றுத் தரவேண்டுமா?'' என்று ஆரம்பித்து ஒரு சிறிய அறிமுகமும் தந்திருந்தார். அதோடு விட்டாரா? அந்த இதழின் இரண்டு பிரதிகளை எடுத்துக் கொண்டு வந்து அப்பாவைச் சந்தித்து பெருமிதத்துடன் கொடுத்தார்! எனக்கு ஒரே நடுக்கமாகி, அப்போதைக்குத் தலைமறைவாகி விட்டேன். ஆனால் எவ்வளவு நேரம்தான் அப்பாவைச் சந்திப்பதைத் தவிர்க்க முடியும்?

அன்றிரவு சாவகாசமாக அப்பா சொன்னார்: ''நீ எழுதினதைப் படிச்சேன். பரவால்லே, குழந்தைகளுக்கு ஏற்ற மாதிரி சுவாரஸ்யமா எழுத முயற்சி பண்ணியிருக்கே. ஆனா தொடர்ந்து எழுதணும்னா, நிறைய படிக்கணும்; வாழ்க்கையில் அனுபவங்களும் ஏற்படணும். இப்போதைக்கு பரீட்சையில் நல்ல மார்க் வாங்கி பாஸ் பண்ணற வழியைப் பாரு. அதான் முக்கியம்; காலேஜ்ல சேரணுமில்லியா?'' என் கவனம் சிதறிவிடக் கூடாது என்ற கவலையில் அவர் பேசுவது புரிந்தது.

''**நி**றைய படிக்கணும்'' என்று சொன்ன அப்பா, நல்ல நூல்களைப் படிக்க ஊக்கமளிப்பார். பதினோரு வயது வரை கான்வென்ட்டில் படித்ததால் அந்த வயதிலேயே ஆங்கில நூல்கள் பலவற்றைப் படிக்கும் ஆர்வம் எனக்கு இருந்தது. அதன் பிறகு தாய்மொழிப்பற்று குறைந்துவிடக் கூடாது என்று கருதி, சர்.எம்.ஸி.டி. முத்தையா செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் என்னை தமிழ் மீடியத்தில் படிக்க சேர்த்து விட்டார். அங்கே அற்புதமான நூலகம் ஒன்று இருந்தது. Count of Mante Cristo; Midshipman Easy; Treasure Island, Three Men in a Boat என்றெல்லாம் புத்தகங்களின் பெயர்களை எழுதித் தந்து, ''லைப்ரரியிலிருந்து வாங்கி வந்து படி'' என்று சொல்வார் அப்பா.



இதையொட்டி முதல் முறை நான்

நூலகர் பார்த்தசாரதியை அணுகியபோது, அவர் என்னை ஏற இறங்கப் பார்த்து விட்டு, ''இதெல்லாம் முதல் ஃபாரம் (ஆறாம் வகுப்பு) படிக்கும் மாணவனுக்கு என்ன புரியும்? தருவதற்கில்லை'' என்று சொல்லிவிட்டார். விவரம் அறிந்ததும் அப்பாவுக்கு ரொம்ப வருத்தமாகி விட்டது. ''ஒரு சிறுவன், படிப்பதற்கு ஆசைப்பட்டுக் கேட்கும்போது புத்தகத்தைத் தராமல் பூட்டி வைப்பது, நூலகத்தின் நோக்கத் துக்கே விரோதமானது'' என்று தலைமை ஆசிரியர் கோபாலகிருஷ்ணனுக்கு ஒரு கடிதம் எழுதி என் மூலம் கொடுத்து அனுப் பினார். அன்றைய தினமே நூலகத்தின் விதி முறைகள் மாற்றப்பட்டன. உயர்வகுப்பு களில் படிக்கும் மாணவர்களுக்கு மட்டு மின்றி விரும்பிக் கேட்கும் எல்லா மாண வர்களுக்கும் புத்தகங்கள் வழங்கப்பட்டன. அப்பா எழுதிக் கொடுத்தவை மட்டுமின்றி நானாகவே பல நூல்களைத் தேர்ந்தெடுத் துப் படிக்கும் வாய்ப்பு பெற்றேன்.

திருநாவுக்கரசு, என் முதல் கதையைப் பிரசுரித்தது மட்டுமல்லாமல், 'மீன் குஞ்சுக்கு நீந்தக் கற்றுத் தரவேண்டுமா?' என்று ஆரம்பித்து ஒரு சிறிய அறிமுகமும் தந்திருந்தார்.

ஒரே ஒருமுறைதான் என்னை ரொம் பக் கடுமையாகக் கண்டித்திருக்கிறார் அப்பா. மழைக் காலத்தில் தேவையின்றி வெளியே போய் சொட்டச் சொட்ட நனைந்து வீடு திரும்பியபோது, '' இத பாரு, ஒண்ணு நீ இந்த வீட்டை விட்டு வெளியேறி விடு; இல்லே, நான் போயிட றேன்!'' என்றார். அவருடைய கோபத்தின் உச்சநிலையே இவ்வளவுதான்!

கோபம் உச்சகட்டத்தை அடையக் காரணமும் உண்டு. சிறுவனாக இருந்த போது எனக்கு பூஞ்சை உடம்பு. அடிக்கடி சளி, இழுப்பு, ஜுரம் என்று வந்து விடும். மழையில் வேறு நனைந்தால் கேட்க வேண்டுமா? ஜுரம் வந்து நான் படுத்தால் அப்பா, தமக்கிருந்த எத்தனையோ வேலை களுக்கு இடையில் வேளைக்கு வேளைக்கு மருந்து கொடுப்பதுடன் அருகில் அமர்ந்து ஆறுதலாகப் பேசுவார்: ''சின்ன வயசில் நான் திடகாத்திரனாக இருந்தேன்; இப்போ பாரு, ஆஸ்த்துமாவில் அவதிப்படறேன். நீ அப்படி இல்லை, இப்பவே ரொம்ப சிரமப்பட்டுட்டே. வளர வளர ஆரோக் கியமா இருப்பே'' என்பார். தமது வாக்கு மெய்யாவதற்காக, என்னை வாலிப வயதில் வி.என்.குமாரசுவாமியிடம் ஒப் படைத்து, யோகாசனம் கற்றுக் கொடுக்கச் சொன்னார்.

யோகாசனங்களின் உதவியுடன் நான் நல்ல உடல் வளர்ச்சியையும் உடல் ஆரோக்கியத்தையும் பெற்றேன். கூடிய மட்டில் நோய் நொடியின்றி, அப்பாவை விட இருபது ஆண்டுகள் கூடுதலாக வாழ்ந் திருக்கிறேன். ஆனால் 'அவரது சாதனை களில், இருபதில் ஒரு பங்காவது நம்மால் செய்ய முடிந்ததா' என்று எண்ணிப் பார்க்கிறேன். 'அது சாத்தியமாகி விட்டால் அப்புறம் ''கல்கி''க்கு என்ன பெருமை' என்றும் நினைத்து சமாதானமடைகிறேன்!

*(அடுத்த வாரம்:*
***பேனா மன்னர்கள்!)***



# நடக்குமென்பார்

**மேஷம் :** இல்லற வாழ்வு மகிழ்ச்சிகர மானதாக அமையும். புதிய முயற்சிகள் யாவும் ஈடேறும். தனயோகம் ஏற்படும். குழந்தைகளால் சந்தோஷம் பெருகும். சிலருக்கு வீடு மாற்றம் உண்டாகும். அதிர்ஷ்ட எண்கள் : 1,3,9. நிறம்: மஞ்சள்.

**ரிஷபம்:** சுபகாரியம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வழி பாடு நற்பலனை அளிக்கும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். அதிர்ஷ்ட எண்கள்: 5, 6. நிறம்: வெள்ளை.

**மிதுனம் :** எதிலும் ஆற அமர யோசித்து முடிவு எடுப்பது நல்லது. வாகனங்களில் போகும்போது உஷார். கைப் பொருள் மீது கவனம் தேவை. குடும்ப வாழ்க்கையில் விட்டுக் கொடுத்து அனுசரித்துப் போவது நல்லது. அதிர்ஷ்ட எண்கள்: 6, 1, 5. நிறம்: பச்சை, மஞ்சள், நீலம்.

**கடகம் :** மன உளைச்சல் அதிகரிக்கும். படிப்பில் அதிகக் கவனம் செலுத்தவும். விளையாட்டுத்தனத்தைக் குறைக்கவும். நண்பர்களுடன் அதிகம் பேச்சுவார்த்தை வைத்துக் கொள்ள வேண்டாம். வழக்கு தாமதம் ஆகும். அதிர்ஷ்ட எண்கள் : 1, 5. நிறம்: வெள்ளை, மஞ்சள், சிவப்பு.

தஞ்சை பரத்வாஜ்

**சிம்மம் :** நல்ல முன்னேற்றமான வாரம். நிலபுலன் மூலம் ஆதாயம் கிட்டும். சுபநிகழ்ச்சி கைகூடிவரும். மன சஞ்சலம் தீரும். விரும்பிய கல்வியைப் பயிலும் வாய்ப்பு கிட்டும். அதிர்ஷ்ட எண்கள்: 1, 5, 6. நிறம்: மஞ்சள், இள நீலம்.

**கன்னி :** அநாவசியமான செலவு களைத் தவிர்க்கவும். திடீர்ப் பிரயாணம் வந்து சேரும். கூட்டாளிகளை விட்டுப் பிரிய நேரிடும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். அதிர்ஷ்ட எண்: 5, 6. நிறம்: மஞ்சள், பச்சை

**துலாம் :** உத்தியோகத்தில் இடம் மாற் றம் ஏற்படும். புதிய வேலை வாய்ப்பு தேடி வரும். பணப் பிரச்னை தீரும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக் கும். கடல் கடந்த மனிதர்கள் மூலம் நற்பலன் கிட்டும். அதிர்ஷ்ட எண்கள்: 6, 9, 2. நிறம் : வெள்ளை, நீலம்

**விருச்சிகம் :** நீண்ட தூரப் பிரயாணம் செல்ல நேரிடும். மகான்களின் தரிசனம் கிட்டும். இல்லற வாழ்வில் இணக்க மான போக்கு காணப்படும். உறவினர் மூலம் நல்ல தகவல் வந்து சேரும். குழந் தைகள் மூலம் சந்தோஷம் கிட்டும். அதிர்ஷ்ட எண்கள் : 3, 9, 1. நிறம்: மஞ்சள், சிவப்பு, நீலம்.

**தனுசு :** குடும்பத்தில் மனக் குழப்பம் நிறைந்து இருக்கும். கொடுக்கல் வாங்

# நடக்கும்!

## 21.06.09 முதல் 27.06.09 வரை

நான் நடிக்கிற 'ஜெகன் மோகினி', ஜெயம் ஆகுமா சார்?



கலில் எச்சரிக்கை தேவை. கூட்டுத் தொழில் செய்பவர்கள் கணக்கு வழக்குகளை அடிக்கடி சரிபார்த்துக் கொள்ளவும். அதிர்ஷ்ட எண்கள் : 1, 9, 3. நிறம்: மஞ்சள், வெள்ளை.

**மகரம் :** மனத்தில் இருந்து வந்த பயம் விலகி தன்னம் பிக்கை மிகுந்து காணப்படும். கணவன் - மனைவிக்குள் வாக்கு வாதம் தவிர்க்கவும். வரவேண் டிய பாக்கிகள் வந்து சேரும். விடாமுயற்சியுடன் படித்து வரவும். அதிர்ஷ்ட எண்கள்: 5, 6. நிறம்: வெள்ளை, நீலம்.

**கும்பம் :** பணவசதி பெருகும். திடீர்ப் பிரயாணம் வந்து சேரும். கல்விவளம் மேலோங்கும். இல் லற வாழ்வு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். அதிர்ஷ்ட எண்கள்: 5,6. நிறம்: பச்சை, இளமஞ்சள்

**மீனம் :** பூர்விகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கூட் டாளிகள் விலகிப் போவார்கள். அயல்நாடு செல்லும் யோகம் வந்து சேரும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். வீட்டில் சுபகாரியம் கைகூடும். வேலையில் உயர்வு உண்டா கும். அதிர்ஷ்ட எண்கள்: 3, 9. நிறம்: மஞ்சள், வெள்ளை.

# ஒன்பது பூக்கள்..

# நிதின் சத்யா பேட்டி

'முத்திரை' படத்தில் தமது அழுத்தமான நடிப்பின் மூலம் முத்திரை பதித்துள்ளார் நிதின் சத்யா. பகலின் வெப்பம் தணிந்து இதமான காற்று வீசும் ஒரு மாலை நேரத்தில் உற்சாகத்துடன் பேசினார்...

**'முத்திரை'யில் உங்களோட ஸ்பெஷல்?**

''குழந்தைகள் மனம் கவர்ந்த ரஜினி ஸாரின் ஃபார்முலாவான ஆக்ஷன் பேஸ்டு காமெடிதான் முத்திரை. 'சத்ய மூர்த்தி' என்கிற கிராமத்துத் திருடனான நான் சிட்டிக்கு வர்றேன். அங்கு ஒரு பெண்ணைச் சந்திக்கிறேன். அவள் மூலமாக இன்னொரு நண்பனைச் சந்திக்கிறேன், மூவருமாகச் சேர்ந்து முதல்வரின் கொலைக் குற்றத்தில் மாட்டிக்கொண்டு, அதிலிருந்து எப்படி மீள்கிறோம் என்பதே மீதிக் கதை. முத்திரையில் ஃப்ரெஷ்ஷான ஒரு நிதின் சத்யாவை நீங்க பார்க்கலாம்.''

**புது இயக்குநர் என்ன சொல்றார்?**

''அமரர் ஜீவாவோட ஃபேண்டஸியான ஸ்கூலிலிருந்து வந்தவர் ஸ்ரீநாத். 'முத்திரை'யில லோக்கல் காமெடி ட்ரை பண்ணியிருக்கிறார். நானும், அவரும் பத்து வருட நண்பர்கள். எப்பவுமே நான் இயக்குநர்களோட நடிகன்தான்.''

**ரீ-மேக் 'பாலைவனச் சோலை'யில் நீங்கள் யார் ?**

''மற்ற மொழிகளிலிருந்து ரீமேக் படங்கள் பண்ணச் சொல்லி வாய்ப்புகள் வந்தன. அதையெல்லாம் தவிர்த்து விட்டு பாலைவனச் சோலையை ஒப்புக்கிட்டேன். அந்தப் படத்தின் கதையை மட்டும்தான் எடுத்திருக்கிறோம். கதாபாத்திரங்கள் வெவ்வேறு. நான் ஆட்டோக்காரனாக வருகிறேன். இடது கைப்பழக்கம் உடைய மேனரிசத்தை மட்டும் அந்தப் படத்திலிருந்து எடுத்து ஃபாலோ பண்ணியிருக்கேன். க்ளைமாக்ஸ் படப்பிடிப்பின்போது எமோஷனலாகவே இருந்தேன், யார் கூடவும் பேசவில்லை. அந்தக் காட்சியில் கதறிக் கதறி அழுதேன்; இயக்குநர் கட் சொல்லியும் அழுகை நிற்கவேயில்லை யூனிட்டில் இருந்தவர்களுக்கு! படம் வந்ததும் பாருங்கள் நீங்களும் சேர்ந்து அழுவீர்கள்.''

**ஆள் இளைச்ச மாதிரி தெரியுதே?**

''என் அடுத்த படமான 'பின்குறிப்பு' 2003-04க்கு இடைப்பட்ட சம்பவத்தை மையப்படுத்திய கதை. என்னோட வயசை இருபத்தெட்டிலிருந்து, இருபத்து மூணுக்குத் திருப்பணும். அதுக்காக நாலு மணி நேரம் தினமும் உடற்பயிற்சி செய்யறேன். லண்டன்ல ஸ்போர்ட்ஸ் தெரபி டிகிரி முடிச்ச என்னோட மாமா ராமகிருஷ்ணனும், டாக்டர் பிரதீப்பும் பயிற்சி கொடுத்துட்டு வர்றாங்க.''

**'பின்குறிப்பு' பற்றி ஒரு முன் குறிப்பு...?**

'' 'பின் குறிப்பு' ஆக்ஷன் பேஸ்டு சஸ்பென்ஸ் த்ரில்லர். இந்த டீம் சின்ஸியரான, ஜெயிக்கிற டீம். 'சத்தம்

போடாதே'வுக்குப் பிறகு ஒப்புக்கொண்ட படம். இயக்குநர் கௌதம் மேனனின் அசோசியேட் மணிகண்டன் படத்தை இயக்குகிறார். இரண்டு வருடமாக இந்தக் கதையை வைத்துக் கொண்டு படாதபாடு பட்டு விட்டோம். ஒண்ணு தயாரிப்பாளர்கள் ஹீரோவை மாத்துங்கன்னு இயக்குநர் கிட்ட சொல்வாங்க. இல்லைன்னா என் கிட்ட டைரக்டரை மாத்தச் சொல்வாங்க. ஆனால், நாங்க உறுதியா இருந்தோம். என்னை இண்டஸ்ட்ரியில நிலைநிறுத்தும் படமா இது இருக்கும். நல்ல நடிகன்னு பேர் வாங்கறது ரொம்பக் கஷ்டம், ஆகவேதான் வித்தியாசமான கதாபாத்திரங்களா தேடிப் பிடித்து நடிக்கிறேன். அப்புறம் இயக்குநர் ஜெகனோட 'ரோஜா... மல்லி... கனகாம்பரம்...'ங்கிற படத்தில ஒன்பது பூக்களுடன் (கதாநாயகிகளோட) நடிக்கிறேன்... என்ன பாஸ்! பேரைக் கேட்டவுடனே வாசனை ஆளைத் தூக்குது இல்லை!''

# ஒரு ராஜா!

**மற்ற மொழிகளில் நடிக்க ஆசை இல்லையா?**

''பண்ண வேண்டிய சூழல் இருக்கு. முதல்ல இங்கு நெத்தியடி அடித்து விட்டு, அதாவது 'தமிழன் என்று சொல்லுடா தலை நிமிர்ந்து நில்லுடா' என்கிறபடி நின்று ஜெயித்து விட்டு பிறகு மற்ற மொழிகளுக்குச் செல்லலாம் என்றிருக்கிறேன்.''

**- கிராபியென் ப்ளாக்**




* நிதின் சத்யா

# தீராத விளையாட்டு விட்டலன்

ஞானேஸ்வரரும் நாமதேவரும் புறப்பட்டனர். காசி, மதுரா, துவாரகா என்று பல இடங்களைத் தரிசித்தனர். தாங்கள் சென்ற பாதையிலெல்லாம் விட்டல மார்க்கத்தைப் பரப்பினர். பின்னர் ராஜஸ்தானை அடைந்த போது பாலைவனப் பகுதியின் தாகம் அவர்களை வாட்டியது. வெகு தொலைவில் கிணறு ஒன்று தென்பட ஆர்வத்துடன் அதை நோக்கி நடந்தனர். அருகில் நெருங்கியதும் ஏமாற்றம் காத்திருந்தது. தண்ணீர் மிகமிக அடியில் இருந்தது.

ஞானேஸ்வரர் தம்மிடமிருந்த ஒரு சக்தியைப் பயன்படுத்திக் கொண்டார். ஸ்தூல சரீரமாக (அதாவது உடலிலிருந்து ஒரு சக்தி மட்டும் வெளியேறும் வகையில்) கிணற்றுக்குள் இறங்கி தண்ணீர் குடித்தார். பின் நாமதேவருக்கும் இதேபோன்று உதவ முன்வந்தார். நாமதேவர் ''எனக்கு எந்த அதிகப்படி சக்தியும் வேண்டாம். விட்டலனே என் தாகத்தைத் தீர்க்கட்டும்'' என்றார் பிடிவாதமாக.

அப்போது அந்த அதிசயம் நடந்தது. கிணற்றுக்குள் நீர் பொங்கிப் பரவியது. நாமதேவர் குடிப்பதற்கு வசதியாக நன்றாக மேலெழும்பியது. தணிந்த தொண்டை தாகத்துடனும் தணியாத விட்டல தாகத்துடனும் புறப்பட்டார் நாமதேவர்.



''பெரியவரே உங்கள் காலை லிங்கத்திலிருந்து கொஞ்சம் நீக்குங்கள்''
–நாமதேவர்

''நீதான் என் காலைக் கொஞ்சம் நகர்த்தி வையேன்'' –பெரியவர்

அருண சரண்யா




# பொங்கிப் பரவும் பக்தி!

நாமதேவர் விட்டலனுக்கு மிகவும் நெருக்கமானவராகவே இருந்தாலும் கூட அவரிடம் கொஞ்சம் 'தான்' என்ற உணர்வு இருந்தது. இதை அவரே உணர்ந்து அதைப் போக்க என்ன செய்யலாம் என்று விட்டலனை வினவினார். 'அனுதா நாஹநாத் என்கிற இடத்தில் விசோபா என்பவர் இருக்கிறார். அவரை உன் குருவாக ஏற்றுக்கொள்' என்றார் விட்டலன்.

உடனே அனுதா நாஹநாத்தை நோக்கிப் புறப்பட்டார் நாமதேவர்.

அங்குள்ள சிவன் கோயிலை அடைந்தார். அந்தக் கோயிலின் உட்புறத்தில் ஒரு வயதானவர் தூங்கிக் கொண்டிருந்தார். 'பாவம் அசதியாக இருக்கும். அதனால் தான் ஆலயத்துக்குள்ளேயே உறங்குகிறார்' என்று எண்ணிய நாமதேவரின் பார்வையில் மற்றொரு காட்சி தென்பட்டது. அவர் அதிர்ச்சிக்குள்ளானார். அந்த முனிவரின் ஒரு பாதம் ஒரு சிறிய சிவலிங்கத்தின்மீது இருந்தது.

''பெரியவரே உங்கள் காலை லிங்கத்திலிருந்து நீக்குங்கள்'' என்று கத்தினார் நாமதேவர். இந்த உரத்த குரலில் முதியவர் எழுந்துகொண்டார். ''எனக்கு உடலில் சக்தியே இல்லை. என் காலைக் கொஞ்சம் நீதான் நகர்த்தி விடேன்'' என்றார். உடனே நாமதேவர் அவரது காலை அந்த லிங்கத்திலிருந்து தூக்கி வேறொரு இடத்தில் வைத்தார்.

ஆனால் அந்தக் காலின்கீழ் புதிதாக ஒரு லிங்கம் முளைத்திருந்தது!

திகைத்துப் போனார் நாமதேவர். ''நாம்தான் வேறொரு லிங்கம் இருப்பதை அறியாமல் அதன் மீது இவரது காலை வைத்து விட்டோமோ?' என்ற சந்தேகத்துடன் முதியவரின் காலை வேறொரு இடத்துக்கு மாற்றினார். இப்போது புதியதொரு லிங்கம் அவரது பாதத்துக்குக் கீழே காட்சி தந்தது.



தான் எங்கும் பரவியிருப்பதையே இறைவன் தனக்கு இப்படி உணர்த்தியிருக்கிறான் என்பதை நாமதேவர் புரிந்துகொண்டார். அதன்பிறகு எல்லா உயிர்களையும் சமமாகப் பாவித்தார். தவிர குருவின் வழிநடத்தலும் அவர் பாதையை மேலும் செப்பனிட்டது.

ஞானேஸ்வரர் மகாசமாதி அடைந்ததும் நாமதேவர் விசனப்பட்டார். இருவரும் ஒருசேர பக்தியைப் பரப்பியவர்கள் ஆயிற்றே. அதற்குப் பிறகு நாமதேவர் ஐம்பத்தாறு ஆண்டுகள் உயிர் வாழ்ந்தார். அப்போது முஸ்லிம் படையெடுப்பால் பாரதத்தின் பல பகுதிகள் கொந்தளித்துக் கொண்டிருந்தன; சூறையாடப்பட்டுக் கொண்டிருந்தன. இதனிடையே தனியாகவே துவாரகா, மதுரா, ஹரித்துவார், பஞ்சாப் போன்ற பகுதிகளுக்குச் சென்று விட்டல பக்தியைப் பரப்பினார் நாமதேவர். சீக்கியர்களின் (சபத் கீர்த்த) மதப்பாடல்களுக்கும், நாமதேவர் அபங்கங்களுக்கும் பல ஒற்றுமைகள் இருக்க, சீக்கியர்களுக்கும் நாமதேவரைப் பிடித்துப் போயிற்று. அவரது சில அபங்கங்கள் சீக்கியர்களின் புனித நூலான குரு கிரந்த் சாஹிபில் இடம் பெற்றன.

அப்போது டெல்லியை ஆண்ட முகம்மது பின் துக்ளக் ஒரு சர்வாதிகாரி. நாமதேவரின் பக்திமார்க்கம் பிடிக்காமல் அவரைக் கைது செய்தான். அரண்மனையில் மன்னனுக்கு எதிராக நின்றபடி நெஞ்சை நிமிர்த்தி விட்டலனின் பெருமைகளை அடுக்கத் தொடங்கினார் நாமதேவர்.

மன்னனின் கோபம் எல்லை கடந்தது. ஒரு பசுவையும் கன்றையும் வரவழைத்தான். சட்டென அவற்றின்மீது வாளை வீசிக் கொன்றான். "உன் விட்டலனால் இவற்றுக்கு மறுபடியும் உயிர்தர முடியுமா?" என்று கேட்டான். விட்டலனின் திருநாமங்களைப் பாடத் தொடங்கினார் நாமதேவர். அதிசயம் நடந்தது.



## அபங்க அமுதம்

'ஜைஸா வ்ருக்ஷ நேணே மான அபமான
தைஸே தே ஸஜ்ஜன வர்த்ததாதி
யேவூனியா பூஜா ப்ராணி ஜே கரிதீ
த்யாசே ஸுக சித்தீ தயா நாஹீ
அதவா கோணீ ப்ராணி யேவூனி தோடிதீ
தயா ந ம்ஹணதி சே தூ நகா
நிந்தா ஸ்துதி ஸம மானிதீ ஜே ஸந்த
பூர்ண தை ர்யவந்த ஸாது ஐஸே
நாமா ம்ஹணே த்யாசீ ஜரீ ஹோய பேடி
தரீ ஜீவ சிவா காண்டீ படனி ஜாய'

- பக்த நாமதேவர்

'மரங்கள் மானஅவமானங்களை அறியாமல் இருப்பதுபோல மகான்கள் இருக்கிறார்கள். தனக்குப் பூஜை செய்யப்பட்டாலும் மரங்கள் மகிழ்ச்சி கொள்வதில்லை. யாராவது கிளைகளை ஒடித்தாலும் கூக்குரல் இடுவதில்லை, தடுப்பதில்லை. அதுபோலவே பூரண பக்த மகான்கள் நிந்தனையையும் பாராட்டையும் சமமாகவே கருதுகிறார்கள். அவர்களின் பாதங்களில் விழுந்து என் ஆத்மாவை அர்ப்பணிப்பேன்.'

தாயும் சேயும் உயிர் பெற்றன. விட்டலனின் பெருமையை வெளிப்படையாக ஏற்றுக்கொள்ள சுயமதப் பாசம் தடுத்தது. எனினும் நாமதேவரின் பெருமையை ஏற்றுக்கொண்டு அவரை மரியாதையுடன் அனுப்பி வைத்தான் அந்த மன்னன். இன்றளவும் இதற்குச் சாட்சியாக நிற்கிறது, டெல்லி லோதி சாலையில், நாம தேவர் மடத்திலுள்ள பசு மற்றும் கன்று உருவங்கள் அமைந்த ஆலயம்.

**வண்ணப்படம் :**
**வேதா**
**படங்கள் :**
**ஸ்ரீஹரி**





''பையன்கிட்ட அறிவு இருக்காடான்னு கேட்டதுக்கு நீ என்னை முறைக்கிறியே.. ஏன்?''

''பின்னே... உங்ககிட்டேயே இல்லாததை... நீங்க அவன்கிட்ட கேட்கலாமா...?''

- ராசை. உ.குணசீல பாண்டியன்

# அப்பத்திலேர்ந்து



''உன் லவ்வர் உன் மேல உயிரையே வைச்சிருக்கானா எப்படி?''

''ஒரு கோவைப் பழம் வாங்கித் தரச் சொன்னதுக்கு, உடனே கோயம்புத்தூர் போயிருக்கான்னா பாரேன்.''

– சாயம்.வெ.ராஜாராமன்



"போஸ்ட்டர்ல ஏகப்பட்ட பேர் இருக்குது. ஆனா மேடைல தலைவர் மட்டும்தானே இருக்காரு...?"

"எல்லாம் தலைவரோட பினாமி பேராம்."

- வி.சாரதி டேச்சு



''உங்களுக்கு எப்பலேர்ந்து தலைவலி இருக்குது...?''

''கல்யாணமானதுலேர்ந்து டாக்டர்...''

- வி.சாரதி டேச்சு

# தலைவலி!

''எங்க தலைவர் பணத்துக்காக எதையும் செய்வார் தெரியுமா?''

''இது என்ன பிரமாதம். எங்க தலைவர் பணத்தையே செய்யறார் தெரியுமா?''

- சாயம்.வெ.ராஜாராமன்





''பையன் மெகா சீரியல் நடிகனா...?''

''எப்படிச் சரியா கண்டு பிடிச்சீங்க...?''

''அதான் காப்பியை சொட்டுச் சொட்டா குடிக்கிறானே...!''

- ஜே.தனலட்சுமி

அந்தக் கொடூரம் நடந்து நாற்பத்தொரு ஆண்டுகள் ஆகின்றன. அறுவடைக்கூலியாக அரைப்படி நெல் உயர்த்திக் கேட்டதற்காக அது நிகழ்த்தப்பட்டது. நாற்பத்து நான்கு நபர்களை உயிருடன் வைத்துக் கொளுத்தப்பட்ட மண் குடிசை. அழியாத நினைவுச் சின்னமாக எழும்பியுள்ளது கீழவெண்மணி கிராமத்தில்.

அவர்கள் அத்தனை பேரும் உயிர் பிழைத்தால் போதும் என்று, ராமைய்யாவின் குடிசைக்குள் தஞ்சம் புகுந்தவர்கள். குஞ்சம்மாள் - காளிமுத்து என்கிற ஒரே குடும்பத்தின் பத்து நபர்களும் உயிர்ப் பலி ஆகினர். அடைக்கலம் புகுந்த அத்தனை பேரும் கருகிய உடல்களாகத் தான் கண்டெடுக்கப்பட்டார்கள். மூன்றே வயதான பெண் குழந்தைகளும் அதில் மாண்டு போனது, கொடூரத் தின் உச்சம்.



✱ சேதுபதி



✱ சரசு

"அந்தக் கொடுமைக்குப் பிறகு ஊரே ஒரு வருஷம் மயான அமைதியா இருந்துச்சு!"



''எனக்கு அப்ப வயசு எட்டு. நாங்க அண்ணன் - தம்பி நாலு பேரு. அடிதடி குத்து வெட்டுல என்னோட அண்ணன் தப்பிச்சு ஓடிப் போயிட்டாரு. அண்ணியும் மூணு புள்ளைகளும் எரிஞ்சு செத்துட்டாங்க. எனக்கு நல்லா ஞாபகம் இருக்கு. வாய்க்கா வரப்பு பள்ளத்துல எங்களைப் படுக்க வெச்சுருந்தாங்க. தவக்களை மத்த என்னென்னமோ பூச்சியெல்லாம் எங்க மேல ஊர்ந்து போச்சு. உசுரு பொழைச்சாப் போதும்னு சத்தம் போடாமல் படுத்துக் கிடந்தோம். அன்னைக்கு இரவை என்னால என்னைக்கும் மறக்க முடியாது!'' எனக் கூறும் சேதுபதிதான் இப்போது நினைவு இல்லத்தின் பாதுகாவலர்.

''கலவரம் வெடிக்க ஆரம்பிச்சப்ப சாயந்தரம் மணி அஞ்சு. பொண்டு புள்ளைங்கல்லாம் தப்பிச்சு ஓடிட்டோம். ஒவ்வொரு குடிசையா தீ வைச்சுக் கொளுத்த ஆரம்பிச்சாங்க. தப்பி ஓட முடியாதவங்கதான் கொளுத்தப்பட்ட ராமைய்யாவோட குடிசைக் குள்ளார ஒளிஞ்சிக்கிட்டாங்க. பண்ணையோட அடியாட்கள் குடிசைக் கதவைப் பூட்டிட்டு, நாலாபக்கமும் பெட்ரோல்

ஊத்திக் கொளுத்திட்டாங்க. அத்தினி மக்களும் கருகிச் செத்துட்டாங்க. அந்தக் கலவரத்துல என் புருஷனுக்கு வலது தொடையில அருவா வெட்டு விழுந்திச்சு!'' என்கிறார் ராமலிங்கம் என்பவரின் மனைவி சரசு.

''சொன்னா நம்ப மாட்டீங்க. அந்தக் கொடுமைக்குப் பிறகு, ஒரு வருஷம் ஊரே மயான அமைதியா இருந்திச்சு. ஒருத்தர் மூஞ்சிய இன்னொருத்தர் பார்த்தாலே துக்கம் பொங்கிட்டு வரும். இதுல எங்களால மறக்க முடியாதவங்க, எந்த அரசியல் கட்சியும் சாராத கிருஷ்ணம்மாள் - ஜெகந்நாதன் தம்பதிதான். அவுங்களோட 'உழவனின் நில உரிமை மீட்பு இயக்கம்' மூலமாக கீழ வெண்மணி விவசாயக் கூலி குடும்பம் ஒன்றுக்கு, ஒரு ஏக்கர் வயலை உரிமையாக்கித் தந்தாங்க. நாங்க சொந்த வயல்லயும் உழைச்சோம்; வெளியே கூலிக்கும் போனோம். எங்க வாழ்க்கைத் தரம் கொஞ்சம் கொஞ்சமா உயர்ந்திச்சு. கீழவெண்மணி விவசாயக் கூலி குடும்பத்துப் பையன்ங்கல்ல பலர் இப்ப அரசு வேலைகளில் இருக்காங்க. சொந்த வயல் வந்திடுச்சுன்னு எங்க ஆளுங்க யாரும், அதுக்குள்ளயே முடங்கிப் போகலை. கூப்பிட்ட எடத்துக்கெல்லாம் கூலி வேலைக்குப் போய்ட்டு வர்றோம். குறிப்பா அந்தக் கொடூரம் நடக்கக் காரணமாயிருந்த பண்ணையார் வீட்டு வாரிசுகளோட வயல்லயும், இப்ப நாங்க வேலை செஞ்சுட்டு வர்றோம். நாப்பது வருஷம் முன்னாடி இருந்தது இப்ப இல்ல. நியாயமான கூலி தர்றாங்க. எங்க ஆளுங்களை மரியாதையாவும் நடத்துறாங்க. அந்த நாப்பத்து நாலு பேரோட சாம்பல் சாதிச்சதும் இதைத்தான்!'' என்கிறார் ராமலிங்கம்.



# நெல் மணிக்காக எரிக்கப்பட்ட வெண்மணி!



✱ ராமலிங்கம்

வாசகர் யோசனை:
**கு. வெற்றிப்பேரொளி,**
**திருக்குவளை.**

● தமிழக முதல்வர் கலைஞர் கருணாநிதி பள்ளிப் படிப்பு மற்றும் கட்சிப் பிடிப்பு என வளர்ந்ததெல்லாம் திருவாரூர் என்றாலும், அவர் பிறந்த ஊர் திருக்குவளை, நாகை மாவட்டத்தில்தான் இருக்கிறது.

● கலைஞருக்கு, பிறந்த ஊர்ப் பற்று அதிகம். ஆட்சியில் இருக்கிறபோதும், எதிர்க்கட்சியாக இருக்கிறபோதும் என... எப்போது இங்கு வந்தாலும், அவரது நினைவுகள் பன்னிரண்டு வயது பால்ய நதிக்குள் நீச்சலடிக்கும்.

● அப்போது திருக்குவளையில் கலைஞருக்கு மட்டும்தான் தந்தி வருமாம். திருக்குவளை கோயில் தெப்பக்குளத்தின் வடகரையில் இருக்கிறது அவரது வீடு. தென்கரையில் இருக்கும் போஸ்ட் ஆபீஸிலிருந்து, ''ஏலே கருணாநிதி... உனக்குத் தந்தி வந்திருக்குடா'' என்று போஸ்ட் மாஸ்டர் ஐயங்கார் குரல்கொடுப்பாராம்.

● கலைஞர் குடும்பத்து குலதெய்வம் கோயில் அவரது வீடு இருக்கும் தெருவின் கிழக்குக் கோடியில் இருக்கிறது. பெயர் அங்காள பரமேஸ்வரி. இந்தக் கோயிலுக்கு வேண்டிக் கொண்டு திருவாரூரிலிருந்து நடந்து வருவாராம் கலைஞரின் மூத்த பெண் செல்வி.

● கலைஞர் வீட்டுக்கு நான்கு வீடு தள்ளி இருக்கிறது அவர் படித்த தொடக்கப் பள்ளி. ஒருமுறை வைகோவோடு திருக்குவளை வந்த கலைஞர், ''இதுதான்யா நான் படிச்ச பள்ளி'' என்று காண்பித்துப் பெருமிதப்பட்டாராம். இப்போது அந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியர் கவிஞர் வெற்றிப் பேரொளி.

திருக்குவளை

● கலைஞரின் வீட்டில் அவரது அம்மா அஞ்சுகத் தாயின் சிலை கண்ணாடிப் பெட்டிக்குள் இருக்கிறது. கலாநிதிமாறன் பரிசளித்த கலர் டீ.வி. ஒன்றும் உள்ளது. கலைஞர் சம்பந்தப்பட்ட ஃபோட்டோக்களையும் கண்டுகளிக்கலாம்.

● திருக்குவளை கோயில் சப்தவிடங்க ஸ்தலங்களில் ஒன்று. இங்குதான் கலைஞரின் அப்பா இசைக் கலைஞராக வேலை பார்த்திருக்கிறார்.

● ஐந்தாவது முறையாக கலைஞர் முதல்வரான பிறகுதான் திருக்குவளையை தாலுகா தலைநகரமாக்கி இருக்கிறார். இப்போது பொறியியல் கல்லூரி ஒன்றும் இயங்குகிறது.

● ஒருமுறை, துரைமுருகன், ஆற்காடு வீராசாமி என அமைச்சர்கள் சிலருடன் திருக்குவளை வந்த கலைஞர், தமது வீட்டுக்கு வந்ததும் அமைதியாக உட்கார்ந்து விட்டாராம். உடனே துரைமுருகன், 'ஞாபகம் வருதே... ஞாபகம் வருதே...' எனப்பாட கலகலப்பானதாம் கலைஞர் இல்லம்.

வாசகர் யோசனை:
**வெற்றிப்பேரொளி,**
**திருக்குவளை**

"ஒரு மகளிர் சுயஉத விக் குழுவின் நோக்கம் பொருளாதாரத்தில் தங்களை மேம்படுத்திக்கொள்வது மட்டு மல்ல; கிராம நலனில் அக்கறை கொண்டு பொதுப்பணிகளில் ஈடு படுவதும்தான்!" என்கின்றனர் நாகை மாவட்டம், வேட்டைக் காரனிருப்பு கிராமத்தின் அமுத சுரபி மகளிர் சுயஉதவிக் குழு வினர்.



* வேல்விழி



* கலைமொழி



* மங்களாம்பிகா

பத்து ஆண்டுகளுக்கு முன்னர், இருபது பெண்களுடன் தொடங் கப்பட்டது. மற்ற குழுக்கள் மாதிரியே மாதம் இருபத்தைந்து ரூபாய் சேமிப்பில் முதல் இன் னிங்சை ஆரம்பித்துள்ளனர். துவக் கத்தில் அவ்வை தொண்டு நிறு வனத்தின் கீழ் இயங்கியவர்கள், தற்போது சேவாலயா தொண்டு நிறுவனத்தின் வழிகாட்டுதலில் செயல்பட்டு வருகிறார்கள். ஊக்கு னர் பயிற்சி, கணக்கு எழுத பயிற்சி, வங்கி சென்று வரப் பயற்சி எனப் படிப்படியாக அவர்களைச் செதுக்கியிருக்கிறது சேவா லயா.

"முன்பெல்லாம் கடன் வாங்கவே பயப்படுவோம். எப்படி கடனை அடைப் போம்னு ஒருவித அச்சம். இப்ப அப்படி இல்லை. எங்களை நம்பி பேங்க்ல கடன் தர்றாங்க. சிலனுக்குத் தகுந்த மாதிரி தொழில் செய்றோம். கடனை அடைக் கிறோம். மீண்டும் எங்களைக் கூப்பிட்டு கடன் தர்றாங்க!" என்கிறார் குழுவின் பிரதிநிதி கலைமொழி.

"வங்கிக் கடன் வாங்கிட்டு, நாங்க ஒவ்வொருத்தரும் பணத் தைப் பிரிச்சு எடுத்துக்கறது இல்ல. அப்படியே தொழில்ல முதலீடு பண்றோம். இருபது பேர்ல, வாய்ப்பு உள்ளவங்க அதுல எறங்கி வேலை செய்றோம். சம்பளம் எடுத்துக்க றோம். பேங்க் கடனை அடைக் கிறோம். லாபத்துல மீதிப் பணத்தை ஆளாளுக்குப் பிரிச்சு எடுத்துக்கறோம். போன வருஷம் ஒண்ணேகால் லட்ச ரூபாய்க்கு தென்னந்தோப்பு குத்தகைக்கு எடுத்தோம். இன்னும் ரெண்டு மாசத்துல குத்தகை முடியப் போகுது. தேங்காய், தென்ன மட்டை, பாளை, உரிமட்டைனு வித்துடுறோம். எங்க எல்லா ஆளுங்களுக்கும் இதுல வேலையும் கிடைக்குது. கூலியோட நல்ல லாபமும் சேர்த்துக் கிடைக்குது. வர்ற வருஷத்துல யும் தொடர்ந்து தென்னந்தோப்பு குத்தகை எடுக்க இருக்கோம்!" என்கிறார் இன் னொரு பிரதிநிதி வேல்விழி.

"இந்தியக் குழந்தைகள் நலச் சங்கம் சார்பில், எங்கள் கிராமத்தில் குழு ஏற்படுத் தப்பட்டுள்ளது. அதில் நாங்கள் உறுப்பினர் கள். எங்களோட முக்கிய வேலையே பள்ளி செல்லாத மற்றும் பள்ளி செல்ல மறுக்கும் குழந்தைகளை அடையாளம் கண்டு, அவர்களை தினசரி பள்ளி செல்லத் தூண்டுவதுதான். துவக்கப் பள்ளிக்கு ஆயிரம் ரூபாயும், மேனிலைப் பள்ளிக்கு ஆயிரம் ரூபாயும் தந்து புரவலர் ஆகியிருக் கோம். பள்ளியின் கல்வி வளர்ச்சிக் குழு

**'எங்கள் கிராமத்தில் 50 குளங்களைத் தூர்வாரிச் சுத்தப்படுத்தியுள்ளோம்"**

# மணிமேகலை விருது பெற்ற அமுதசுரபி!

வில் இரண்டு பெண்கள் உறுப்பினர்களா இருக்கோம். ஒவ்வொரு வருடமும் பத்தாம் வகுப்பு மற்றும் ப்ளஸ் டூ பொதுத் தேர்வுகளில் முதல் மூன்று மதிப்பெண் பெறுபவர்களுக்கு மகளிர் சுய உதவிக் குழு சார்பில் ரொக்கப் பரிசு அளித்து உற்சாகப் படுத்தி வர்றோம்.

எங்கள் குழு உறுப்பினர்களில் ஒருவர் லீலா. அவரது கணவர் சமீபத்தில் இறந்து போனார். கணவரின் கண்களை தானம் செய்ய விரும்புவதாக லீலா எங்களிடம் தெரிவித்தார். குழு சார்பாக முயற்சி செய்து, அவரோட கணவர் கண்களைத் தானமாகத் தந்துள்ளோம்.

அமுதசுரபி மகளிர் சுயஉதவிக் குழு பெயரிலும், எங்கள் ஒவ்வொருவர் பெயரிலும் இன்ஷ்யூரன்ஸ் பணம் கட்டி வருகிறோம். இன்ஷ்யூரன்ஸ் பாலிசி பணம் கட்டுவோம் என்றெல்லாம், நாங்கள் கனவிலும் எண்ணியது கிடையாது.

வேட்டைக்காரனிருப்பு கிராமத்தில் சிறியதும் பெரியதுமாக மொத்தம் ஐம்பத்தொரு குளங்கள். அவை அத்தனையையும் தூர்வாரி சுத்தப்படுத்தித் தந்துள்ளோம். எங்கள் பணிகளைப் பாராட்டி தமிழக அரசு, பத்தாயிரம் ரூபாய் பணமுடிப்புடன் மணிமேகலை விருதும் வழங்கியுள்ளது'' - பெருமிதப்படுகிறார் அமுதசுரபி மகளிர் சுயஉதவிக் குழு ஊக்குனர் மங்களாம்பிகா.





## வேதாரண்யம், கோடியக்கரை

# உப்புதேசத்தில் ஓர் உலா!

''இங்க இருக்கற லைட்ஹவுஸ் மேலிருந்து பைனாகுலர் மூலமா பார்த்தா நைட்டுல இலங்கையில லைட் எரியறதெல்லாம் தெரியும்னு சொன்னாங்க ஸார்... நான் ஒரே ஒரு தடவைதான் பார்த்தேன். மினுக்கட்டான்பூச்சி மின்னிமின்னி வட்டமிடுமே... அதுமாதிரி அங்க ஒண்ணும் இங்க ஒண்ணுமா தெரிஞ்சது. அது இலங்கையான்னு தெரியலை. ஆனா, அங்க ஆர்மிகாரங்க போடுற குண்டுச் சத்தம் மட்டும் தெளிவா கேட்கும். இன்னும் வடமேற்குப் பக்கமா காத்து வீசினா காதுக்குப் பக்கத்துல வெடிக்கறது மாதிரி இருக்கும் ஸார்'' - கோடியக்கரையில் நம்மோடு வந்த வன இலாகா கைடு பக்கிரிசாமிதான் மேற்கண்டவாறு சொன்னார்.

நல்ல நீச்சல் பயிற்சியும், மனசுல தெம்பும் இருந்தா இங்கேயிருந்து இலங்கைக்கு நீந்தியே போயிடலாம் (48

## ராமர் பாதம். சிமெண்டால் ஆன மணிமண்டபத்தின் கீழ் பாறையில் வடிக்கப் பட்டிருக்கிறது





கிலோ மீட்டர்தான்) என்பது அவரது நம்பிக்கை. பிற்காலச் சோழர்கள் காலத்திலிருந்தே வரலாற்றுப் பின்னணியைக் கொண்ட கோடியக் கரையில் ராமாயணக் காலத்தோடு தொடர்புடைய சில இடங்களும் இருப்பது, ஆச்சர்யப் பட வேண்டிய உண்மை. இந்த ஊரின் இன்னொரு சிறப்பு, மூன்று பக்கமும் நீர் (மேற்கே சதுப்பு நிலங்கள்; தெற்கே பாக் ஜலசந்தி; கிழக்கே வங்கக் கடல்) ஒரு பக்கம் நிலம் (உப்பளங்கள்). ஆக, ஏறக்குறைய குட்டி தீப கற்பம். கடலும் காடும் கைகோக்கிற இடத்தில் ஆங்காங்கே உடலில் ஒட்டியிருக்கும் மச்சங்கள் போல குட்டிக் குட்டித் திட்டுகள். (ஆவலாக பக்கிரிசாமியிடம் அந்தத் திட்டுகளின் பெயர்களைக் கேட்டோம். ரொம்பவும் கூலாக, 'அதெல்லாம் யாருக்கு ஸார் தெரியும்!' என்றார்.)

### எங்கே இருக்கு?

**வே**தாரண்யத்திலிருந்து பன்னிரண்டு கிலோமீட்டர். சரியாக அரைமணி நேரப் பயணம். காரில் சென்றால்தான் இலகுவாக இருக்கும். கண்டிப்பாக கார் கண்ணாடியை இறக்கிவிட்டுக்கொண்டால்தான், இரண்டு பக்கங்களிலும்

வெள்ளிக் கம்பளமாக விரிந்து கிடக்கும் உப்பளங்களைப் பார்க்கமுடியும். கையில் வாருகோலை வைத்துக்கொண்டு தொழிலாளர்கள் உப்பை வாரிக்கொண்டும், சின்னச் சின்ன பாக்கெட்டுகளில் உப்பை நிரப்பிக் கொண்டும் இருக்கிறார்கள். ஆங்காங்கே குவியல்குவியலாகக் குவிக்கப்பட்டிருக்கும் உப்புக்கற்களில் சூரியன் பட்டுத் தெறிக்கையில் கண்களுக்குள்ளும் பிசுபிசுப்பு ஒட்டிக்கொள்வதை உணரலாம். ஆண் தொழிலாளர்கள் உப்பு மூட்டையை லாரிகளில் அடுக்கிக்கொண்டிருந்தனர். யாருக்குத் தெரியும்...? அந்த உப்பு மூட்டையின் ஒரு பிடி நாளை நம் வீட்டுக்கு வந்தாலும் வரலாம். பீகார், உத்தரப்பிரதேசம், கேரளாவிலிருந்துதான் அதிகமானோர் உப்பளங்களில் வேலை பார்க்க வருகிறார்களாம். தூத்துக்குடியைப் போல வேதாரண்யத்தில் கடல் நீரிலிருந்து உப்பைப் பிரித்தெடுப்பதில்லையாம். எண்பது சதவிகிதம் நிலத்தடி நீர்தானாம். நிலத்தடி நீரை வெளியே கொண்டு வருவதற்கான பிரத்யேக பம்பிங் ஸ்டேஷன்களும் இருக்கின்றன. நாம் சென்றிருந்தது மதிய நேரம் என்பதால் காற்றில் பிசுபிசுப்பு கொஞ்சம் அதிகமாகவே இருந்தது. காற்றை நுரையீரல் ஆழம் வரை இழுத்துச் சுவாசித்துப் பாருங்கள், சற்றுக் கூடுதலாகக் கரிக்கிறதா...? அப்பாடா... கோடியக்கரையை நெருங்கிவிட்டோம். அதற்கு முன்பு ஒரு முக்கியமான இடத்தைச் சொல்லியாக வேண்டும். அது... ராமர் பாதம்.

## ராமர் பாதம்

**வே**தாரண்யத்திலிருந்து கோடியக்கரை போகிற வழியிலேயே மூன்றாவது கிலோமீட்டரில் இருக்கிறது ராமர் பாதம். அயோத்தியில் பிறந்தார் ராமர். பாதம் மட்டும் இங்கே எப்படி? குழப்பமாக இருக்கிறதா..? சீதாதேவியை ராவணன் கடத்திக்கொண்டு வந்துவிட்டான் என்று ராமருக்குத் தெரிய வந்ததும், சீதாவை மீட்டு வருவதற்காக வேதாரண்யம் வருகிறார். பிறகு எங்கே போவதென்று தெரியவில்லையாம். பிள்ளையாரிடம் கேட்கிறார். அவர், 'தென்கிழக்காகப் போனால் ஒரு மணல்மேடு வரும். அங்கிருந்து


காட்டுக்குதிரை


வெளிமான்

பார்த்தால் ராவணன் கோட்டை தெரியும்' என்று விரல்காட்டுகிறார். ராமர் நடந்து சென்ற சாலை இன்றளவும் சேது ரஸ்தா என்றழைக்கப்படுகிறது. ராமருக்கு வழி காட்டிய பிள்ளையார், சேது ரஸ்தாவில் அமர்ந்தகோலத்தில் ஆட்காட்டிவிரலை நீட்டியபடி இப்போதும் வழிகாட்டிக் கொண்டிருக்கிறார். 'ராமர் பாதம் - தமிழ் நாடு வனத்துறை' நம்மை வரவேற்கிறது. ஒவ்வொரு படியாக ஏறிச் சென்றால் கிட்டத்தட்ட இருபத்தைந்து அடி உயரத்தில் இருக்கிறது ராமர் பாதம். சிமெண்டால் ஆன மணிமண்டபத்தின் கீழ் பாறையில் வடிக்கப்பட்டிருக்கிறது. ராமனை விட்டு எப்போதும் பிரியாத லட்சுமணன் பாதம் எங்கேயாவது அருகில்தான் இருக்குமென்று மனம் தேடத் தொடங்கியது. மனம் தேடத் தொடங்கினால் முடிவேது? இங்கிருந்து ராமன் பார்க்கும்போது ராவணன் கோட்டையின் பின்புறம் தெரிந்ததாம். ஒரு வீரன் பின்புறமாகச் சென்று தாக்குவது வீரமாகாது என்றுதான் ராமேஸ்வரம் சென்று கோட்டையின் முன்புறமாகத் தாக்கினாராம். மணல்மேட்டிலிருந்து முப்பதடி உயரத்தில் இருக்கும் வியூ டவர் மீது ஏறிப் பார்த்தோம். கண்ணுக்கெட்டிய தூரம் மட்டும் கடலும், புதர்க்காடுகளுமே தெரிந்தனவே தவிர இலங்கையோ ராவணன் கோட்டையோ தெரியவில்லை. நம் நோக்கம் ராமர் பாதத்தைப் பார்ப்பதன்றி, ராவணன் கோட்டையைப் பார்ப்பதல்ல என்று நினைவுக்கு வர, கீழிறங்கி வந்து பாதத்தைக் கண்ணில் ஒற்றிக்கொண்டோம். இப்போது கார் சென்று நின்ற இடம் வன விலங்குகள் சரணாலயம்.

## வனவிலங்கு மற்றும் பறவைகள் சரணாலயம்

இங்குதான் ஆரம்பத்தில் பேசிய பக்கிரிசாமி நம் காரில் ஏறிக்கொண்டார். கோடியக்கரை காடு கிட்டத்தட்ட இருபத்தைந்து சதுரகிலோமீட்டர் பரப்பளவு கொண்டதாம். வனத்துறையினர் காட்டை மூன்று வகையாகப் பிரித்திருக்கின்றனர். புதர்க்காடுகள், அடர்காடுகள், மூலிகை வனம். முதலில் நாம் புதர்க்காட்டின் வழியாகத்தான் காட்டின் உள்ளே பிரவேசிக்க முடியும். இங்கிருந்து ஆரம்பித்து காட்டின் உள்ளே நான்கைந்து கிலோமீட்டருக்கு, கடற்கரை வரை மண்சாலை போட்டிருக்கிறது வனத்துறை. சாலையில் போகும் போது, தூரத்தில் காட்டுக் குதிரையும், பக்கத்தில் வெளி மான்களும் மேய்ந்துகொண்டிருந்தன. இந்தக் காட்டின் ஸ்பெஷலே வெளிமான்கள்தானாம். உலகளவில் அழிந்து வரும் இந்த வகை மான்கள் இங்கே இரண்டாயிரத்துக்கும் மேல் இருக்கின்றனவாம். புள்ளிமான்கள் ஐந்நூறு ப்ளஸ் இருக்குமாம். கூடவந்த நண்பர், ''குள்ளநரி இருக்காங்க?''ன்னு கேட்டார். பக்கிரிசாமி, ''நாட்டுக்குள்ள இருக்கற அளவுக்கு, காட்டுக்குள்ள கிடையாது ஸார்!'' என்று டபாய்க்க கலகலப்பானது கார். கொஞ்ச தூரம் சென்றதும் காட்டுப்பன்றி காரை உரசியபடி குறுக்கே போனது. டிரைவர் பதறியபடி காரை நிறுத்திவிட்டு, ''வாகனத்துல பன்றி மோதக்கூடாது ஸார்'' என்று காட்டில் சகுனம் பார்த்தார். புதர்க்காட்டின் தொடர்ச்சியாக மூலிகைச் செடிகள் இருக்

**கோடியக்கரை காட்டின் ப்ளஸ்ஸே, வெளிமான்கள்தான். அழிந்து வரும் இந்த வகை மான்கள், இங்கே 2000க்கும் மேல் இருக்குமாம்.**

கின்றன. 317 வகையான மூலிகைச் செடிகளில் 150 வகை, உலகில் வேறெங்கும் கிடையாதாம். கடலும் காடும் அருகருகே இருப்பதால் இங்கே நிலவும் தட்பவெப்ப நிலைகள்தான் மூலிகைச் செடிகள் வளர்வதற்குக் காரணமாம். மோதிரக் கண்ணே, கோவைபிரண்டே, சிறுவாகை, காட்டுக்கொய்யா, குமுனை... போன்றவை முக்கியமான மூலிகைகள். அரிய மூலிகை வகைகள் இருக்கறதுனால இங்கே அரசாங்கம் மூலிகை ஆராய்ச்சி நிலையம் அமைத்தால், நல்லா இருக்கும்னு நம் மனசுக்குத் தோணிச்சு. அரசாங்கத்துக்குத் தோணணுமே. வேடந்தாங்கலுக்கு அடுத்தபடியாக வெளிநாட்டுப் பறவைகள் அதிகம் வருவது கோடியக்கரைக்குத்தானாம். சீஸன் நவம்பர் டு பிப்ரவரி. கார் சத்தம் கேட்டதும் அருகே தீனி பொறுக்கிக் கொண்டிருந்த காட்டுக்கோழி ஒன்று பறந்துசென்று லைட் ஹவுஸ் மேல் உட்கார்ந்தது.

## கலங்கரை விளக்கம்

மொத்தம் மூன்று லைட் ஹவுஸ்கள் உள்ளன, கோடியக்கரையில். ஒன்று பராந்தகசோழன் காலத்தில் கட்டப்பட்டது. இரண்டாவது, 120 வருஷத்துக்கு முன்னாடி பிரிட்டிஷ் காலத்தைச் சேர்ந்தது. கடைசியா, 180 அடி உயரம் கொண்ட ஒரு லைட் ஹவுஸ். நாம் முதலில் சென்றது பராந்தகன் லைட் ஹவுஸுக்கு. அமரர் கல்கி வாசகர்களுக்கு இது படு பரிச்சயம். அவர் வந்தியத்தேவனையும், பூங்குழலியையும், உலவவிட்ட இடம். இங்கிருந்துதான் ராஜராஜசோழன் இலங்கைக்குப் படை நடத்திச் சென்றிருக்கிறார். கிட்டத்தட்ட 1200 வருஷங்களுக்கு முற்பட்ட அந்த லைட் ஹவுஸ் இன்றைக்கு உடைந்து சிதிலமடைந்து கிடக்கிறது. அதுவும் சுனாமிக்குப் பிறகு இன்னும் மோசமாகிவிட்டதாம். நமக்கு பழைமையைப் பாழ்படுத்திப் பார்ப்பதில்தானே அதிக ஆசை. பிரிட்டிஷ் காலத்தில் கட்டப்பட்ட லைட் ஹவுஸை ஃபோட்டோ எடுக்க மட்டும்தான் அனுமதி. 180 அடி உயரம் கொண்ட மூன்றாவது லைட் ஹவுஸ் கோடியக்காடு ஊரை ஒட்டி இருக்கிறது. தமிழகத்திலேயே உயரமான லைட் ஹவுஸ் இதுதானாம். (இங்கிருந்துதான் நம் பக்கிரிசாமி இலங்கையைப் பார்த்தாராம்.) அதன்மேல் ஏறிப் பார்க்கும்போது நம்மை குழகர் கோயில் கோபுரம் 'வா'வென்று அழைக்கிறது.

## குழகர் கோயில்

மிகப் பழைமையான சிவன் கோயில். காலத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. சிவன் அமிர்தகுழகேசுவரராக அருள் பாலிக்கிறார். சுப்ரமணியசுவாமி தன் குடும்பத்தோடு இங்கு குடியமர்ந்துள்ளார். சோழர்கள் காலத்தில் கல் திருப்பணி நடந்திருக்கிறது. 1940ல் ஒரு முறை குடமுழுக்கு நடந்திருக்கிறது.


குழகர் கோயில்

அதன் பிறகு இப்போது குட முழுக்கு நடைபெற கடந்த இரண்டு வருடங்களாக கோயில் வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன.




கடிதாய்க் கடற்காற்று
வந்தெற்றக் கரைமேல்
குடிதானயலே இருந்தாற்
குற்றமாமோ?
கொடியேன் கண்கள்
கண்டன கோடிக் குழகீர்
அடிகேள் உமக்கார்
துணையாக இருந்தீரே?

- என்று ஸ்ரீசுந்தரமூர்த்தி நாயனார் ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன்பே இங்கு வந்து குழகரைப் பாடியிருக்கிறார். ஆனால், இப்போது கோயிலைச் சுற்றி கிட்டத்தட்ட இரண்டாயிரம் குடும்பங்களுக்கு மேல் இருக்கின்றனவாம். தரிசனம் முடித்து விட்டு நாகைக்கு காரில் திரும்புகையில் நம்மைக் கேள்வியாகக் குடைந்தவற்றைக் கீழே தருகிறோம்!

**கேள்விகள் பத்து!**

1. பயணிகள் கோடியக்கரையில் வந்து தங்கிச் சுற்றிப்பார்க்க விடுதி எப்போது அமைப்பார்கள்? 2. உயரமான வியூ டவர் இல்லையே ஏன்? 3. வேதாரண்யத்திலிருந்து அகலமான சாலை வசதி வருமா? 4. கோடியக் கரை காடு உயிரியல் பூங்காவாகாதா? 5. கடலில் உல்லாசமாகச் சென்று வர படகுச் சவாரி கனவுதானா? 6. கோடியக் கரை காட்டைப் பற்றிப் புத்தகக் குறிப்புகள் ஏனில்லை? 7. மின்சார வசதி எப்போது சாத்தியம்? 8. பூங்காக்கள் மலராதா...? 9. நல்ல மீன்காட்சி சாலை அமைக்கும் யோசனை அரசாங்கத்துக்கு இருக்கா? 10.கடல்சார் தொழிற் சாலைகள் ஏன் அமையவில்லை....?

தமிழகத்திலேயே மிக உயரமான (180 அடி) லைட் ஹவுஸ் கோடியக்காட்டில் உள்ளது.

நாகை வந்து இறங்கும்வரை நமக்கு விடை கிடைக்கவில்லை. எத்தனை காலத்துக்குக் கேள்விகள் கேள்விகளாக இருக்கப்போகின்றன என்ற கேள்வியோடுதான் இந்தப் பயணக் கட்டுரையை முடிக்கவேண்டி இருக்கிறது!

வாசகர் யோசனை:

**ஜானகிராமன், வேதாரண்யம்**



பிரிட்டிஷ் காலத்து லைட் ஹவுஸ்

# துஷ்டப் பெண்ணா? துள்ளும் மானா?

வந்தியத்தேவன் கரையை நோக்கி ஓட ஆரம்பித்தான். ஒரு தடவை பூங்குழலி அவனைத் திரும்பிப் பார்த்தாள். பிறகு அவளும் ஓடத் தொடங்கினாள். வீடும் கலங்கரை விளக்கமும் இருந்த பக்கத்துக்கு எதிர்ப்பக்கமாகக் காட்டை நோக்கி ஓடினாள்!

ஆகா! இவள் துஷ்டப்பெண்! துஷ்டப்பெண்ணா? அல்லது வெறும் பைத்தியமா? இந்தப் பைத்தியத்தினிடமிருந்து நமது அரைச்சுருளை எப்படியும் வாங்கியாக வேண்டுமே...?

இரண்டு தடவை கடலில் இடறி விழுந்து ஒருவாய் உப்புத் தண்ணீரும் குடித்துவிட்டு வந்தியத்தேவன் மெதுவாகக் கரையேறினான். பிறகு அந்தப் பெண்ணைத் தொடர்ந்து ஓடினான். ஓட ஓட, அவனுடைய ஓட்டத்தின் வேகம் அதிகமாயிற்று. சற்றுத் தூரத்தில் ஐம்பது அறுபது மான்களின் கூட்டம் ஒன்று ஓடியது. மான்கள் மிரண்டு பாய்ந்து ஓடுவது - தாவித் தாவிக் குதித்து ஓடுவது - என்ன அழகான காட்சி! ஏன்? இதோ இந்தப் பெண் குதித்துக் குதித்து ஓடுகிறாளே? இதுவும் அந்த மான்களின் ஓட்டத்தை விட அழகில் குறைவாயில்லை! இம்மாதிரி இயற்கையாகவும் யதேச்சையாகவும் வாழும் பெண்களின் அழகே அழகுதான்! ஆனால் இதையெல்லாம் அவளிடம் சொல்லக்கூடாது. சொன்னால் காரியம் கெட்டுப் போய்விடும்! பெரியவர்தான் எச்சரித்திருக்கிறாரே...? இருந்தாலும், இவள் எதற்காக இப்படி வீம்பு பிடித்துக் கொண்டு ஓடுகிறாள்! காட்டில் புகுந்துவிட்டால் அப்புறம் அவளைக் கண்டுபிடிப்பது எப்படி?...

இதோ காட்டுக்குள் புகுந்தே விட்டாள். காரியம் கெட்டுக் குட்டிச்சுவராகி விட்டது. நம்மைப் போன்ற மௌடீகன் உலகிலேயே வேறு யாரும் இருக்க முடியாது! குரங்கின் கையில்



அகப்பட்ட பூமாலை திரும்பி வருமா?

வந்தியத்தேவனும் சிறிது நேரத்தில் காட்டுக்குள் புகுந்தான். அங்குமிங்கும் அலைந்தான். அவசரத்தினாலும் பரபரப்பினாலும் செடிகளைச் சரியாக விலக்கி விட்டுக் கொண்டு நடக்காமல் உடம்பெல்லாம் முட்களால் கீறிக் கொண்டான். ''பூங்குழலி பூங்குழலி!'' என்று கூச்சலிட்டான். பிறகு, ''மரமே! பூங்குழலியைக் கண்டாயோ?'' ''காக்காய்! பூங்குழலியைக் கண்டாயோ?'' என்றெல்லாம் கேட்க ஆரம்பித்தான். இது ஏது? நமக்கே பைத்தியம் பிடித்துவிடும் போலிருக்கிறதே! - என்று அவன் நினைக்கத் தொடங்கிய சமயத்தில், திடீரென்று மரத்தின் மேலிருந்து ஏதோ விழுந்தது!

"எங்க அப்பாவுக்கு அறுபதாம் கல்யாணம். எங்களுக்கு உடனே ஞாபகம் வந்தது திருக்கடையூர்தான். என்னோட சினேகிதிகளோட அப்பா- அம்மா அறுபதாம் கல்யாணம், இந்தக் கோயில்லதான் சிறப்பா நடந்துச்சு. அதனால எங்க அப்பா-அம்மா அறுபதுக்கு திருக்கடையூர் கிளம்பி வந்துட்டோம்!'' என்கிறார் சென்னை, அம்பத்தூரிலிருந்து வந்திருக்கும் ராஜராஜேஸ்வரி.

''பேரன் - பேத்திகள் காண, தாத்தா-பாட்டி இருவரும் கல்யாணம் பண்ணிக்கறது ரொம்ப சந்தோஷமான சமாசாரம் தானே? எங்க அப்பாவுக்கு நாலு பேரன்ங்க, மூணு பேத்திங்க. இதெல்லாம் பார்க்கவும் எனக்கு எப்போ அறுபது வரும்னு தோணுது!'' என்கிறார் அதே குடும்பத்தின் மூத்த மகன் நாகப்பன்.

திருக்கடையூரில் இதுபோல் தினசரி

# திருக்கோயிலுக்குள் திகு...திகு...

நிகழ்கிறது. தமிழ்நாட்டிலேயே இங்கு மட்டும் அப்படி என்ன விசேஷம்?

அபிராமிபட்டர் பிறந்த ஊர். அவரது பாடல்களைக் கேட்டுருகி, அபிராமி அம்பாள் ஸ்ரீசக்ரதாடங்கத்தை விண்ணிலே வீசியெறிந்து அமாவாசையை பூரண பௌர்ணமியாக்கிய அற்புதத் தலம். தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்து எடுத்த அமுதக் குடமே அமிர்தகடேஸ்வரராக இங்கு எழுந்தருளியுள்ளார்.

கருவறையில் அமிர்தகடேஸ்வரர். திருமேனியில் ஒரு பிளவும், பாசத் தழும்பும். அவை மார்க்கண்டேயர் வரலாற்றினை நினைவுபடுத்துகின்றன.

மிருகண்டு முனிவரின் புதல்வர், தமது பதினாறாம் வயதில் தலங்கள்தோறும் சென்று சிவபூசையில் ஈடுபடுகிறார். திருக்கடையூர் அமிர்தகடேஸ்வரரை பூஜிக்கையில் அவரது ஆயுள் நெருங்குகிறது. எமன் வந்து பாசக் கயிற்றை வீசுகிறார். மார்க்கண்டேயனுடன் சிவலிங்கமும் சேர்த்துக் கட்டப்படுகிறது. சிவலிங்கத்திலிருந்து இறைவன் காலசம்ஹாரமூர்த்தியாக வெளிப்படுகிறார். எமனை எட்டி உதைத்துத் தள்ளுகிறார். மார்க்கண்டேயர் காப்பாற்றப்படுகிறார். என்றும் பதினாறு வயதுடையவராக வாழ்வாயாக என்று மார்க்கண்டேயருக்கு வரமளிக்கிறார். சாபமும் விமோசனமும் இங்கே என்பதால் இத்



தலத்தில் ஆயுள் விருத்தி ஹோமம், அறுபது- எழுபது-எண்பது வயதுத் திருமணங்கள் நடத்தப் பெறுவது மிகச் சிறப்பு.

திருக்கடையூர் கோயில் உள்பிராகாரத்தில் எந்நேரமும் திருவிழாக் கூட்டம். குறைந்தபட்சம் ஒரு நாளைக்கு இருபது





- முப்பது திருமணங்கள். அதிகபட்சமாக எழுபது - எண்பது திருமணங்கள். அங்கு எழுப்பப்படும் ஹோமங்களால், கோயிலுக்குள் நுழைந்ததும் உடம்பில் திகுதிகுவென வெப்பம் ஒட்டிக் கொள்கிறது. இதனால் சுகாதாரக் கேடுகள் ஏராளம். கோயில் நிர்வாகம் கைகட்டி வேடிக்கை பார்க்கிறதா?

''அதுதான் இல்லை. கடந்த சில வருடங்களாகவே கூட்டம் அதிகரித்து வருகிறது. இருக்கிற இடத்துக்குத் தகுந்தாற்போல்



அவ்வப்போது ஒழுங்குபடுத்தி வருகிறோம். கோயிலின் வட புறம் ஒண்ணரைக் கோடி ரூபாய்ச் செலவில் திருமண மண்டபம் கட்ட முடிவாகியிருக்கிறது. அது முடிந்தால் ஒரே சமயத்தில் முப்பது தம்பதிகளுக்கு அறுபதாம் கல்யாணம் நடத்தலாம்!'' என்கிறது கோயில் நிர்வாகம்.

**வாசகர் யோசனை:**
**ஆர்.ராஜதுரை, சீர்காழி**

## திருக்கடையூர்

கணவனுக்கு அறுபது வயது நிறைவாகி, அறுபத்தொன்றாம் வயது துவங்கும்போது பிறந்த நட்சத்திரத்தன்று நடத்தப்படுவது அறுபதாம் கல்யாணம். குறிப்பிட்ட நபரின் பிறந்த நட்சத்திரம் வருகின்றபோது நாள், கிழமை யாரும் பார்ப்பதில்லை. அஷ்டமி, நவமி, பிரதமை என்றாலும் அன்றே நடத்தப்படுகிறது. அதனால்தான் தமிழ்நாட்டிலேயே தினந்தோறும் திருமணம் நடத்தி வைக்கப்படும் தலம் திருக்கடையூர்.

பாங்கள்

திருவாரூர் - நாகை மாவட்டத்தின் முக்கியப் பிரச்னையே, விவசாயக் கூலி வேலைகளுக்கு ஆட்கள் கிடைப்பதில்லை என்பதுதான்! ''முந்தியெல்லாம் ராமநாத புரத்துலேர்ந்து ஆளுங்க வருவாங்க. இப்ப யாருமே வர்றதில்ல. எப்பவும் போல உள்ளூர் விவசாயக் கூலிங்க வருவாங் கன்னுப் பார்த்தா... அவங்கல்ல நிறைய பேர் வெளியில வேலை தேடி போயிட றாங்க... போனவங்க போவட்டும். அட... மிச்சம் உள்ளவங்களாவது வேலைக்கு வரலாமில்ல. அவங்களும் வர்றது இல்ல. மூணு விஷயம் சொல்றேன். என் பேர் ஃபோட்டோ மட்டும் போட்டுடாதீங்க!'' என வேண்டுகோள் வைத்தார் ஒருவர்.

''விஷயத்தைச் சொல்லுங்க'' என்றோம்.

''ரெண்டு விஷயத்தால ஆம்பளை யாளுங்க வர்றதில்ல. ஒரு விஷயத்தால பொம்பளையாளுங்க கிடைக்கறது இல்ல. ரேஷன்ல கிலோ அரிசி ஒரு ரூபாய்க்குக் கிடைக்குது. குடும்பத் தலைவன் எப்படி யாவது ரெண்டு கூப்பன் அரிசி வாங்கித் தந்து, இதை வெச்சு ஒரு மாசத்தை ஒட்டுன்னு சொல்லிடறான். மீதி கையில இருக்கற பணத்துக்கு அப்பப்ப டாஸ்மாக் உள்ளே பூந்துடறான். நாலு நாள் வேலைக் குப் போறான். பத்து நாள் 'மப்புல' படுத் துத் தூங்குறான். பணம் இல்லேன்னா திரும்பவும் வேலைக்கு வர்றான். கிராமங் கள்ல இப்ப மத்திய அரசு பெண்களுக் குன்னு 'வேலை உறுதி அளிப்பு' திட்டத் தைச் செயல்படுத்தி வருது. வருஷத்துல நூறு நாள் வேலை. அதனால விவசாய வேலைக்கு பெண்கள் அவ்வளவு ஆர்வமா வர்றதில்ல. மொத்தத்துல கூலி வேலைக்கு ஆள் கிடைக்காம, டெல்டா மாவட்டங் கள்ல நெல் உற்பத்தி பாதிக்கப்படற நிலை மைக்கு வந்திடுச்சு!'' என்கிறார்.

''சொந்தமா நிலம் வெச்சிருக்கற விவசாயியா இருந்தாலும் சரி, கூலி விவசாயியா இருந்தாலும் சரி. தன்னோட புள்ளைகளை வயல்ல இறங்கி வேலை செய்யச் சொல்ல யாரும் தயாரில்லை. ஐ.டி.ஐ., பாலிடெக்னிக், காலேஜ் படிக்க வெச்சு, டவுன் பக்கம் அனுப்பிடறாங்க.

# விவசாயத்துக்கு







* அய்யூர் வேணு



* அசோகன்

# ஆட்கள் தேவை!

**''கூலி வேலைக்கு ஆள் கிடைக்காம, டெல்டா மாவட்டங்கள்ல நெல் உற்பத்தி பாதிக்கப்படற நிலைமை வந்திடுச்சு!''**

ஒவ்வொரு கிராமத்துக்கும் வர்ற ஏஜெண்ட்ங்க திருப்பூர் கம்பெனிகளுக்கு கொத்துக் கொத்தா ஆளுங்களைக் கூட்டிட்டுப் போயிடுறாங்க. இதுல பையன்களும் பொண்ணுங்களும் அடக்கம். ரெண்டு ஷிஃப்ட் வேலை பார்க்கலாம். கை நிறைய சம்பாதிக்கலாம். இதுல பொம்பளைப் புள்ளைங்களுக்கு 'மாங்கல்யத் திட்டம்'னு ஒண்ணு அறிவிச்சு மூணு வருஷம் ஒரு பேக்கேஜ்ல கூட்டிட்டுப் போயிடறாங்க. மூணு வருஷத்துல அந்தப் பொண்ணு நகை, சாமான், பணம் எல்லாம் சேர்த்துட்டு ஊருக்கு வருது. கண்ணாலம் ஆனதும், புருஷனையும் சேர்த்து திருப்பூருக்குக் கூட்டிட்டுப் போயிடுது. அப்புறம் எப்படி இங்க விவசாயக் கூலி ஆளுங்க கிடைப்பாங்க?'' என வினவுகிறார் பாங்கல் ஊராட்சி மன்ற முன்னாள் தலைவர் அசோகன்.

''**எ**ங்க ஊரு பசங்க ரொம்ப பேர் கேரளாவுக்குப் போயிட்டாங்க. அங்க மம்பட்டி வேலை, கொத்தனார் - மேஸ்திரினு வேலை செய்றாங்க. அதிகச் சம்பளம் கிடைக்குது. சொந்த ஊருக்கு லீவுல வரும்போது உள்ளூர்ல கூலி வேலைக்குக் கூப்பிட்டா வர்றதில்ல. அங்க ஒரு நாள் சம்பாதிக்கறதுக்கு, இங்க நாலு நாள் வேலை செய்யணும்னு அலுத்துக்கறாங்க. எதிர்காலத்துல விவசாயக் கூலிக்கு ஆளுங்க யாருமே வர மாட்டாங்கனு தோணுது!'' எனக் கவலை தெரிவிக்கிறார் தலைஞாயிறு ஒன்றிய கவுன்சிலர் (சி.பி.எம்) அய்யூர் வேணு.

வாசகர் யோசனை:

**ஆர்.ராம்சுப்ரமணி, திருவாரூர்**



# குடமுழுக்கு காணுமா... குழகர் கோயில்?

அமரர் கல்கியின் வாசகர்கள் 'பொன்னியின் செல்வ'னில் வரும் கோடியக்கரை குழகர் கோயிலையும் பூங்குழலியையும் மறந்திருக்க மாட்டார்கள். நாவலில் உலவிய கதைமாந்தர்களை நாம் நேரில் காண இயலாது. ஆனால், இடங்களை நேரில் சென்று பார்க்கலாம். மெய்சிலிர்த்துப் போகலாம். சிதிலமடைந்திருக்கும் குழகர் கோயிலும் நமக்கு வேதனை கலந்த மெய் சிலிர்ப்பையே தந்து நிற்கிறது.

இராஜகோபுரம் மற்றும் மூலஸ்தான கோபுரங்களுக்கான திருப்பணி வேலைகள் நடைபெற்று வருகின்றன; மிக மிக மெதுவாக. காரணம், நிதிப் பற்றாக்குறை. இதற்கு முன்னர் இக்கோயிலுக்குக் குடமுழுக்கு நிகழ்ந்து நாற்பத்து மூன்று ஆண்டுகள் ஆகின்றன! அப்படியெனில், கோயிலின் உள்கட்டமைப்பு எந்த அளவுக்குச் சீர்கெட்டுப் போயிருக்குமென நினைத்துப் பார்க்க வேண்டியுள்ளது. தற்சமயம் கோயிலின் குடமுழுக்கு திருப்பணிகள் துவங்கி, இரண்டு வருடங்கள் ஆகின்றன. துவங்கிய நிலையிலேயே தேக்கமடைந்து நிற்கிறது கோயில் திருப்பணி.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது, குழகர் கோயில். குலோத்துங்க சோழன் காலத்தில் கோயில் திருப்பணி நடைபெற்றுள்ளது. நகரத்தார்கள் முயற்சியில் 1940களில் கருங்கல் திருப்பணி நிறைவடைந்துள்ளது. அதன் பின்னர் நடந்த குடமுழுக்கு 1966ல்.

''சுந்தரமூர்த்தி சுவாமிகள் பதிகம் பாடிய திருத்தலம். சுவாமி லிங்க வடிவில் குழகேசராக கிழக்கு நோக்கி அமர்ந்து அருள்பாலிக்கிறார். கோயிலின் மற்ற திருப்பணிகள் பொதுமக்கள் மற்றும் பக்தர்கள் சார்பில் நடைபெற்று வருகின்றன. நிதித் தட்டுப்பாட்டினால், குடமுழுக்கு திருப்பணிகள் எப்போது நிறைவு பெறும் எனத் தெரியவில்லை. கோடியக்காடு குழகேசர் அமிர்தகடேசுவரர் ஆவார். பக்தர்கள் பலரும் முன் வந்து திருப்பணியில் பங்கேற்றால், குடமுழுக்கு விரைவில் நடைபெறலாம்!'' நம்பிக்கையோடு பேசுகிறார் அர்ச்சகர் சிவராஜ குருக்கள்.

புராணங்களில் ஸ்ரீ காளிபுரம். பின்னர் சீகாழி. எல்லோர்க்கும் புரிவதென்றால் சீர்காழி. காவிரி வடகரையின் வள பூமி. இறைவன் மூங்கில் வடிவமாகத் தோன்றி இந்திரனுக்கு அருள்புரிந்த தலம்.



நகரின் மையப் பகுதியில் அமையப் பெற்றுள்ளது அருள்மிகு சட்டைநாத சுவாமி திருக்கோயில். நான்கு கோபுர வாசல்கள். திருச்சுற்று மதில். பிரமபுரீசுவரருக்கும், திருநிலைநாயகிக்கும், திருஞான சம்பந்தருக்கும் தனித்தனியே சன்னிதிகள். கிழக்கு பார்த்தவை. உமையம்மை திருஞானசம்பந்தருக்குப் பொற்கிண்ணத்தில் ஞானப்பால் புகட்டியது இத்திருத்தலத்தில்தான். கோயிலின் மகா மண்டபத்தில் திருஞானசம்பந்தர் உற்சவ மூர்த்தியாகவும் எழுந்தருளியுள்ளார்.

வடக்கு உட்பிராகாரத்தில் ஸ்ரீ முத்துச்சட்டை நாதரும், தெற்கு உட்பிராகாரத்தில் திருமாளிகைப்பத்தியில் அறுபத்து மூவர்களும் மூலவர்களும் உள்ளனர். அங்கேயே சட்டைநாதர் பலிபீடம். மேற்குப் பிராகாரத்திலும் வடக்குப் பிராகாரத்திலும் மேலே மிக மிக சிறிய மலைக்குப் போக படிக்கட்டுகள்.

சிரமம் ஏதுமின்றி மேலேறிச் சென்றால், உமாமகேசுவரர், பெரிய உருவத்துடன் சட்டைநாத சுவாமியாக எழுந்தருளியுள்ளார்.

அதென்ன சட்டைநாதர்?

மகாவிஷ்ணு மாவலியின்பால் குறள் வடிவாகச் சென்று மூன்றடி மண் யாசித்து, விண்ணையும் மண்ணையும் ஈரடியால் அளந்து, மூன்றாவது அடியை அவன் தலை மேல் வைத்துப் பாதாள உலகுக்குச் செலுத்தினார். இதனை உணர்ந்த வடுகநாதர் தமது திருக்கரத்தால் விஷ்ணுவை மார்பில் அடித்துப் பூமியில் வீழ்த்தினார். மகாலட்சுமி மாங்கல்யப் பிச்சை வேண்ட, விஷ்ணு உயிர் பெற்று எழுந்து இறைவனை வணங்கினார். தன் தோலையும் எலும்பையும் அணிந்து கொள்ள வேண்டுமென விண்ணப்பம் செய்தார் விஷ்ணு. இறைவனும் எலும்பைக் கதையாகக் கொண்டு, தோலைச் சட்டையாகப் போர்த்தி அருள் செய்தார். தோலைச் சட்டையாகப் போர்த்திக் கொண்ட ஈஸ்வரனே சட்டைநாதர்!

# அதென்ன... சட்டைநாதர்?

சீர்காழி

# திருவாரூர் சோமசுந்தரம் பூங்கா

# எழுத்தாளர்கள்

**வேறு எந்த மாவட்டத்தோடு ஒப்பிடும்போதும் ஒன்றுபட்ட தஞ்சை மாவட்டத்தில் எழுத்தாளர்கள், கலைஞர்கள், படைப்பாளிகள், பத்திரிகையாளர்கள் அதிகம். முப்போகம் விளையும் விளைச்சலா...? ஆன்மிக முக்கியத்துவங்கள் மிகுந்திருப்பதா அல்லது வளமைக்கு இணையாக வீற்றிருக்கும் வறுமையா? என்ன காரணம்? திருவாரூர் சோமசுந்தரம் பூங்காவில் எழுத்தாளர்களை ஒன்றுகூட்டி விவாதத்தை முன்வைத்தோம். இதோ அவர்களின் கருத்துகள் :**

கவிஞர் வெற்றிப்பேரொளி:

இலக்கியம் எங்கே பிறக்கும்? ஒரு மனிதனின் வாழ்வாதாரத் தேவைகள் ஓரளவுக்குப் பூர்த்தியான ஒரு பூமியில்தானே? அப்படிப் பார்க்கையில் ஒன்றுபட்ட தஞ்சை மாவட்டத்தில் அந்த நிலைமைதான் நிலவுகிறது. இங்கு பசியால் வாடுவது கிடையாது. வயிறு நிறைந்திருக்கிறது. எனவே, மனிதனின் மனது அடுத்த கட்டத்தை நோக்கி நகர்கிறது. அதற்காக இங்கே வறுமையே கிடையாது என்று சொல்லவில்லை. அடிப்படைத் தேவைகள் பூர்த்தியாகி இருக்கின்றன. மேலும், இங்கே எவ்வளவு உன்னதங்கள் இருக்கின்றனவோ அவ்வளவு கீழ்மைத்தனங்களும் இருக்கின்றன. கூலிப் பிரச்னைக்காக மனிதனைக் கொளுத்தியதும் இங்கேதான் நடந்தது. கொழுத்த நிலக்கிழார்கள் இருப்பதும் இங்கேதான். இந்தச் சமூக ஏற்றத்தாழ்வுதான் படைப்பாளிகள் பிறக்கக் காரணம்.

எழுத்தாளர் சோலை சுந்தரபெருமாள்:

இங்கு கொண்டாடப்படக் கூடிய எழுத்தாளர்கள் வாழ்ந்தார்கள் என்பது உண்மைதான். ஆனால், அவர்கள் தூக்கிப் பிடித்ததெல்லாம் எதனை அல்லது யாரை என்பதுதான் என் கேள்வி! மேட்டிமைத்தனங்களையும், மேட்டுக் குடிகளையும்தானே... இங்கு பிறந்து நாம் கொண்டாடக் கூடிய எந்த எழுத்தாளர்கள் அடித்தட்டு மக்களின் பிரச்னையைப் படைப்பாக்கி இருக்கிறார்கள்? யார் சமதர்ம தத்துவ வெளிச்சத்தோடு எழுதியது? விரல் விட்டு எண்ணி விடலாம். தத்துவ வெளிச்சத்தோடு எழுத முன் வந்த தஞ்சை ப்ரகாஷ் போன்ற எழுத்தாளர்களின் எழுத்துக்களை முடக்கியது யார் அல்லது



எது? எல்லாம் மேட்டிமைத்தனங்களுக்கான சிந்தனைகள். இங்கிருந்து அதிகமான படைப்பாளிகள் உருவாகியிருப்பது உண்மை தான். அதே நேரத்தில் ஏன் ஒரு பெண் படைப்பாளிகூட உருவாகவில்லை அல்லது வெளிச்சத்துக்கு வரவில்லை? கவிஞர் இளம்பிறையைத் தவிர பெயர் சொல்லும் எந்தப் பெண் படைப்பாளியும் வரவில்லை என்பது வேதனைக்குரியதுதானே? எழுத்தாளர்களுக்குள்ளும் பாகுபாடு பாராட்டியது இந்த மண்தான்.

**'இலக்கிய ஆர்வலர்' தென்றல் சந்திரசேகரன்:**

இந்த மாவட்டத்தில் தொந்திகளும் உண்டு; பட்டினியால் ஒட்டிய வயிறுகளும் உண்டு. வளமையான வாழ்வுக்கான அத்தனை சாத்தியக்கூறுகள் இருந்தும், வறுமையின் பிடியில் இன்றைக்கும் மக்கள் இருக்கின்றனர். இந்த ஏற்றத்தாழ்வுகள் ஒன்றோடு ஒன்று உரசிக் கொள்ளும்போதுதான், படைப்பும் படைப்பாளிகளும் பிறக்கின்றனர். அதற்கான சாத்தியக்கூறுகள் நிரம்பக் கொண்டதுதான் ஒன்றுபட்ட தஞ்சை மாவட்டம். எனவேதான் இங்கே படைப்பாளிகள் அதிகம்.



**"ஏற்றத்தாழ்வுகள் ஒன்றோடு ஒன்று உரசிக்கொள்ளும்போதுதான், படைப்பும் படைப்பாளிகளும் பிறக்கின்றனர்."**

**எழுத்தாளர் உத்தமசோழன்:**

இங்கே எதையும் ரசிக்கிற மனப்பான்மை அதிகம். ஒரு ரசிகன், ரசனையின் உச்சத்துக்குச் செல்கையில் படைப்பாளியாகப் பரிணமிக்கிறான். மேலும், எதைச் செய்தாலும், சொன்னாலும் 'கலாபூர்வமாக' என்பது இங்குள்ளோர் உணர்வில் ஊறிய ஒன்று. எனவே, இங்கு படைப்பாளிகளும் கலைஞர்களும் பிறப்பதில் ஆச்சர்யமில்லை.

**எழுத்தாளர் நீதிதாசன்:**

எழுத வரும் இளைஞர்களை வழிநடத்தி ஆற்றுப்படுத்தும் ஆளுமைகள் இங்கு அதிகம். மேலும், பிழைப்புக்காகவும், இங்கு அதிகமானோர் எழுதுகின்றனர் என்பதை மறுக்க முடியாது. நல்ல சிறுகதை எழுதக்கூடிய ஒருவர் பிழைப்பு தேடி பத்திரிகையில் சேருகையில் சிறுகதை எழுத்தாளனை இழந்துவிட்டு பத்திரிகையாளனாக மாறிவிடும் அபாயம் இந்த மண்ணில் பிறந்தவர்களுக்கு நேர்ந்ததுண்டு. நான் யார் பெயரையும் சொல்லிப் புண்படுத்த விரும்பவில்லை.

**விவாதத்தில் கலந்துகொண்ட மற்ற படைப்பாளர்கள் மீனா சுந்தர், திருவாரூர் டி.முருகேசன், பி.செழியரசு, தி.நடராஜன், மணிகணேசன், அரிவழகன், நாகை ஜவஹர்.**






**திருவாரூர் நகராட்சிக்கும் சுகாதாரத்துக்கும் ஏணி வெச்சா கூட எட்டாதுங்க. நவீன கட்டணக் கழிப்பிடத்துக்கு எதிரே ஆவின் பால் நிலையம், சுகாதார வசதி குறைவான பேருந்து நிலையம் - அரசு மருத்துவமனை, திருவாரூரைச் சுற்றி சாக்கடை நீர் தேக்கம் என நம் வாசகர்கள் பிரச்னைகளின் பட்டியலையே நமக்கு அளித்திருந்தனர். அதன் அடிப்படையில் திருவாரூர் நகராட்சித் தலைவர் தென்னனைச் சந்தித்தோம்...**



"திருவாரூரை தனிமாவட்டத்தின் தலைநகரமா அறிவிச்சப்ப, அது கொஞ்சம் பெரிய கிராமம். இப்போ ஏதோ ஒரு டவுன்ங்கற அளவுக்கு, கொஞ்சமாவது முன்னேறியிருக்கு. இன்னும் சில வருஷங் கள்ல மற்ற மாவட்டத் தலைநகரங்கள் அளவுக்கு, சகல வசதிகளோடும் வளர்ச்சி அடைந்திடும்.

மாவட்ட அரசு மருத்துவமனை, மருத் துவக் கல்லூரி மருத்துவமனையா மாற்றம் பெற்றிருக்கு. அங்கே இருபத்தைந்து படுக் கைகள் மட்டுமே இருந்தன. இப்ப நூறு படுக்கைகள் அளவுக்குக் கொண்டு வரப் பட்டிருக்கு. மருத்துவமனை இன்னும் விரிவுபடுத்தப்பட்டு, மருத்துவர், பணியா ளர்கள் அதிக அளவில் பணியமர்த்தப்பட உள்ளனர். உள் மற்றும் புற நோயாளி களுக்கு தற்போது ஏற்பட்டிருக்கும் அசௌகர்யங்கள், அப்போது மறைந்து போகும்.

பேருந்து நிலையத்தில் கழிவறை அருகே ஆவின் பால் நிலையம் உள் ளது உண்மைதான். பேருந்து நிலையம் விரிவு படுத்தப்பட வேண்டி பதினொரு ஏக்கர் நிலம் வாங்கியுள்ளது நகராட்சி. தஞ்சை சாலையில் புதிய பேருந்து நிலையம் கட்டப்பட உள்ளது.

பழைய பஸ் நிலையம் பக்கத்துல, பொது மக்கள் குப்பையைக் கொட்டிட்டு இருந்தாங்க. தள்ளுவண்டி வியாபாரிகள் அங்கே வியாபாரம் பண்ணிட்டு இருப் பாங்க. அந்த இடத்தைக் கையகப்படுத்தி, கடைகள் கட்டிவிட்டு உள் பகுதியை சைக்கிள் மற்றும் டூ வீலர் நிறுத்துமிடமா அமைக்கலாம்னு போய்ப் பார்த்தோம். கம்யூனிஸ்ட் கட்சிக்காரங்க ஸ்டே வாங் கிட்டாங்க. அப்புறமா டூ வீலர் நிப்பாட்ட இடம் எங்கே, சைக்கிள் நிறுத்த இடம் எங்கேன்னு கேட்டா என்ன சொல்றது!

பாதாளச் சாக்கடைத் திட்டம் இன்னும் ஒரு வருஷத்துல முடிஞ்சுடும். அதுக்கு அப்புறம்தான் சாலைகள், வாய்க்கால் களைச் சீரமைக்க முடியும். ஒரு மழை பெய்ஞ்சா தண்ணீர் தேங்கிடுது. வயல் இருந்த இடத்துல வீடுங்க வந்துடுச்சு.

திருவாரூர் நகராட்சி

நவீனக் கழிப்பிடம்

# ''மக்கள் நினைத்தால் மாற்றம் வரும்!''



கு.தென்னன்

பாதாளச் சாக்கடையோட ஒட்டுமொத்தக் கழிவு நீரைக் கொண்டு சேர்க்க, கேக்கரையில முப்பது ஏக்கர் இடம் பார்த்திருக்கு. ஓடம்போக்கி வாய்க்கால் செடி கொடிகளை அகற்றணும். எல்லாமே பாதாளச் சாக்கடைப் பணிகள் நிறைவானதுக்கு அப்புறம்தான் செய்ய முடியும்.

நகராட்சிக்குப் புதுசா கட்டடம் கட்டி வர்றோம். தேரோடும் வீதிகள் நான்கையும் சிமெண்ட் சாலையா மாற்ற திட்டம் இருக்கு. சந்தைப்பேட்டை, இப்ப இருக்கற பஸ் ஸ்டாண்ட் எல்லாமே கோயில் இடம்தான். கலைஞர் முயற்சியாலதான் நகராட்சி நிர்வாகத்துக்கு அந்த இடங்கள் பெறப்பட்டிருக்கு.

திருவாரூர் நகரத்துல ஏழாயிரம் குடிசைகள். அவற்றை அகற்றினாத்தான் ரோடு நல்லா போட முடியும். அதனாலேயே சாலைகளை விரிவுபடுத்த முடியலை. திருவாரூர்ல எங்கே பார்த்தாலும் கோயில் இடமா இருக்கு. எப்படி இருந்தாலும் குடிசைகளை அகற்றி, அவர்களுக்கு மாற்று இடங்கள்ல வீடுகள் கட்டித்தர இருப்பதில், நகராட்சி வேகமா செயல்பட இருக்கு. மக்கள் மனசு வெச்சாத்தான் மாற்றங்களை ஏற்படுத்த முடியும்!'' என்கிறார் திருவாரூர் நகர்மன்றத் தலைவர் கு.தென்னன்.

வாசகர் யோசனை:

**டி. முருகேசன், திருவாரூர்**

# திசைகாட்டி

திக்கற்றோர்களைத் தேர்ந்தெடுத்துப் படிக்க வைக்கிற ஒரு குருகுலம், படிப்பு முடிந்தபிறகு அவர்களுக்கு வேலை வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுக்கும், அல்லது சொந்தமாகத் தொழில் துவங்க உதவிகளையும் செய்யும். ஆனால், இவற்றையெல்லாம் தாண்டி இன்னும் ஒரு படி மேலேயும் செய்கிறது வேதாரண்யம் கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம். என்ன அது...? திருமணம்தான். அதுவும் பெண்களுக்கு என்பதுதான் பாராட்டப்பட வேண்டிய விஷயம்!



அ.வேதரத்னம்

''காந்தியடிகளின் நிர்மாணத் திட்டங்களில் ஒன்றான பெண் கல்வியை மையமாகக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டதுதான் கஸ்தூர்பா கன்யா குருகுலம். 1946ம் ஆண்டு சர்தார் வேதரத்னம், அவரது மகன் பத்மஸ்ரீ அப்பாகுட்டி ஆகியோரால் ஆரம்பிக்கப்பட்ட இக்குருகுலத்துக்கு தன் சொத்தின் பெரும் பகுதியையும், பின்னர் அரசாங்கத்தால் தனக்குக் கிடைத்த தியாகி மான்யம் முழுவதையும் அளித்து ஓர் அறக்கட்டளையை ஏற்படுத்தினார் சர்தார் வேதரத்னம்'' என்கிறார் அவரது பேரன் அ.வேதரத்னம்.



''திக்கற்ற பெண் குழந்தைகளை குருகுலமே முழுப் பொறுப்பேற்று தத்தெடுத்து வளர்க்கறோம். அவங்களுக்கு கல்வியும் தொழிற்கல்வியும் கற்றுத் தர்றோம். அதன் பின் குருகுலமே அவர்களுக்குத் திருமணமும் செய்து வைக்குது. திருமணத்துக்குப் பின் அவர்கள் எந்த நேரத்திலும் தாய்வீட்டுக்கு வந்து போவது போல குருகுலத்துக்கு வந்து போகலாம். தாய் இருந்து என்னென்ன கடமைகளைச் செய்வாரோ அவை அனைத்தையும் குருகுலம் செய்கிறது. இதுவரை பன்னிரண்டு திருமணங்கள் நடைபெற்றிருக்கின்றன'' என்கிறார்.

''10 முதல் 12-ம் வகுப்பு வரை படித்துவிட்டு வேறு வேலைவாய்ப்பு கிடைக்காத பெண்களுக்கு குருகுலத்திலேயே அச்சுக் கோத்தல், ஆப்செட் மற்றும் அச்சிடுதல், புக் பைண்டிங் ஆகிய வேலைகளைக் கற்றுத் தர்றோம். மின்னணுவியல் துறையில் ரேடியோ, தொலைக்காட்சிப் பெட்டி தயாரிப்பு, ஆடியோ, வீடியோ பயிற்சிகளுடன் அகர்பத்தித் தயாரிப்பும் இங்கு உண்டு. இங்கு பயின்ற பெண்களுக்கு அரசு நடத்தும் பல்நோக்கு பயிற்சியாளர் திட்டத்தில் சித்த மருத்துவக் கல்லூரியில் முதல் வாய்ப்பு அளிக்கப்படுது. இங்கு படித்த பெண்கள் பலர் இன்று டாக்டராகவும், இன்ஜினியராகவும், உள்ளாட்சித் துறையிலும் இருக்கின்றனர்'' என்கிறார்.

மொத்தத்தில் கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் திக்கற்ற பெண்களுக்கு ஒரு திசைகாட்டியாக இருக்கிறது.

# சிறைக்கு வந்த நீதிபதி!



உப்புக்கு வரி விதித்ததை எதிர்த்து உப்பு எடுத்ததற்காக மூதறிஞர் ராஜாஜியை பிரிட்டிஷ் கவர்ன்மெண்ட் சிறை வைத்த இடம் வேதாரண்யத்தில் இருக்கிறது. உப்புத் துறையின் கட்டுப் பாட்டில் இருக்கும் அந்த அறை கிட்டத் தட்ட ஒரு ஸ்டோர் ரூம் அளவுக்குத்தான் இருக்கிறது. ராஜாஜி சிறைவைக்கப்பட்ட இடத்துக்கே நீதிபதி வந்து தீர்ப்பு கூறி யிருக்கிறார். குற்றம் சாட்டப்பட்டவர் இருக்கும் இடத்துக்கே வந்து ஒரு நீதிபதி தண்டனை வழங்கிய முதல் மற்றும் கடைசி நிகழ்வு இதுதான். மேலும், ராஜாஜியை எந்தப் பிரிவில் கைது செய்யலாம் எனக் குழப்பம் நீடித்த போது, அவரே, 'என்னை இந்தப் பிரிவில் கைது செய்யுங்கள்' என்று ஆலோசனை சொல்லியிருக்கிறார். போலீஸ் வந்து கைது செய்யும் வரை காத்திருந்து கைதாகி இருக் கிறார். ராஜாஜியைக் கைது செய்து அழைத்துப் போகும் போது, பொதுமக்கள் எதிர்ப்பு தெரிவிக்க, பிரிட்டிஷ் போலீஸ் ராஜாஜியிடம், 'எங்கள் கடமை யைச் செய்ய மக்கள் ஒத் துழைக்க நீங்கள் உதவ வேண்டும்' என்று கேட்டுக் கொள்ளவே, அவரும் மக் களை அமைதிப்படுத்தி விட்டுக் கைதாகியிருக்கிறார். இதுபோன்ற அபூர்வ சம் பவங்கள் இந்தியாவிலும் நடந்திருக்கின்றன.

• ராஜாஜியைச் சிறை வைத்த இடம்





• ராஜாஜி உப்பு எடுத்ததற்கான நினைவுத்தூண்

• சர்தார் வேதரத்னம்

• ராஜாஜி

**வேதாரண்யம்**



## சுனாமி நினைவுச் சின்னம்

சுனாமியில் மரண மடைந்த பல்லாயிரக் கணக்கான சடலங்களை, கொத்துக் கொத்தாக ஒவ்வொரு பகுதியிலும் அடக்கம் செய்துள்ள னர். அதில் ஒன்று, நாகை - வேளாங்கண்ணி சாலையில் புதுமைக் குளத்தில் அமைந்துள்ள சுனாமி நினைவுச் சின் னம்.

"சுனாமியின் போது உயிர் பிழைத்த குடும் பங்களில் ஒன்று என் னுடையது. அதற்கு நன்றிக்கடனாகவே இங்கு, வாட்ச்மேனாக வந்து சேர்ந்துள் ளேன். இந்த இடத்தில் மட் டும் ஆழக் குழிதோண்டி, சுமார் மூவாயிரத்து எழுநூறு உடல்கள் புதைக்கப்பட் டுள்ளன. இதனைக் கட்டி முடித்ததிலிருந்து வாட்ச் மேனாக வேலை பார்க் கிறேன். கோயில் நிர்வாகம் தான் இதனைப் பராமரித்து வருகிறது. சுனாமிக்குப் பின்னர் நான் மீண்டு வந்து நேரில் பார்த்த, நாகை- அக்கரைப்பேட்டை - வேளாங்கண்ணி கடற்கரை கோரம் இன்னும் என் கண் களை விட்டு மறைய வில்லை!" என்கிறார் மாட சாமி.

நியூஸ் ஏந்தி பவன்

## இயற்கை எரிவாயு நவீன அரிசி ஆலை!

திருவாரூரில் இயற்கை எரிவாயு நவீன அரிசி ஆலை இயங்கி வரு கிறது. 1967ல் துவங்கப் பட்டு, தஞ்சாவூர் கூட்டுறவு இணையத்தின் கீழ் இணைந்து செயல்பட்டது. 1977லிருந்து தமிழ்நாடு நுகர்பொருள் வாணிபக் கழகத்தின் கீழ் கொண்டு வரப்பட்டு இயங்கி வரு கிறது. திருவாரூர் மாவட் டத்தில் தமிழ்நாடு நுகர் பொருள் வாணிபக் கழகம் நேரடிக் கொள்முதல் செய் வதிலிருந்து ஒரு பகுதி நெல், இங்கு அரைவைக் குக் கொண்டு வரப்படு கிறது. ஒருநாளைக்கு சரா சரி எண்பது மெட்ரிக் டன்



நெல் அரைவை ஆகி றது.

தமிழகத்தில் இயங்கி வரும், இயற்கை எரி வாயு நவீன அரிசி ஆலை இது ஒன்று மட்டுமே.





## 'கல்கி' அய்யா

நம்மில் பலர் ஐம்பது வயதிலெல்லாம் வி.ஆர்.எஸ். வாங்கிக் கொண்டு வீட்டில் 'ஹாயாக' இருக்க நினைக்கிறோம். தமது தொண்ணூற்று ஐந்தாவது வயதில் காலமான சுதந்திரப் போராட்ட வீரர் ஜி.நடராஜன் திருவாரூரைச் சேர்ந்தவர். தியாகிகள் பென்ஷனையும் மறுத்து கல்கி உட்பட நாளிதழ் மற்றும் பல பத்திரிகைகளின் முகவராய் இருந்தவர். தமது தொண்ணூறாவது வயதிலும் பத்திரிகைகளை சைக்கிளில் கொண்டு சென்று கடைகளில் அளித்தவர். 'கல்கி' பத்திரிகை மீது மிகுந்த ஈடுபாடு கொண்டவர். இவரை அந்தப் பகுதியைச் சேர்ந்தவர்கள் 'கல்கி அய்யா' என்றே அழைத்தனர். இவரைப் பற்றிய இன்னொரு சுவையான தகவல். இன்றைய முதல்வர் கருணாநிதி ஹிந்தி எதிர்ப்புப் போராட்டம் நடத்தியபோது, இவர் அதனை எதிர்த்து தமது ஆதரவாளர்களுடன் சேர்ந்து 'ஹிந்தி ஆதரவுப் போராட்டம்' நடத்தியவர்.



ஜி.நடராஜன்

## சமன் செய்த அகஸ்தியர்!

வடக்கே கைலயங்கிரி. அங்கு பார்வதி – பரமேஸ்வரர் திருக்கல்யாணம். தேவாதிதேவர்களும் முனிவர்களும் ஒருங்கே கூடிவிட்டனர். அதனால் பூமி சமநிலையில் இல்லை. வடக்கு தாழ்ந்தும், தெற்கு உயர்ந்தும் போனது. பார்த்தார் பரமேஸ்வரர். பல முனிவர்களை அழைத்தார். 'தெற்கே வேதாரண்யம் சென்று அங்கு தங்குங்கள். இதே திருமணக் கோலத்தை அங்கு காட்சியாகக் காண்பீர்கள். அதே வேளையில் பூமியும் சமநிலை எய்தும்' என்கிறார். முனிவர்கள் எவரும் அதற்குச் சம்மதிக்கவில்லை.

அகஸ்திய முனிவரை அழைக்கிறார். பரமேஸ்வரன் வாக்கு ஏற்று, வேதைக்கு வருகிறார். வடக்கும் தெற்கும் சமநிலை அடைகிறது. அகஸ்திய முனிவருக்கு, பார்வதி – பரமேஸ்வரன் திருமணக் காட்சி தெரிகிறது. அங்கேயே தங்கி விடு கிறார் அகஸ்தியர். அந்த இடம் தற்போதும் வேதாரண்யத்துக்கு அருகில் அகஸ்தியன்பள்ளி என்றே அழைக்கப்பட்டு வருகிறது.





''நாகை மாவட்டம் பந்தநல்லூர் பக்கத்துல காகிதப் பட்டறை என்னோட பூர்விகக் கிராமம். பாதிரியார் சீகன் பால்கு, இங்கதான் முதன்முதலா காகித ஆலையை ஆரம்பிச்சார். அதனாலயே காகிதங்களையும் என்னையும் பிரிக்க முடியாம போயிடுச்சு!'' எனப் புன்னகையுடன் சொல்லும் பூம்புகார் வீர.செல்வம், மயிலாடுதுறையிலிருந்து வெளிவரும் 'நம்ம ஊரு செய்தி' மாத இதழின் தலைமை நிருபர்.

அப்பா வீராசாமி, தி.மு.க. இலக்கிய அணி பேச்சாளர். அம்மா யசோதா. வீர. செல்வத்தின் மனைவி கலா, பூம்புகார் ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளியில் இடைநிலை ஆசிரியை. விஷ்ணுபிரியா, கலைச் செல்வி என இரண்டு குழந்தைச் செல்வங்கள்.

''நான் பணியாற்றும் மாத இதழின் பத்தாம் ஆண்டு நிறைவு விழா 2003ல் மயிலாடுதுறையில் நடைபெற்றது. அதற்கு தினத்தந்தி ஆசிரியர் சண்முகநாதன் வந்திருந்தார். அவரிடம் என் எழுத்து ஆர்வம் குறித்துப் பேசினேன். 'உங்க ஊருக்குப் பக்கத்து ஊர்க்காரர்தான் அமரர் கல்கி. நெறையப் படிங்க. நெறைய எழுதுங்க. கல்கி போல எழுத்தாளரா வாங்க'னு என்னை வாழ்த்தினார்.

2004ல் எனக்குத் திருமணம். வந்திருந்த பரிசு பார்சல்களை அன்றிரவு நானும் என் மனைவியும் பிரித்துக் கொண்டிருந்தோம். ஒரு பெரிய பார்சல். பிரித்துப் பார்த்தோம். அமரர் கல்கியின் 'பொன்னியின் செல்வன்' அத்தனை பாகங்களும். எங்களின் குடும்ப டாக்டர் திருவெண்காடு ஜெயராஜமூர்த்தி பரிசாக அளித்திருந்தார். அந்த நேரத்தில் வயதான மூதாட்டி ஒருவர் சைகை செய்து என் மனைவியை தூரமாய் அழைத்துச் சென்று காதில் ஏதோ சொன்னார். சாந்தி முகூர்த்தத்துக்கு நேரம் சரியில்லாததால் வேறு நாளைக்குத் தள்ளி வைத்து விட்டார்களாம். பிறகென்ன? தனியறையில் நான் பொன்னியின் செல்வன் படிக்கத் தொடங்கினேன். வாசிக்க வாசிக்க நானே வந்தியத்தேவனாக மாறி, குதிரை மீதேறி பயணிக்கத் தொடங்கிவிட்டேன். பொழுது புலர்ந்தது எப்போது எனத் தெரியவில்லை!'' என்கிறார் வீர.செல்வம்.

# முதலிரவில் வந்தியத்தேவன்!

* வீரசெல்வம் குடும்பத்தினர்



சிவாஜி த சுப்ரீம் பாஸ்

11

# வனதேவதை அலங்காரம்!

மரபின்மைந்தன் முத்தையா

அது ஆழியாறு பரம்பிக்குளம் அணைகள் கூடக் கட்டப்படாத நேரம். டாப்ஸ்லிப் பகுதி வனங்கள் அப்போது தமிழகத்தைச் சேர்ந்திருந்த மலபார் மாவட்டத்தின் அங்கமாக இருந்தன. இந்த வனப் பகுதியில் நடந்த முகாமுக்கு, வேட்டை உரிமங்கள் வைத்திருந்த நண்பர்களைப் பங்கேற்பாளர்களாகவும், வேடிக்கை பார்க்க விரும்பியவர்களைப் பார்வையாளர்களாகவும் அழைத்திருந்தார் முத்து மாணிக்கம்.

டாப்ஸ்லிப்பில் இருந்து பத்து கி.மீ. தொலைவில் சுங்கம் என்றோர் இடம். இங்கேதான் வன அலுவலர்களின் குடியிருப்புகள் இருந்தன. காட்டு யானைகளைப் பிடித்துப் பழக்குகிற கொற்றடிகள் இங்கே அமைந்திருந்தன. இவற்றுக்கு யானைப்பந்தி என்று பெயர். இங்கிருந்து சில கிலோமீட்டர் தொலைவில் கொச்சிக் காட்டுக்கும் மலபார் மாவட்டத்துக்கும் நடுவே ஓடுகிற ஆறு தேக்கடியாறு. இங்கு வனவாசிகளும் மற்றவர்களும் வந்து கும்பிடுவது வழக்கம்.

இதற்கருகே வேட்டைக் கூடாரங்களை முத்து மாணிக்கத்தின் பணியாட்கள் அமைத்தனர். முகாம் என்றால் சிறு சிறு கூடாரங்களில் முடங்கிக் கொள்வதல்ல. சமையலுக்குத் தனி கொட்டில்கள், தங்குவதற்குத் தனி கொட்டில்கள், வேலையாட்களுக்குத் தனி கொட்டில்கள் என்று வசதியாக அமைக்கப்பட்டிருந்த முகாம் அது. மூங்கில்களை வெட்டிக் கட்டில்கள் அமைக்கப்பட்டன. யானைகளில் ஏறி வேட்டைக்குச் செல்ல வசதியாய் பழக்கப்பட்ட யானைகள் நிறுத்தப்பட்டிருந்தன.

ரசனையோடும் வசதியோடும் அமைக்கப்பட்டிருந்த ஆத்துச்சேரி முகாமைப் பார்த்து அசந்தே போனார் சிவாஜி. அவருடன், நடிகர்கள் எம்.ஆர்.சந்தானம், டி.ஆர்.ராமச்சந்திரன், ஆர்மரி.செல்லமுத்து, டி.எஸ்.துரைராஜ், கலை இயக்குநர் கங்கா, சினிகிராஃப்ட்ஸ் உரிமையாளர் ஆசம் என்று கலையுலகப் பிரமுகர்கள் பலரும் வந்திருந்தனர். சந்திரபாபுவும் இந்த முகாமில் சில நாட்கள் வந்திருந்து கலந்து கொண்டார். அமெரிக்க தூதர் தாம்சைமன், பிரிட்டிஷ் தூதர் டேனியல் டே, காவல் துறை ஐ.ஜி. ராம்மஹாதேவன் உள்ளிட்ட பலரும் இந்த முகாமில் பங்கேற்றனர்.

முகாமுக்கருகிலேயே தீ வளர்த்து, சுற்றிலும் நாற்காலிகளைப் போட்டு வட்டமாய் அமர்ந்து பேசிக் கொண்டிருப்பார்கள். கலகலப்புக்கும் உற்சாகத்துக்கும் பஞ்சமே இராது. இந்த உரையாடலுக்குப் பின்னணி இசையாக காட்டு யானைகள் மரங்களை உடைக்கும் சத்தம் கேட்டுக் கொண்டே இருக்கும். தீ வளர்ப்பதனால் இரண்டு பயன்கள். ஒன்று அடர்ந்த வனப்பகுதியின் நடுக்கும் குளிருக்கு இதமாக இருக்கும். இன்னொன்று எரியும் நெருப்பைப் பார்த்து யானைகளோ மற்ற விலங்குகளோ நெருங்காது. இரவு நேரங்களில் வேட்டையாடுவது சட்ட விரோதம் என்பதால் இவர்கள் யாரும் அப்போது வேட்டைக்குப் போக மாட்டார்கள்.





## துக்கடா நியூஸ்

'கூறைப் பட்டுச் சேலை
கூட ஒரு மாலை
வாங்கிவரும் வேளை - பொண்ணு
வாசமுள்ள சோலை'

- என்றெல்லாம் பாடத் தேவையின்றி அந்தக்காலத்தில் ஒருங்கிணைந்த தஞ்சை மாவட்டத்துக்குத் தேவையான திருமணக் கூறைப் புடைவைகளை நெய்து தரும் இடமாக இருந்தது கூறைநாடு என்ற ஊர். மயிலாடுதுறையில் தற்போது 'கொரநாடு' என்று வழங்கப்படும் பகுதிதான் அது!

- வீர.செல்வம், பூம்புகார்

இரவு வேளைகளில் காட்டைச் சுற்றிக் கண்களைப் பரப்பினால் வனத்துக்கும் வானத்துக்கும் நடக்கும் போட்டி ஒன்றைப் பார்க்கலாம். வானத்து நட்சத்திரங்களுக்குப் போட்டியாய் வனமெங்கும் கோடிக்கணக்கான மின்மினிப் பூச்சிகள் மின்னிக் கொண்டிருக்கும்.

**கொஞ்சம் தவறியிருந்தாலும் எம்.ஜி.ஆரைத் தெரிந்து சுட்ட எம்.ஆர்.ராதா மாதிரி. சிவாஜியைத் தெரியாமல் சுட்ட எம்.ஆர்.சந்தானம் என்றொரு வரலாறு உருவாகியிருக்கும்.**

வானத்தில் எப்படி அங்கொன்றும் இங்கொன்றுமாக நட்சத்திரங்கள் தோன்றத் தொடங்கி பிறகு எல்லாத் திசைகளிலும் பிரகாசிக்கின்றனவோ அதுபோல, மின்மினிப் பூச்சிகள் ஒரு பக்கத்தில் மின்னத் தொடங்கி, மெல்ல மெல்ல ஒரு வட்டமாக வியாபிக்கத் தொடங்கும்.

கொஞ்ச நேரத்தில், கோடிக்கணக்கான வைரங்களால் வனதேவதை தன்னை அலங்கரித்துக் கொண்டதுபோல வட்டம் வட்டமாய்ச் சுற்றிச் சுற்றிவரும். மின்மினிகள் இரவில் பூத்த இயற்கை தீபங்களாய்க் கண்களைப் பறிக்கும்.

இந்த மின்மினிகளுக்குப் போட்டியாய் இன்னும் சில சுடர்கள் ஆங்காங்கே ஜொலிக்கத் தொடங்கும். அவை விலங்குகளின் கண்கள். இந்த இரண்டு வகை வெளிச்சங்களையும் மாறி மாறிப் பார்க்கும் போது இரண்டே கண்கள் கொடுத்த இறைவன் மீது கோபம்தானே வரும்!

இந்த ஆத்துச்சேரி முகாமில் ஆபத்தொன்று காத்திருந்தது. சிவாஜியுடன் வந்திருந்த நடிகர் எம்.ஆர்.சந்தானம் இந்த அற்புதமான சூழலில் ஒன்றிப்போய் உற்சாகம் கொப்பளிக்க உலா வந்து கொண்டிருந்தார். வீரபாண்டிய கட்டபொம்மன் படத்தில் தானாவதிப் பிள்ளையாக நடிப்பாரே, அவர்தான் எம்.ஆர். சந்தானம்.

சிவாஜியும் முத்துமாணிக்கமும் துப்பாக்கி ஸ்டாண்டை நெருங்கும் முன்பே, அவர்களுக்கு உதவி செய்யும் ஆர்வத்தில் 450 / 400 ரைபிளை எடுத்து நீட்டினார் சந்தானம். அவ்வளவுதான். அடுத்த விநாடி 'டமார்' என்ற வெடிச் சத்தமும் அதிர்ச்சியில் எழுந்த சத்தமும் அலறல் சத்தமும் கலந்து கேட்டன. யாருக்கு என்ன நிகழ்ந்தது என்பதைக் கண்டுகொள்ள முடியாத அளவுக்குப் புகை மண்டலம்.

துப்பாக்கியை நீட்டும் அவசரத்தில் விசையை அழுத்திவிட்டார் எம்.ஆர். சந்தானம். பெரும் சத்தத்துடன் குண்டு வெடித்து, பூமியைப் பிளந்து கொண்டு போய்விட்டது. கொஞ்சம் அசந்திருந்தால் சிவாஜி மீதோ, முத்துமாணிக்கத்தின் மீதோ பட்டிருக்கும்.

இந்தச் சம்பவத்தின் அதிர்ச்சியில் மயங்கி விழுந்த எம்.ஆர்.சந்தானத்தைத் தேற்ற நீண்ட நேரம் பிடித்தது. கொஞ்சம் தவறியிருந்தாலும் எம்.ஜி.ஆரைத் தெரிந்து சுட்ட எம்.ஆர்.ராதா மாதிரி, சிவாஜியைத் தெரியாமல் சுட்ட எம்.ஆர்.சந்தானம் என்றொரு வரலாறு உருவாகியிருக்கும்.

**(அடுத்த இதழில் முடியும்)**

''நடந்தாய் வாழி காவேரி
நாடெங்குமே செழிக்க...''

என்ற பாடலைக் கேட்கும் போதே, பொங்கிக் குதூ கலித்து ஓடும் ஒரு பெரு நதியின் காட்சி வடிவம் நம் மனத்தில் ஈரம் நிறைக்கும். அந்நதிப்பாடலின் படைப் பாளன் வாக்கு, தெரிந்தோ தெரி யாமலோ, எதிர்காலத்துக்குமான

# ஒவ்வொரு


வைகைச் செல்வி

தொடராய் இல்லாமல், கடந்த காலத்துக் கான பெருந்தொடராய்த் திகழ்கிறது. ''நடந் தாய்... இன்று நடக்கவில்லை. நாளை நடப் பாயா..'' என்ற பெருங்கூற்றை உள்ளடக் கியதாகிவிட்டது. அப்பாடல் இன்றைய நடக்கிற, ஓடுகிற, நிற்கிற நதிகள் யாவற் றுக்குமான துயரப் பாடலாக மாறி நம் தாகத்தின் முன் இசைக்கப்படுகிறது.

முன்னாள் நதிகள், இந்நாளில் மணல் வயல்களாக மாறிப்போன அவலம் இந்தியா போன்ற வளரும் நாடுகளின் தேசியத் துயரம். நதிகளிலும் கண்மாய்களி லும் மாசுகளைக் கலந்து நீரை இனம் மாற்றுகிறோம். சூழலை வளர்க்கப் பயன் பட்ட நீரை சூழலைக் கெடுக்கப் பயன் படும் நீராக மாற்றிவிட்டோம். வெளி நாட்டின் யுக்தியோடு குடிநீரைக் காசு கொடுத்து வாங்கி உலக வங்கியின் கடனாளியாகிறோம். இதை உரக்கச் சொல் கிற பெருங்குரல்கள் அங்குமிங்குமாக எழு வதில் சுற்றுச்சூழல் ஆர்வலர்களின் பங் களிப்பு முக்கியமானது. அதில் ஒருவராக கவிஞரும், எழுத்தாளரும், மாசுக் கட்டுப் பாட்டு வாரிய அதிகாரியுமான வைகைச் செல்வி இணைகிறார்; தமது 'ஒவ்வொரு சொட்டும்' (Every Drop Counts) என்கிற ஆவணப்படத்தின் வழியாக.

''தண்ணீர் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும். நீர் பற்றிய அடிப் படை விஷயங்கள் பலருக்குத் தெரிய வில்லை. அந்தப் படிப்பினையை ஊட்ட வேண்டும் என்ற ஆர்வமே இந்த ஆவணப் படத்தை நான் எடுக்கக் காரணம்...'' என்கிற கவிஞர் வைகைச்செல்வி தமது ஆவணப் படத்தில் நீரின் நிலை குறித்த எளிமையான வகுப்பை நிறுவியுள்ளார்.

'நமது உடலில் 65 சதவிகிதம் நீர் உள்ளது. இரத்தத்தில் 83 சதவிகிதம் நீர்




# ...தொட்டும்...

யில் குடிநீர் ஆதாரங்கள் மாசுபடுத்தப்பட்டு, 'Blue Planet' 'Brown Planet' ஆக மாறும் அச்சத்தை ஆவணப்படம் நமக்கு ஆழ உணர்த்துகிறது. 'இன்று கரையெல்லாம் முடைநாற்றம் எதனாலே...' என தமிழன்பன் கவிதையால் கேட்பதும், அதற்கு சூழல் விற்பன்னர்கள் வழியாய் ஆய்வுபூர்வமான பதில் தருவதுமாக நீர் போல் வழியும் புள்ளிவிவரங்கள் நம்மை அதிர்ச்சிப்படுத்துகின்றன.

சமூகச் சூழலில் தண்ணீரை ஆண்கள் அதிகமாகக் குடிக்கிறார்கள், பெண்கள்தான் அதிகமாகப் பிடிக்கிறார்கள். இதனை உணர்ந்த பெண்ணியவாதியின் குரலாக, தலையில், இடுப்பில் குடங்களைச் சுமந்தபடி நீண்ட தூரம் நடந்துவரும் காட்சிப் பதிவுகள் பெண்களுக்கும் நீர்த்தேடலுக்குமான கண்ணீர்ப் பதிவாக அறியப்பட வேண்டும்.

இந்த ஆவணப்படம் வெளியாகும் இவ்வாண்டு 'Water for Life 2005-2015'- 'வாழ்வுக்கான தண்ணீர் பத்தாண்டுகள்' என்ற குறிக்கோள் ஆண்டுக்குள் வருவதை ஆவணத்தில் சுட்டிக்காட்டியுள்ள வைகைச் செல்வி, ''சீரியல்களால் கெடுக்கப்படுகிறது விஷுவல் மீடியாவின் பலம். அந்த பலத்தை மேலும் இவ்வாறு மடைமாற்றிப் பயன்படுத்தும் உந்துதலும் பேரார்வமும் இப்படைப்பின் மூலம் எனக்கு ஏற்பட்டுள்ளது...'' என்கிறார். இந்த மடைமாற்றல் சமூக மாற்றத்துக்குச் சாதகமாக மாற வாழ்த்துவோம்.

உள்ளது. பூமியில் சூழப்பட்டுள்ள நீரில் 97 சதவிகிதம் உப்பு நீர், 2 சதவிகிதம் பனிப் பாறை, 1 சதவிகிதம் மட்டுமே குடிநீர்...' என்கிற புள்ளி விவரங்களின் வழியாக நமக்குக் குடிக்க உதவும் ஒரு சதவிகித நீரின் பாதுகாப்பு இன்றைய சமூகத்தில் எவ்வாறு இழிவாக உள்ளது என்பதை அவர் காட்சிப்படுத்தியுள்ளவிதம், நல்ல ஆவணப்பட அடையாளங்களுக்குட்பட்டது.

குடிநீர் வசதியின்றி தாக அவதியுறும் இந்தியக் கிராமங்களின் கூறுகளை மென்மையாக, கோபமில்லாமல் பதிவுசெய்துள்ளார். தொழில் வளர்ச்சி என்கிற உயர்ந்த போர்வை



• கவின்கவி •

# நாங்க புதுசா

'இசையருவி' சேனலில் வெவ்வேறு நிகழ்ச்சிகளில் தொகுப்பாளர்களாக வரும் நிஷாவும் முரளியும் வாழ்க்கையில் ஒன்றாக இணையப் போகிறார்கள். அவர்களிடம் ஒரு 'டூயல்' பேட்டி...

## நிஷாவிடம் கேட்டபோது:

**அன்றிலிருந்து இன்று வரை?**

நான் ப்ளஸ் ஒன் படிக்கும்போதே காம்பியரிங் பண்ண வந்துட்டேன்! கரன் டீ.வி.யில ஆரம்பிச்ச பயணம் இப்போ ஒன்றரை வருஷமா கலைஞர் டீ.வி.யில வெற்றிகரமா உலா வந்துக்கிட்டு இருக்கு. ***(இனிப்பான சர்க்கரைப் பயணம்!)***

**மறக்க முடியாத ஷோ?**

கலைஞர் டீ.வி.யில் 'இசையருவி' ஆரம்பித்த முதல் நாள் அன்றே முதல் ஷோ செய்தது. முதல்வரின் சென்ற வருடப் பிறந்த நாள் கொண்டாட்டத்தைத் தொகுத்து வழங்கியது. ***(வருங்காலத்துல மந்திரி ஆவீங்களா?)***

**கடுப்பேத்திய ரசிகர்கள்/ரசிகைகள்?**

கடுப்பா... சான்ஸே இல்ல... எனக்கு எல்லா ரசிகர் ரசிகைகளையும் ரொம்பப் பிடிக்கும்... ***(எவ்ளோ நல்லவங்க!)***

**ஸ்பெஷல் பட்டப்பெயர்?**

நான் எப்பவும் சிரிச்சுக்கிட்டே இருக்கறதால, செல்லமா 'புன்னகை இளவரசி'ன்னுதான் கூப்பிடுவாங்க.. ***(சினேகா உஷார்!)***

**ஸ்டைல் ஸ்டேட்மென்ட்?**

விரல்கள்ல நிறைய மோதிரங்கள், டாப்ஸுக்கு மேட்ச்சா ஸ்லிப்பர், ஒரு கை நிறைய வளையல்கள் போட்டுட்டு இன்னொரு கையை ஃப்ரீயா விட்டுடறது, எல்லாமே நான் கடைப்பிடிக்கிற ஸ்டைல் ஸ்டேட்மென்ட்! ***(தமிழ்நாடே இந்த ஸ்டைலை காப்பி அடிக்குதாமே?)***

**ப்யூட்டி டிப்ஸ்?**

புதினா இலையைச் சுத்தம் செய்து நல்லா அரைச்சு நைட் தூங்கறதுக்கு முன்னால போட்டுட்டு காலைல கிளீன்



பண்ணினா முகமெல்லாம் பளிச்சுன்னு ஆயிடும். **(பச்சைப் பசேல்ன்னு ஆயிடாதே?)**

**சீக்ரெட் நியூஸ்?**

எனக்கும் முரளிக்கும் மூணு மாசம் முன்னாடி நிச்சய தார்த்தம் நடந்தாச்சு. கூடிய சீக்கிரமே நான் திருமதி.நிஷா முரளி! **(பாவம் பசங்க!)**

## முரளியிடம் கேட்டபோது:

**மறக்க முடியாத ஷோ?**

மே 1 தொழிலாளர் தினத்தில் உலக நாயகனான கமல்ஹாசனைப் பேட்டி எடுத்தது. கமல்ஹாசனை வைத்து பல வெற்றித் திரைப்படங்களை தந்தவராக்கும் என் தாத்தா, ஜி.என்.ரங்கராஜன்! **(பேரனின் பேட்டியும் வெற்றிதான்)**

**கடுப்பேத்திய ரசிகர்கள்/ரசிகைகள்?**

''நீங்க எங்கேயிருந்து பேசறீங்க?''ன்னு கேட்டா, ''போன்லேருந்துதாங்க பேசறேன்''... என்று பதில் சொல்லும் ரசிக/ரசிகைகள். **(இது செல்லக் கடுப்பு!)**

# கட்டிக்கிட்ட ஜோடிதானுங்கோ...

**ஸ்பெஷல் பட்டப் பெயர்?**

என்னோட ரசிகைகள் என்னை மேடி(மாதவன்)ன்னுதான் கூப்பிடுவாங்க. **(முரளி நம்ம ஆளு?)**

**ஸ்டைல் ஸ்டேட்மென்ட்?**

பெரிய வாட்ச், டு இன் ஒன் ஷர்ட்ஸ், பாலிவுட் ஸ்டைல்ல மிக்ஸ் அண்ட் மாட்ச்சா ட்ரெஸ் பண்ணுவது. **(பாலிவுட் போற ஐடியா இருக்கா?)**

**ஒரு டாப் சீக்ரெட்?**

சீக்கிரமே நான் வெள்ளித் திரைல காலடி எடுத்து வைக்கப்போறேன்... வாழ்த்துங்க... **(அடுத்த 'தல'யா? தளபதியா?)**

**- நளினி சம்பத்குமார்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

சாவியைத் தேடுவதிலேயே
கழிகிறது பொழுதெல்லாம்.
ஏனோ
கதவு திறந்திருக்கிறதா
என்று பார்க்க மட்டும்
ஒருபோதும்
தோன்றுவதே இல்லை.

- இப்படியான, பிரச்னை ஒளிந்து கொண்டு கண்ணாமூச்சு ஆடும் யதார்த்தத்தைக் கவிதையாக மாற்றியிருப்பது, solaiazhagupuram.blogspot.comல்தான்!

* * *

### கணினிமொழியில் ஒரு காதல் கடிதம்

கணப்பொழுதுகூட கவனம் சிதறாமல் கருமமே கண்ணாக கண்ணிமைக்காமல் கணினியையே கண்டுகொண்டிருக்கும் காதலிக்கு...

காதல் என்றால் கிலோபைட் என்ன விலை என்றுதான் நானும் இருந்தேன். உன்னைப் பார்க்கும்வரை. உன்னைக் கண்ட நாள் முதல் தொலைந்த மனத்தை 'கூகிள் ஸர்ச்'சில் தேடியும் கிடைக்கவில்லை.

எப்போதும் மானிட்டரையே வெறிப்பவளே, என் போன்ற மானிடரையும் கொஞ்சம் பார்.

உன் நுனிவிரல் நடனமாடும் கீ-போர்டில் ஒரு கீயாக நான் மாறக்கூடாதா? உன் உள்ளங்கைச் சூட்டில் 'மௌஸ்'க்கும் மவுசு ஏறிப்போகுதடி...

மைக்ரோசாப்ட் வின்டோஸைப் பார்ப்பதை விட்டு என் மனமென்னும் 'வின்டோஸ்'க்குள் உன் முகம் தெரிவதை எட்டிப்பார்.

உன் பதில் ஈமெயிலுக்கு என் இன்பாக்ஸ் எப்போதும் காத்திருக்கும்.

பின்குறிப்பு : என் காதல் ஈமெயிலை பழக்கதோஷத்தில் 'சிசி டு மல்ட்டிபிள் ரெசிபியண்ட்' போட்டு அனுப்பிவிடாதே.



vigneshram.blogspot.com

### இணையதளம் ஆரம்பிக்க வேண்டுமா?

*எழுத்தாளர்கள், தொழில் முனைவோர் என எல்லாத் தரப்பினருக்கும் இணைய தளம்*

**ஸாந்த்**

என்பது இன்றியமையாத தேவையாகி விட்டது. தங்களுக்கென்று பிரத்யேக மான இணையதளம் வேண்டுமென்ற விருப்பம் உள்ளவர்களுக்கு உதவுகிறது புதிய யுகம் தளம்.

இணையதளத்துகான பெயரைத் தேர்வு செய்வதிலிருந்து அவற்றுக்குச் செலுத்த வேண்டிய கட்டணங்கள், பின்பற்ற வேண்டிய நடைமுறை கள் என முழுமையான அறிமுகத்தை தமிழி லேயே வழங்குகிறது புதியயுகம்.



pudhiyayugam.blogspot.com

## தமிழில் தொழில்நுட்பம்

டெக் இன் தமிழ் என்ற வலைப்பூவில் கணினி மற்றும் தகவல் தொடர்பு தொழில்நுட்பம் குறித்த கட்டுரைகள் தொடர்ந்து வெளியாகி வருகின்றன.

புதிய மென்பொருட்கள் பற்றிய அறிமுகக் கட்டுரைகள் கணினியைப் பயன்படுத்தும் சகலருக்கும் மிகுந்த பயனுள்ளவை. இணைய பக்கங்களைக் கத்தரித்து ஒட்டுவதற்கான புதிய மென்பொருளைப் பற்றிய ஒரு கட்டு ரைக்கு 'காப்பி பேஸ்ட் அடித்து வாழ்வாரே வாழ்வார்' என்று தலைப்பிட்டி ருக்கிறார்கள்.

கொஞ்சம்கூட போரடிக்காமல் அறிவியல் சங்கதிகளைச் சொல்ல முயல்வது இன்றைய சூழலில் அவசிய மானதும் கூட. வலைப்பூவின் மற்று மொரு பரிணாமம். வரவேற்போம்...

techintamil.blogspot.com




## அகநாழிகை (பொன்.வாசுதேவன்)

அதிகமாக கவிதைகள், சிறுகதை, உலகத் திரைப்பட விமர்சனங்கள், மானுடவியல் கட்டுரைகள் என எழுதும் இவரது படைப்புகளில் பல கவிதைகள், ஏற்கெனவே 'பொன்.வாசுதேவன்' என்ற பெயரில் இலக்கியச் சிற்றிதழ்களில் வெளி யானவைதான். நுண்ணிய பார்வை யுடன் திரை விமர்சனம் செய்வதையும், அழகியல் நோக்குடன் கவிதைகள் எழுதுவதையும், மானுட வியல் சார்ந்த பதிவுகள் இடுவதையும் தமது பாணியாக கைக்கொண் டுள்ளார். வெகுஜன இதழ் களின் பாராட்டை வசீகரித்துக் கொண்ட வலைத் தளம் இது!

aganaazhigai.blogspot.com

**குறும்படம் என்ற விஸிட்டிங் கார்டு மூலம் கோலிவுட்டில் ஒரு பாரதிராஜாவாக, கே.பாலசந்தராக வலம்வர வேண்டும் என கனவுடன் வரும் எத்தனையோ இளைஞர்களுக்கு, சத்தம் போடாமல் ஊக்கமளித்து வருகிறது தமிழ் ஸ்டூடியோ.காம். இதனை நடத்தும் அருண், குணா - கல்லூரியில் படிக்கும் மாணவர்கள் போல் இருக்கிறார்கள்.**

''தமிழ்நாட்டில் குறும்படங்களுக்காக எத்தனையோ அமைப்புகள் செயல்பட்டு வந்தாலும் அவர்களுக்குள் ஒற்றுமை இல்லாத காரணத்தால் இந்தத் துறையில் வளர்ச்சி தடைபடுகிறது.

சில மாதங்களுக்கு முன்னால் நாங்கள் இருவருமாகச் சேர்ந்து ஒரு குறும்படம் எடுக்க ஆசைப்பட்டோம். ஆனால், எடிட்டர் யார்; கேமரா மேன் யார் என அடிப்படை விஷயங்கள் எதுவுமே தெளிவில்லாததால் பத்தாயிரம் ரூபாயில் முடிக்க வேண்டிய படத்துக்கான பட்ஜெட்டை ஐம்பதாயிரம் ரூபாய் ஆகும் என்றார்கள். எங்களது குறும்பட ஆசை நிராசையானது. நம்மைப் போன்றவர்களின் கனவை நிறைவேற்ற வழிசெய்ய வேண்டும்; குறும்பட ஆர்வலர்களை ஊக்குவிக்க வேண்டும்; குறும்படங்கள் எடுக்க தொழில்நுட்ப உதவி செய்வதோடு வணிக ரீதியாகவும் கொண்டு செல்ல வேண்டும் என்ற எண்ணத்தில் கடந்த நவம்பர் மாதம் இந்த இணைய அமைப்பைத் தொடங்கினோம்'' என்கிறார் அருண்.

ஆரம்பத்தில் வள்ளலாரின் வாக்கைப் போல 'கடை விரித்தேன்... கொள்வாரில்லை' என்று மக்களிடம் சென்று



* அருண்

# கானல் நீரிலும்

சேராமல்தான் இருந்தது. கணினி வழியாகவும், சிறு பத்திரிகைகள் வழியாகவும், மெல்ல பொது மக்களைச் சென்றடைந்தது இத்தளம்.

''நல்ல விஷயங்களுக்கு விளம்பரம் தேவையில்லை என்பார்கள். அது எங்கள் விஷயத்தில் பலித்தது. புகழ்பெற்ற பெரிய எழுத்தாளர்களான எஸ்.ராமகிருஷ்ணன், ஜெயமோகன் போன்றோர் தமிழ்



# துக்கடா நியூஸ்

* சீர்காழி விவேகானந்தா மெட்ரிகுலேஷன் பள்ளியில் 36 ஜோடி இரட்டைக் குழந்தைகள் படித்து வருகிறார்கள்!

* திருச்சி அரசு சட்டக் கல்லூரியில் இறுதியாண்டு மாணவர்களாக அப்பாவும், மகனும் பி.எல். படிப்பு படித்து வருகிறார்கள். இவர்கள் இருவரும் மயிலாடுதுறை அருகேயுள்ள கிராமத்தைச் சேர்ந்தவர்கள்.

**- ஆர்.ராஜதுரை, சீர்காழி**



* குணா

# காசு பார்க்கலாம்!

ஸ்டூடியோ.காம் பற்றி தங்கள் இணைய தளங்களிலேயே செய்தி வெளியிட்டு எங்களை ஊக்கப்படுத்தினர்.

நாங்கள் இந்த அமைப்பை ஆரம்பித்து ஏழு மாதங்களே ஆகின்றன. இந்தக் குறுகிய காலகட்டத்தில் தமிழ்நாட்டில் பல பகுதிகளிலிருந்தும் குறிப்பாக கிராமங்களில் இருந்து எங்களைத் தொடர்பு கொள்ளும் அனைத்து ஆர்வலர்களுக்கும் நாங்கள் நல்ல முறையில் வழிகாட்டி வருகிறோம். ஒவ்வொரு மாதமும் இரண்டாவது சனிக்கிழமை சென்னை எக்மோரில் உள்ள ஜீவன் ஜோதி அரங்கில் 'குறும்பட வட்டம்' என்கிற நிகழ்வை நடத்தி சிறந்த குறும்படங்களுக்கு விருதுகள் வழங்குகிறோம்'' என்கிறார் குணா.

''குறும்படங்களில் வருமானம் கானல் நீர்தான். இது பணம் ஈட்டும் துறை அல்ல! ஆனால் நல்ல குறும்படங்கள் நீங்கள் செலவு செய்வதை விடப் பல மடங்கு அதிகமாக விருதுகள் மூலம் மட்டுமே உங்களுக்கு ஈட்டித் தரும். உலகம் முழுவதும் ஒரு வருடத்தில் குறைந்தபட்சம் பன்னிரண்டு குறும்படப் போட்டிகள் நடக்கின்றன. இதில் மூன்று குறும்படப் போட்டிகளில் உங்கள் குறும்படம் பரிசு வென்றால் போதும். நீங்கள் செலவு செய்ததை விட இரண்டு மடங்கு லாபம் பார்க்கலாம்'' என நம்பிக்கை ததும்பும் வார்த்தைகளோடு குறும்படக் களத்துக்கு தங்கள் தளம் மூலம் அழைக்கின்றனர் இந்த இளைஞர்கள்.

**- நளினி சம்பத்குமார்**



**வே**ளாங்கண்ணி கடற்கரை.

கூட்ட நெரிசல் இல்லாத நாட்களில்லை என்று சொல்லும் அளவுக்கு எப்போதும் காணக்கிடைக்கிறது இந்தக் இடம். கொளுத்தும் கோடையில் புழுக்கம் மண்டித் தின்னும் இந்நாட்களில் கூட்டத்துக்குச் சொல்லவா வேண்டும்? கடற்கரைக் காற்று என்பதோடு உலகமறிந்த ஓர் ஆலயமும் அமைந்திருப்பது பல பகுதிகளிலிருந்தும் மனிதர்களை இங்கு கொண்டு வந்து சேர்த்திருக்கிறது.

கடற்கரையை நோக்கி நடந்து கொண்டிருந்தோம். நெருங்க நெருங்க காற்றும் எங்களை நெருக்கத்தில் தழுவி ஆடைகளைப் பின்னோக்கி இழுத்துக் கொண்டது.

ஆர்ப்பரிக்கும் கடலலைகளின் சப்தம் காதுகளில் மோதுகிறது. கூட்ட நெரிசலில் உள்நுழைந்து கடலைப் பார்க்கிறோம். மனத்துக்குள் எத்தனைக் குதூகலம்?! ஆண்கள், பெண்கள், குழந்தைகள் என வேறுபாடில்லாமல் அலையோடு விளையாடி மகிழும் காட்சி காண அற்புதம். எல்லாம் மறந்து நீரலையில் தாவுவதும், குதிப்பதும், தழுவுவதும், ஈரமணலில் பாதம் பதிந்து ஓடி விளையாடுவதும் வாழ்வில் எல்லோரும் அனுபவிக்க வேண்டிய உன்னதங்கள்.



< மா.மீனா சுந்தர் >

# உப்புக் காற்று

**நா**ன், அக்கா, அத்தான், குழந்தைகள் தமிழினி, தமிழொளி என ஐந்து பேரும் வேளாங்கண்ணிக்குச் சேர்ந்து வருவது இத்தோடு மூன்றாவது முறை.

கடற்கரையில் நிறைய தற்காலிகக் கடைகள் முளைத்திருந்தன. நான்கு மூங்கில் நட்டு, மேலே நாற்பது கீற்றுகள் வேய்ந்து பல கடைகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. குளிர்பானங்கள், ஐஸ்க்ரீம், தேனீர், வடை, மீன் வறுவல், கடலை, முறுக்கு இத்யாதிகள் விற்கப்பட்டுக் கொண்டிருந்தன. பந்தல் கடை நிழலில் நான்கைந்து பிளாஸ்டிக் நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. அதுவே வியாபார உத்தியாக அங்கு கையாளப்பட்டுக் கொண்டிருக்கிறது. நல்ல வெயில் நேரத்தில் கடற்கரைக்கு வருவோர் சூடு பொறுக்காமல் அந்தப் பந்தல்களில் ஒதுங்க, அப்படியே நாற்காலிகளைத் தூக்கிப் போட்டு உட்கார வைத்து, 'என்ன சாப்பிடறீங்க சார்?' என்று கேட்டு வியாபாரத்தை நடத்துவதில் அவர்கள் குறியாக இருந்தனர்.

கடற்கரையின் இடப்புறம் திரும்பி ஐந்தாறு கடைகள் தாண்டி ஒரு கடையில் சில நாற்காலிகள் காலியாக இருந்தன. மதிய வெயிலின் உக்கிரமும், வியர்வை நசநசப்பும் பாடாய்ப்படுத்த எங்களையுமறியாமல் அந்தப் பந்தல் நாற்காலிகளில் சென்று அமர்ந்தோம். அத்தான் குழந்தைகளை அழைத்துக் கொண்டு குளிக்க ஆயத்தமாகிக் கொண்டிருந்தார். மூவரும் குளித்து வரும் வரை நானும், அக்காவும் இங்கேயே அமர்ந்திருக்கலாம் எனத் தீர்மானித்திருந்தோம். அத்தான் குழந்தைகளின் ஆடைகளைக் களைந்து கொண்டிருக்கும்போதே ஒரு சிறுமி வந்தாள்.

''சாருக்கு என்ன வேணும்? கொக்க கோலா... மிரண்டா... ஸ்பிரிட்... சில்வர்கப்... சோடா... பன்னீர் எல்லாம் இருக்கு... கூலிங்கா? கூலிங் இல்லாமலா?''

கேட்ட பெண்ணுக்குப் பன்னிரண்டு வயதிருக்கலாம். எண்ணெய் பார்த்தறியா காய்ந்து பழுப்பேறிய தலைமுடி. கடைக்காரரின் மகளாக இருக்க வேண்டுமென நினைத்துக் கொண்டேன்.

அத்தான் எதுவும் பேசவில்லை.

''கோலா கொண்டு வரட்டுமா சாரு?''

அத்தானின் குரலுக்காக அவர் முகத்தையே கொஞ்சநேரம் பார்த்துக் கொண்டிருந்தவள், ''சீக்கிரம் சொல்லுங்க சாரே... அடுத்தவங்களையும் பாக்கணும்ல்ல''... என்றதுதான் தாமதம். ''ப்ச்சு... ஒண்ணும் வேண்டாம். கொஞ்ச நேரம் தொந்தரவு பண்ணாம அப்படிப் போ!'' என்று கோபத்தோடு தெறித்தார்.

அடுத்த நொடியே, ''அப்படின்னா சேரை விட்டு எழுந்து அப்பால போங்க... சும்மா வர்ற உங்கள அழகு பாக்கவா நாங்க சேரு வாங்கிப் போட்டிருக்கோம்? எல்லாரும் சும்மாவே உக்காந்திட்டுப் போனா எங்க வயித்துப்பாட்டுக்கு நாங்க என்ன பண்றது?''

அதன் வயதுக்கும் உருவத்துக்கும் சம்பந்தமில்லாமல் பேசியது. அத்தானுக்குக் கோபம் உண்டாக்கியது. ''என்ன விரட்டுற? நீயென்ன பட்டா போட்டு வாங்கியிருக்கியா இந்த இடத்த? மொளச்சு மூணு இலை விடல... அதுக்குள்ள பேசற பேச்சப்

பாரு!''

அக்கா அத்தானை சமாதானம் செய்து கொண்டிருந்தாள். அத்தான் ஒரு குழந்தையையும், அக்காள் ஒரு குழந்தையையும் தூக்கிக்கொள்ள, மீதிருந்த இரண்டு பைகளையும் நான் எடுத்துக் கொண்டு கிளம்ப எத்தனிக்கும் பொழுதில் பின்னாலிருந்து கேட்டது ஒரு கரகரத்த குரல்.

''ஏய்... சாரே... கொஞ்சம் நில்லு!'' பகீரென்றது எனக்கு. திரும்பினோம். கொட்டகையின் கடைசியில் தடித்த, கறுத்த உருவத்தில், மீசையை முறுக்கிய படியே, ''எந்த ஊரு உனக்கு? என்னமோ பெரிசா பேசறியே... நீ ஓசில உக்காந்து பொழுதைக் கழிக்கத்தான் வார வட்டிக்கும், மாச வட்டிக்கும் கடன் வாங்கி சேர் வாங்கிப் போட்டிருக்குமா? ஆளு மசண்டா இருக்கே. சல்லித்தனமா நடந்துக் கறியே... போப்பா அப்பால!''

அருகிலிருந்த கூட்டம் வேடிக்கை பார்க்கத் துவங்கிற்று. அத்தானும் அவரும் மாறி மாறிப் பேச்சு, வசை... எனத் தொடர்ந்தபடியேயிருக்க யாரோ இரண்டு நல்ல மனிதர்கள் வந்து சமாதானம் செய்து விட்டார்கள்.

அக்காவுக்கு முகமே மாறிப்போய் விட்டது. கடலை வெறித்தபடியே வெயிலில் நாங்கள் அமர்ந்திருக்க, அத்தான் குழந்தைகளை அழைத்துக்கொண்டு குளிக்கப் போய் விட்டார்.

''இவ்ளோ பிரச்னையும் முன்னமே ரெண்டு கூல்டிரிங்ஸ் வாங்கிருந்தா முடிஞ்சு போயிருக்கும். எவ்வளவோ செலவு செய்றோம்!'' நான் சொல்லிக் கொண்டிருக்க அக்கா இடைமறித்தாள்.

''இல்லடி. இது மாதிரி திமிரு புடிச்ச நாய்ங்ககிட்ட வாங்கக் கூடாது. ஒண்ணுமில்லாத வறட்டுக் கழுதைங்களுக்கு வீறாப்பையும், பேச்சையும் பாரு! எண்ணம் நல்லாயிருந்தாதானே வாழ்க்கையும் நல்லாருக்கும் சனியனுங்க!'' பொறிந்து கொட்டினாள் அக்கா.

அக்காவும் நானும் சின்ன வயதில் வாழ்ந்த வாழ்க்கை மனசுக்குள் நிழலாடியது. தினக்கூலியாய் சிரமப்பட்ட அம்மா, அப்பா. கிழிந்தும், நசிந்தும், ஒட்டுத் தையல் போட்டதுமான பாவாடை சட்டைகள்.

பன்னிரண்டாம் வகுப்பு முடித்ததும் மதிப்பெண் அடிப்படையில் அக்காவுக்கு அரசு ஆசிரியர் பயிற்சி




கிடைத்ததும், பொருளாதாரப் பிரச்னையோடு அதைப் படித்து முடித்ததும், மறுவருடமே ஊராட்சிப் பள்ளியில் வேலை கிடைத்ததும், வாழ்வுச் சூழல் கொஞ்சம் மாறியதும், பின் வங்கியில் வேலை செய்யும் இந்த அத்தான் மாப்பிள்ளையாக வாய்த்ததும் கனவு போலத் தோன்றி ஓடியது. அதற்குள்ளாகவே தம் பழைய வாழ்க்கையை மறந்துவிட்டு, எள்ளி நகையாடி அடுத்தவரைக் கேவலப் படுத்தும் அக்காவின் செய்கைகள் எனக்கு

சுத்தமாகப் பிடிக்கவில்லை.

குளியலை முடித்து கரைக்கு வந்த அத்தானும் குழந்தைகளும் ஆடை மாற்றிக் கொண்டார்கள். கண்ணாடி, சீப்பை பையிலிருந்து எடுத்துக் கொடுத்தாள் அக்கா. அத்தான் தலைவாரவும் குழந்தைகளுக்கு நானும், அக்காவும் பவுடர் அடித்துக் கொண்டிருந்தோம்.

'மாயாண்டி குடும்பத்தார்' புறநகர் பகுதிகளிலும் கூட மிகச்சிறப்பாக வெற்றிநடை போட்டுக் கொண்டிருப்பதில் யூனிட்டே சந்தோஷத்தில் திளைத்திருக்க, ஒரு மாலை வேளையில் தருண்கோபியின் அலுவலகத்துக்குச் சென்றபோது...

"உணர்வுபூர்வமாகக் கதை சொல்லி ஜெயிக்க முடியும் என்று இந்தப்படம் மூலமாகக் கற்றுக் கொண்டிருக்கிறேன். படம் முழுக்க அழுதுக்கிட்டே இருக்கோமே, மக்கள் ஏத்துப்பாங்களா என்கிற பயம் இருந்தது. படத்தைப் பார்த்துவிட்டு வரும் மக்களைப் பார்க்கும்போது அந்தக் கவலை போய்விட்டது. என்னோட அப்பா படம் பார்த்துட்டு போன் பண்ணி அழுதார்! நான் ஜெயிச்சிட்டதா, சந்தோஷமாயிருக்கு. டைரக்டர் மணிவண்ணன் சொன்னார், "நான் செத்த பிறகு எம்பிள்ளைகள் அழுவுதோ, இல்லையோ... ஆனா, நீங்க இருக்கீங்கடா" என்று. இதுதான் ஒரு நடிகனுக்குக் கிடைக்க வேண்டியது. அது எனக்கும் கிடைச்சிருக்கிறதுல இரட்டிப்பு சந்தோஷம். என்னோடது கதைக்கான முகம்தானே தவிர ஹீரோவுக்கானதல்ல, எப்போதுமே ஹீரோக்களைப் படைக்கிற பிரம்மாக்கள் இயக்குநர்கள்தான்!"

- ஜான்மதி

"ஐயா" பின்புறத்திலிருந்து யாரோ அழைக்கும் குரல். அத்தான் உட்பட எல்லோரும் திரும்பிப் பார்க்க, நான் இரண்டு வித அதிர்ச்சியில் செய்வதறியாது சிலையென நின்றேன்.

ஒன்று மரியாதையில்லாமல் பேசிய அந்த முரட்டு மனிதர் நின்றது. இன்னொன்று கை இடுக்குகளில் கட்டைகளை வைத்து அதைப் பிடித்தபடியே ஒரு கால் ஊனமாகி இருப்பது.

அத்தானும் அக்காவும் என்ன சொல்வதெனப் புரியாமல் சங்கடத்தில் தவித்துக் கொண்டிருந்தனர்.

"என்னை மன்னிச்சிடுங்கய்யா. பெரிய மனசு பண்ணி..." சொல்லிக் கொண்டிருக்கும்போதே கண்களிலிருந்து நீர் பொலபொலவெனக் கொட்டியது.

அத்தான் அவர் கைகளை இறுகப் பற்றி கொண்டார்.

"என்னங்கய்யா...

சின்னப்புள்ள மாதிரி... ஏதோ வேகத்துல நானுந்தானே பேசினேன். அத அப்பவே மறந்திட்டேன் நான்." அத்தான் ஆறுதலாய்ப் பேசியதும் தோளில் கிடந்த துண்டால் கண்களை துடைத்துக் கொண்டார்.

"பரமசிவம்ங்க எம்பேரு... அஞ்சு குழந்தைங்க... அஞ்சும் பொண்ணுகளா போச்சு. பெரியவளுக்கு இருபத்தேழு வயசாகுது. அதுக்கெல்லாம் வாழ்ந்து பாக்குற வயசுங்க. அது வயசுப் பொண்ணுங்கெல்லாம் காதுலயும் கழுத்துலயுமா... மாட்டிக்கிட்டு இங்க வர்றப்போ எம்புள்ளங்க இப்படி அசிங்கக் கோலத்துல படற பாட்டைப் பாத்து ஒவ்வொரு நாளும் செத்துக்கிட்டிருக்கேங்க."

"................"

"ஒரு நேரத்துல என்னை மாதிரி சம்பாதிச்சவனில்ல. மொத்தக் குத்தகையா




மீனெடுத்து வேனுல ஏத்தி ஊர், ஊரா சில்லறை வியாபாரிங்களுக்குக் கொடுத்து நான் சம்பாதிச்சப்பல்லாம் எம்புள்ளங்க சின்னதுங்களா இருந்துச்சுங்க. அப்படி ஒருமுறை போய்ட்டு வர்றப்ப தான் எதிர்ல வந்த லாரிக்காரன் மோதி சின்னாபின்ன மாக்கி வாழ்க்கையையே நடுத்தெருவுல நிறுத்திட்டுப் போயிட்டான்.''

அக்காவும், நானும் விழிகள் கலங்கி நின்றோம். அத்தான் பேயறைந்தது போல குற்ற உணர்வில் நின்றார்.

''எம் பொண்ணுங்க சம்பாதிச்சுதாங் கய்யா எனக்குச் சோறு போடுதுங்க. அதுங்க மனசு கோணற எதையும் நான் செய்யறதில்லை. எம் பொண்ணு உங்க கிட்ட நடந்துக்கிட்டது தப்புதான்னு தெரிஞ்சும் உங்களைப் பேசிட்டேன். உங் களைப் பேசினதுல தான் அவளுக்கொரு சந்தோசம். அது தப்புன்னாலும் ஏத்துக்கற அனுபவமில்ல. நாம இவ்வளவு பேசிக் கிட்டிருக்கோம். அவளைப் பாருங்க. எல் லாத்தையும் மறந்திட்டு எவ்ளோ சந் தோஷமா இருக்கான்னு. அதைச் சொல் லிட்டுப் போகத்தான் வந்தேன். வர்றேங்க.''

திரும்பி, கட்டைகளை நகர்த்தி விந்தி விந்தி நடந்தார்.

அலைகள் ஆர்ப்பரித்தபடியே இருந் தன. எங்கும் காற்றின் அகப்பரவல். எதை யும் உணரமுடியாமல் உயிரும் உடலும் மரத்து நின்றன.

சற்று நேரம் கழித்து எல்லோரும் அவ்விடத்தை விட்டுக் கிளம்பினோம். மௌனம் எங்களை ஆட்டிப் படைத்தது. யாரும் எவருடனும் பேசிக் கொள்ள வில்லை. அந்தப் பெரியவரின் கடையைத் தாண்டும் பொழுதில் அத்தான் என்ன நினைத்தாரோ, யாரோ அவரை இழுத்துச் செல்வதைப் போல விடுவிடுவென கடைக்குள் சென்று அமர, நாங்களும் ஏதும் கேட்காமல் பின்தொடர்ந்து அமர்ந்தோம். யாரோ புதிதாய் வந்திருக்கிறார்கள் என நினைத்து அதே குழந்தை திரும்பவும் ஓடி வந்தாள். நெருங்கி எங்களைப் பார்த்தும் திரும்பி ஓடி பெரியவரிடம் ஏதோ சொல்ல, அவரும் எங்களைப் பார்த்துச் சிரிக்க, அத்தானும் சிரித்துக் கொண்டே சொன்னார்.

''இங்க வாம்மா எங்களுக்கெல்லாம் பன்னீர்சோடா கொடு. இந்தக் குழந்தைங்க என்னென்ன கேக்குதோ எல்லாத்தையும் எடுத்துக் கொடு'' என்று ஐந்நூறு ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினார். நானும், அக்காவும் கண்களில் நீர்கோக்க ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டோம். ●



''தலைவர் வளைச்சுப் போட்டிருக்கிற பொறம்போக்குக்கு ஆரம்பம் எது, முடிவு எதுன்னே தெரியலையாம்.''

''அதான் தலைவர் எல்லையில்லா மகிழ்ச்சியா இருக்காரா...?''

- சீர்காழி வி.ரேவதி

# சரியும் பா.ம.க.?



**1960** காலகட்டத்தில் வன்னியர் தலைவர்களான ராமசாமி படையாச்சியும் மாணிக்க வேலரும் தனி இயக்கங்கள் கண்டு அந்த இன மக்களிடையே மிகுந்த செல்வாக்குடன் இருந்தனர். அடுத்த பத்தாண்டுகளில் அவர்களது இயக்கங்கள் செல்வாக்கு இழந்துபோக, வன்னிய இளைஞர்களிடையே புதிய இயக்கம் கட்ட வேண்டுமென்று துடிப்பு இருந்தது. ஆனால், ஒன்றுபட்ட இயக்கமாக உருவாகாமல் ஆங்காங்கே சிறு, சிறு அமைப்புகள் உருவாகின. இதில் ஏ.கே. நடராஜன் நடத்தி வந்த சோஷியல் சர்வீஸ் சொசைட்டி என்ற அமைப்பும் ஒன்று. அந்த அமைப்பின் திண்டிவனம் நகர அமைப்பாளராக இருந்தவர் டாக்டர் ராமதாஸ். 1980ல் தமிழ்நாடு முழுவதும் இருந்த சிறு சிறு வன்னியக் குழுக்கள் ஒன்றாக இணைந்து வன்னியர் சங்கத்தைத் தொடங்கின. அந்த அமைப்பில் எந்தப் பொறுப்பும் எடுத்துக்கொள்ளாமல், ஊர் ஊராகச் சென்று வன்னிய மக்களை ஒருங்கிணைத்து, அவர்களை தனி இட ஒதுக்கீடு என்ற போராட்டக் களத்துக்குத் தயார் செய்தவர்களில் ராமதாஸும் ஒருவர். ''நானோ எனது குடும்பத்தினரோ அரசியலில் அரசாங்கத்தில் எந்தப் பொறுப்பும் வகிக்கமாட்டோம்'' என்று அப்போது பேசும்போது சத்தியம் செய்தார் ராமதாஸ். ''இந்த சத்தியத்தை மீறினால் என்னை முச்சந்தியில் செருப்பால் அடியுங்கள்'' என்றும் கர்ஜித்தார்.

வன்னியர் வரலாற்றில் 1987 முக்கியமான கட்டம். இட ஒதுக்கீட்டுக்கான சாலை மறியல் போராட்டத்தில் 28 பேர் போலீஸ் துப்பாக்கிச் சூட்டில் இறந்தார்கள். தேசிய நெடுஞ்சாலையில் மரங்கள் வெட்டிப் போடப்பட்டு, தென் தமிழகத்துக்குப் போக்குவரத்து தடைப்பட்டுப் போனது. வன்னிய அமைப்பின் மீது வெளிச்சம் விழுந்தது.

தொடர்ந்து 1989ல் ஆட்சிக்கு வந்த தி.மு.க. அரசு, மிகவும் பிற்படுத்தப்பட்டவர்களுக்குத் தனி உள் ஒதுக்கீடாக இருபது சதவிகிதத்தை அறிவித்தது. வன்னியர்கள் என்று நேரடியாக அறிவித்து ஒதுக்கீட்டை

**சாயம் வெளுத்துவிட்டது!**

வன்னியர் சங்கம் மற்றும் பா.ம.க.வில் முக்கியத் தலைவராக இருந்து, பின்னர் விலகி இன்று பாட்டாளி மக்கள் முன்னேற்றக் கட்சி என்ற தனி இயக்கம் கண்டிருப்பவர் சி.என்.ராமமூர்த்தி.

"தமது சத்தியத்தை மீறி என்று தம் மகனை கட்சியில் திணித்தாரோ அன்றே துவக்க கால தலைவர்கள் பலர் விலகிவிட்டோம். இன்று அவரது அமைப்பில் பொறுப்பைப் பெற்றவர்களும் பதவியை அனுபவித்தவர்களும் ராமதாஸின் சொந்தங்கள் மட்டுமே. இட ஒதுக்கீடு போராட்டத்தில் இறந்த 28 பேருக்கு இவர் செய்தது என்ன? முதல் பலி பார்ப்பனப் பட்டு ரங்கநாத கவுண்டர். 28வது பலி சிறு தொண்டமான்தேவி தேசிங். இவர்களது வாரிசுகளுக்கு தைலாபுரம் தோட்டத்தில் தோட்ட வேலை கொடுக்கக் கூட டாக்டருக்கு மனம் வரவில்லையே. அவருடைய சாயம் வெளுத்துவிட்டது!" என்கிறார் ராமமூர்த்தி.

செய்யாமல், 'மிகவும் பிற்படுத்தப்பட்டவர்களுக்கு' என்று கலைஞர் அறிவித்ததுகூட ஒரு அரசியல் தந்திரம்தான்.



♣ சி.என். ராமமூர்த்தி

இதற்கிடையில், திண்டிவனத்தில் காங்கிரஸ் தியாகி பழனிவேல் கவுண்டர் வீட்டில் வாடகைக்கு இருந்து மருத்துவராக பிராக்டீஸ் செய்து கொண்டிருந்த ராமதாஸின் செல்வாக்கு வன்னிய மக்களிடையே சரசரவென்று உயர்ந்தது. சட்டமன்றம், பாராளுமன்றத்தில் நுழைந்தால்தான் தங்களுக்குக் கிடைத்த சலுகைகளைத் தக்க வைத்துக் கொண்டு, உரிமைகளைப் பெற முடியும் என்று கருதி வன்னியர் சங்கத்தை அரசியல் கட்சியாக மாற்றத் தயாரானார்கள் வன்னியர் சங்கப் பிரமுகர்கள். இந்த அடிப்படையில் 1989ல் சிரணி அரங்கத்தில் ஐந்து லட்சம் மக்களுடன் உருவானதுதான் பாட்டாளி மக்கள் கட்சி. இதன் நிறுவனராக டாக்டர் ராமதாஸும், தலைவராக தீரனும், பொதுச் செயலாளராக சி.என்.ராமமூர்த்தியும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

1991ல் பா.ம.க. சார்பில் சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் பண்ருட்டி ராமச்சந்திரன். ஆனால், ஒன்றிரண்டு வருடங்களிலேயே ராமதாஸுக்கும், பண்ருட்டிக்கும் கருத்துவேறுபாடு. 1996ல் ஏழு கட்சிக் கூட்டணியில் இணைந்து நான்கு சட்டமன்றத் தொகுதிகளை வென்றது பா.ம.க. பா.ம.க. வரலாற்றில் முக்கிய வருடம் 1998. அப்போது நடந்த பாராளுமன்றத் தேர்தலில் அ.தி.மு.க. கூட்டணியில் நான்கு இடங்களைப் பிடித்தது அக்கட்சி. அதன் பிறகு ஒவ்வொரு தேர்தலுக்கும் தி.மு.க. - அ.தி.மு.க. என்று கூட்டணி மாறிமாறி தமது எண்ணிக்கையை அதிகப்படுத்திக் கொண்டது. மத்தியில் ஒரு கூட்டணி, மாநிலத்தில் ஒரு கூட்டணி என்று புது வரலாறு கண்டவர் டாக்டர். தாங்கள் இருக்கும் கூட்டணியே வெற்றிபெறும் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையில் இருந்த டாக்டருக்கு, 2009 அதிர்ச்சி ஆண்டு. கடந்த பத்தாண்டுகளாக மத்தியில் அமைச்சரவையில் பங்கேற்றதின் மூலமாக கட்சி முன்னேற்றம் கண்ட போதிலும், இப்போது அதன் அடிப்படையே ஆட்டம் கண்டதில் ஆடிப்போயிருக்கிறார் ராமதாஸ். ஒரே ஆறுதல், 1996 முதல் இப்போது வரை தனது வோட்டு சதவிகிதத்தை நான்கிலிருந்து ஆறுக்குள் தக்க வைத்துக் கொள்ள முடிந்திருக்கிறது பா.ம.க.வால்.

''1998, ஜெயலலிதாவோடு கூட்டு சேர்ந்து வெற்றி பெற்று தனிச் சின்னம் கண்டோம். இப்போது அவரோடு இருந்து ஏழு தொகுதிகளை கோட்டை விட்டிருக்கிறோம்'' என்கிறார் ஒரு மூத்த பா.ம.க. பிரமுகர். ராமதாஸ் வன்னியர் இனத்தை, தம் குடும்ப நலனுக்குப் பயன்படுத்துகிறார் என்ற பலமான குற்றச்சாட்டை, பல சிறுசிறு வன்னிய அமைப்புகள் இந்தத் தேர்தலில் முன் வைத்தது எடுபட்டதா? அல்லது பா.ம.க. அடிக்கடி கூட்டணி மாற்றிக் கொண்டதைக் கண்டு மக்கள் எரிச்சலடைந்தார்களா என்பது விவாதத்துக்குரிய கேள்வி. பத்தாண்டுகளில் கிடைத்த வாய்ப்பு, வசதிகளைப் பயன்படுத்தி கட்சி வளர்க்கப்படவில்லை என்ற குற்றச்சாட்டு இருக்கிறது. கிராமத்தில் இருக்கும் பா.ம.க. தொண்டர்களுக்கும் தலைமைக்கும் பெரிய இடைவெளி விழுந்துவிட்டதாகச் சொல்கிறார்கள். 2011ல் தமிழகத்தில் பா.ம.க. ஆட்சி என்ற கோஷத்தோடு வலம் வந்த டாக்டர், இப்போது தம்மைச் சுய பரிசோதனை செய்து கொள்ளும் கட்டாயத்துக்கு உட்பட்டிருக்கிறார்.

## தேர்தல் தோல்வி பாதிப்பிலிருந்து ராமதாஸ் இன்னும் மீளவில்லை!



இனி கட்சி மீது மக்களுக்கு ஒரு மரியாதையை ஏற்படுத்தி, இழந்த செல்வாக்கை மீட்டெடுக்க நீண்டகாலப் போராட்டம் தேவைப்படும்.

**- கௌசி**

# பாரதிபாலன்



**வீ**டே சிக்கில் விழுந்துவிட்டாற் போல் ஆயிற்று. எல்லாம் அரை உசிராய்க் கிடந்தது. வீட்டில் கூட்டம் ஜாஸ்தி. அக்கா, மாமா எல்லாம் திருவேடகத்தில் இருந்து வந்திருந்தனர். பேரையூரில் இருந்து அம்மாச்சியும் அழுதடித்துக் கொண்டு வந்துவிட்டது! தம்பியும் வீட்டுக்குள்ளே இருந்தான். இத்தனை கூட்டம் இருந்தும் வீட்டில் அரவமே இல்லை. எல்லாம் ஈரக்கொலை நடுங்கிக் கொண்டிருந்தது. அப்பா எப்போதும் போல் அவர் சுபாவப்படியே இருந்தார். அவர் மனக்கசிவை கண் காட்டாது; வார்த்தை சொல்லாது; நடையோ உடையோ சொல்லி விடாது! ஆனால் அவர் முகம் கண்ணாடி! காட்டிக் கொடுத்து விடும்!

அப்பா அம்மாவின் முகத்தைப் பார்த்தார். அம்மாவின் முகம் கோணிவிட்டது. ''எதுக்கு இப்படி அரை உசிராக் கெடக்கிங்க... ஒங்களுக்குள்ளே பேசிக்கிட்டு... அவிங்கிட்ட பேச வேண்டியதுதானே; நீங்க பேசுனா கேக்க மாட்டானா?''

''ப்ச.''

''சரி. பாப்பாவும், அவ வீட்டுக்காரரும் வந்திருக்கிறாக இல்லெ. அவுக கோவிந்துகிட்ட பேசட்டும்; அவிந்தேன் சேத்துலெ போய் விழணுங்கிறான்னா விடவா முடியும்?''

''எங்க அவன்?''

''எங்குட்டாச்சும் கண்டா கூட்டியாரச் சொல்லியிருக்கேன்.''

''எனக்கென்னவோ இனி என்னா பேசி என்னாவப் போவுதுன்னுதான் படுது...'' என்று அப்பா முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

**கோவிந்து இந்தச் சூழ்ச்சியில் சிக்கிக் கொள்வானோ என்று அவர் இதயம் அதிர்ச்சியில் கரைந்து கொண்டிருந்தது.**

22

கோவிந்துவின் தம்பி எங்கிருந்தோ மூச்சிறைக்க ஓடிவந்தான். அவன் வீட்டுக்குள் நுழைந்ததும் மொத்த வீடும் அவனைப் பார்த்தது. அறைக்குள் இருந்த அக்கா வீட்டுக்காரரும்கூட கைலி வேட்டியை இடுப்பில் இறுக்கிக் கொண்டே பட்டக சாலைக்கு

டது. இந்த நேரத்தில் இப்படி ஒன்று நடந் தால், பழி யார் தலையில் விழும்? பாவம் ஒரு பக்கம் பழி ஒரு பக்கமா? காலையில் போன கோவிந்து வையும் காணவில்லை. அம்மாவுக்கு கரகரவென்று கண்ணீர் இறங்கிற்று. அப்பா வுக்கு இருப்புக் கொள்ள வில்லை. அவர் உடல் பதறிற்று. கை, கால் எல்லாம் நடுக்கம் கொடுத்திற்று. வாச லுக்கும் வீட்டுக்குமாக நடந்து கொண்டிருந் தார்.

''ஐயா...''

''யாரது...?''

''தண்டல்காரன் நிக்குறான்'' என்று அப்பாவைப் பார்த்தார். அப்பா உடனே வாசலுக்கு வந்தார்.

''ஒங்களை நாட்டாமக்காரய்யா கூட்டி யாரச் சொன்னார்.''

''தோ வாரேன்...''

வெள்ளைச் சட்டையையும் தோள் துண் டையும் போட்டுக் கொண்டார். அம்மா அவர் கூடவே வாசல் வரை வந்தது. ''இவ னையும் வேணா கூடக் கூட்டிட்டுப் போங்க'' என்றது. ஒருகணம் தயங்கி, ''எதுக்கு?'' என்றார். அவர் பதிலுக்குக் காத்திராமல், ''ஏலே கூடப் போயிட்டு வாப்பா'' என்று தம்பியையும் முடுக்கியது.



# காற்று வரும் பருவம்!

**நா**ட்டாமைக்காரர் வீட்டில் ஒரு கூட்டம் சேர்ந்துவிட்டது. பெரிய தோட் டத்துக்காரருடன் சேர்ந்து ஏழு எட்டு வடக்குத் தெருக்காரர்களும் கூடிவிட்டார் கள். அவர்கள் அடிக்கடி அப்பாவைப் பார்த்தனர்... 

வந்தார். அப்பாவும் அம்மாவும் அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தனர்.

''ரோட்டுப் பக்கம் ஒரே கரைச்சலா இருக்கு. வடக்குத் தெருக்காரங்க கடை கண்ணியெல்லாம் மூடியாச்சு!''

''என்னவாம்?'' அம்மா பதறிற்று.

''அந்த மம்பட்டியானைக் குத்திட்டாங் களாம்.''

''என்னடா சொல்றே?''

''தம்புராம்பாறைகிட்ட வெச்சு குத்திட் டாங்குறாங்க...''

எல்லோருக்கும் பயம் பிடித்துக் கொண்




**தென்னாப்பிரிக்காவில் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு சிறைக்குச் சென்று திரும்பியதால், உடல்நலம் சரியில்லாமல் இருந்தாள் அந்தச் சிறுமி. வீட்டுக்கே சென்று அவளைப் பார்த்த காந்தியடிகள், "மறுபடியும் நீ சிறைக்குச் சென்று, அதனால் நீ இறந்து போவதாக இருந்தால் என்ன செய்வாய்?" என்று கேட்டார். "தாய்நாட்டுக்காக உயிரைக் கொடுப்பதில் பெருமை அடைகிறேன்" என்றாள் அந்தச் சிறுமி. அவள் தில்லையாடி வள்ளியம்மை. வேதாரண்யத்துக்கு அருகில் உள்ளது தில்லையாடி!**

**- பூம்புகார் வீர.செல்வம்**

பார்த்தனர். ஜெயபால் கொலைக்குப் பின் இத்தனை நெருக்கத்தில் அவர்களைப் பார்க்கவில்லை; அதுவும் இப்படி ஒரு இக்கட்டான நிலையில். கோவிந்து இந்தச் சூழ்ச்சியில் சிக்கிக் கொள்வானோ என்று அவர் இருதயம் அதிர்ச்சியில் கரைந்து கொண்டிருந்தது. அவனுக்குத்தான் எத்தனை துரதிர்ஷ்டம்! படிப்பில் கெட்டிக்காரன். குணத்திலும் குறைவில்லை. நடை, உடை, எல்லாவற்றிலும் மிடுக்குத்தான். ஒரு குறையும் சொல்ல முடியாமல் வளர்ந்தவன். அந்த வளர்ச்சியின் முடிவு இப்படியா இருக்க வேண்டும்? அப்பா மனசுக்குள் துக்கத்தை அடக்கிக் கொண்டிருந்தார். பெரிய தோட்டத்துக் கருப்பையா அப்பாவைப் பரிவுடன் பார்த்தார். அவருக்கும் அவரைப் பார்த்ததும் மனம் நெகிழ்ந்தது.

''ஐயா! நீங்க கவலைப்படாதீங்க...''

''எப்படிப்பா - முடியும்? சந்தேகக் கண்ணுக்கு சுலோபமா போச்சேப்பா...''

''ஒங்களைத் தெரியாதா எங்களுக்கு?''

தெருவில் பெருங்கூச்சல் கேட்டது.

''ஏலே இந்த ஊருக்கு அழிவு காலம் வந்திடுச்சுடா குடும்பத்தோட; குடியோட; மாடு கன்னு மக்களோட அழியப் போவுதுடா. ஒரு வரம்பு வேண்டாம்; ஒரு இது வேண்டாம்; என்னடா பொழப்பு பொழக்கிறாங்க. ரெண்டும் ஒண்ணாயிடுமாடா; நாலு காசு பணம் இருந்தா அழிச்சாட்டிய மாடா பண்றது?''

''யாருன்னு பாருடா அது?'' என்றார் நாட்டாமைக்காரர்.

''ஏ மக்கா இன்னைக்குச் சொல்றேன்டா; கேளுங்கடா; இந்தூர்லெ ஒரு பெரிய மனுஷனும் சரியில்லெடா; எரிஞ்ச கொள்ளிக் கட்ட அணையலெடா. அதுக்குள்ளார அவிங்க பொம்பளைங்க கூட சகவாஜம் வெச்சுட்டாங்கடா...''

''எவன்னு பாருடா; புடுச்சு ரெண்டு அப்பு அப்பலாம்.''

''முத்து மவன்யா.''

''குடிச்சிருக்கானாக்கும். ஏலே பழனி இப்படி வாடா.''

''ஐயா வணக்கம்; ஒங்க பதவிக்கு ஒல வெச்சிட்டாங்களேய்யா'' என்று அப்படியே முகத்தை மூடிக்கொண்டு, குத்த வைத்து உட்கார்ந்து கொண்டான். தெருவில் போகிறவர்கள் வருகிறவர்கள் எல்லாம் வேடிக்கை பார்த்தனர்.

''வீட்டுலெ போயிப் படுடா.''

''ஸ்டடியாத்தேன் இருக்கேன்யா;

ஊர்லெ நடக்குற கூத்து புடிக்காமத்தேன் கொஞ்சூண்டு, இத்தினியூண்டு வாயிலெ ஊத்திக்கிட்டேன்.''

நாட்டாமைக்காரர் முகம் கடுமையாகவும் அவன் நகர்ந்து விட்டான். ஆனாலும் அந்தக் கூச்சல் அப்பா காதில் ஒலித்துக் கொண்டுதான் இருந்தது. சத்தமே இல்லாத, சந்தடியில்லாத ஒரு அரவம் கூட இல்லாத இடமாகப் பார்த்து ஒதுங்கிவிட வேண்டும் போல் வந்தது.

தலைதெறிக்க இரண்டு மூன்று பேர் உள்ளே ஓடிவந்தார்கள். தம்புராம்பாறையில் இருந்து வண்டி வந்துவிட்டது என்றார்கள். அப்பாவின் உடல் பதறிற்று. நாட்டாமைக்காரரும் பெரிய தோட்டத்துக்காரரும் கூட நடுங்கினாற்போல்தான் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்பா வாய் திறக்காமல், கண் அகல அவர்கள் என்ன சொல்லப் போகிறார்கள் என்று திகிலாகத்தான் இருந்தார். கண்ணீர் விடாத குறையாக அவர்களையே பார்த்துக்கொண்டிருந்தார்.

**அ**து கொலையல்ல என்றவுடன்தான் எல்லோருக்கும் நிம்மதி. கோயில் மாடு முட்டிவிட்டதாம். அப்பாவுக்கு அதற்குப் பிற்பாடுதான் மூச்சே வந்தது.

பஞ்சுவும் அவன் அம்மாவும் ஆஸ்பத்திரி வராண்டாவில் கிடந்தனர். எதிரும் புதிருமாய் வடக்குத் தெரு ஆட்கள். குத்த வைத்துக் கொண்டும், புகையிலையை அதக்கிக் கொண்டும், பீடியைக் குடித்துக் கொண்டும் இருந்தனர். இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் இரண்டு மரப் பலகைகள். அதிலும் ஆட்கள்தான்! தூரத்தில் அவனுக்கு மட்டும் தெரிகிற மாதிரி உட்கார்ந்து இருந்தான் கோவிந்து!

தாழ்ப்பாளை இழுத்துவிட்டு, டாக்டர் வெளியே வந்தார். மொத்தக் கூட்டமும் எழுந்து கொண்டது. டாக்டர் நேரே பெரிய தோட்டத்துக்காரரிடம் வந்தார். ஏதோ சொன்னார். அடுத்த பத்தாவது நிமிடம் அந்த அறைக்குள்ளிருந்து தடதடவென்று ஸ்ட்ரெச்சர் உருண்டு வந்திற்று. நர்ஸுகள் இழுத்து வரவில்லை. காக்கிச் சட்டை போட்ட ஆட்கள். அழுகைச் சப்தம் கூடிற்று. கோவிந்துக்கு வாய் திறந்து அழ முடியவில்லை!

''இறந்தவரோட சம்சாரம் இருக்கா?'' என்றார் டாக்டர்.

''இருக்குங்க.''

''ஊர்த் தலைவர் மாதிரி யாராவது...''

''நாந்தாங்க...''

''பிரேதப் பரிசோதனை செய்யணும். நாளைக்கு மத்தியானத்துக்கு அப்புறம் தான் பாடி கெடைக்கும்...''

''பிரேதப் பரிசோதனையா? மாடு




**மு**த்துப்பேட்டை அருகேயுள்ளது உதயமார்த்தாண்டபுரம் பறவைகள் சரணாலயம். இது நாகை மாவட்டத்தின் வேடந்தாங்கல் என்று புகழ்பெற்று வருகிறது. ஆண்டுதோறும் பல நாட்டுப் பறவைகள் இங்கு வந்து செல்வதால், சீஸன் நேரத்தில் இங்கு பறவைகள் மாநாடுதான்!

**- மீனா சுந்தர்,**
**மன்னார்குடி**



**அம்மாவுக்கு கரகரவென்று கண்ணீர் இறங்கிற்று. அப்பாவுக்கு இருப்புக் கொள்ளவில்லை.**

முட்டினதுதாங்கய்யா!''

''உங்க ஊரு வில்லங்கமான ஊராச்சே! பிற்பாடு பிரச்னைன்னு வரும்.''

''நாங்க பாத்துகிடுறோம்யா...''

''பெரிய டாக்டரே சொல்லிட்டார். எல்லாரும் கெளம்புங்க. ஒருத்தர் ரெண்டு பேரு இருக்கலாம். இந்தாங்க இதுலெ அந்தம்மாட்ட ஒரு கைநாட்டு வாங்கிட்டு வாங்க. பக்கத்துலெ நீங்களும் ஒரு கையெழுத்துப் போடுங்க...'' என்றபடி நகர்ந்தார்.

''ஒரு போன் வேணா போடலாமா?''

''நம்மூர்லெ எங்கடா போன் இருக்கு?''

''குடியானவுக வூட்டுலெ!''

''அது எதுக்குடா?''

''நம்ம மாரி மவன் இங்கதேன் எங்கயோ ஆபீசரா இருக்கான்னாங்கே. அவன வுட்டுப் பேசச் சொல்லலாமுண்டு தேன்.''

''துட்டுக்குத்தேன்டா அடி போடுறாங்க. கையிலெ கண்டதக் கொடுங்க. ஜோலிய முடிக்கப் போடலாம்.''

''இருநூறு ரூபா தாரேன்டா. ஆன மட்டும் பாருடா.''

''கொண்டாங்க'' என்று வாங்கிக் கொண்டு நகர்ந்தான் சின்ன வண்டி மகன்.

''என்னடா ஆச்சு? எம்புட்டுடா கொடுத்தே?'' திரும்பியவனிடம், கூட்டம் வழிமறைத்து நின்றது.

''அவே கொள்ளைக்குக் கேட்டான். கொடுக்கவா முடியும்? அம்புட்டுத்தேன்னு மூச்சாச்சு'' என்று வெற்றி மிதப்பாக நின்றான்.

''இனிப் பொறவு என்னடா செய்யுறது?''

''இங்குனக்குள்ளே காரியம் பண்ணிடலாம்; ஊருக்குக் கொண்டு போக தோது இருக்குமாண்டு தெரியலெ...''

''அவே கிட்ட கேளுங்கப்பா...''

''காருன்னா எம்புட்டுடா கேப்பான்?''

''இந்த மாதிரிண்டா வர மாட்டான். வந்தாலும் கொள்ளத் துட்டக் கேப்பான்.''

''ஆமாடாப்பா''

''இந்த இருட்டுலெ அங்க கொண்டு போயி எங்கடா வெக்கிறது?''

''அதான். அதையும் பார்க்கணுமுல்லெ...''

''நம்ம பெரிய தோட்டத்துக்காரர் இருக்காப்புலெ. அவுக பங்காளிப்பய 'மொக்க' இருக்கான். அந்தாக்குலெ செவலயும், சின்ன வண்டி மவனும் இருக்காங்கே. பொறவு என்ன?

''அதானே...''

''அதோ.. அந்தத் தோப்புக்கு பொற வாக்குலெதேன் இடுகாடு. தூக்கிக் கொண்டு போயிடலாம்...''

''சடச்செம போயி, ஒரு கோடித் துணியும் ரெண்டு மூணு மாலையும் வாங்கியாந்திடுங்க.''

''ஆன் போயிருக்கு...''

''பஸ் ஸ்டாண்டு பக்கம் போயி, நம்ம ஊர் ஆளுங்க இருந்தா தாக்கல் சொல்லி விட்டு வாங்க...''

பஞ்சு சிறிது நேரம் சூனியத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

(அடுத்த இதழில் முடியும்)



# தொன்ம வன்மம்



வெற்றிப்பேரொளி

நான்கு மூலைகளிலும்
இரத்தம் தடவி
அனுப்பப்பட்டிருந்தது
அந்த
அழைப்பிதழ்.

'வெடிகுண்டும் கொலைவாளும் துணை'
என்று
தொடங்கப்பட்டிருந்த
கடிதத்தின் உச்சியில்
பிள்ளையார் சுழிக்குப் பதில்
அரிவாள்மனை

இப்படிக்கு
'என்றென்றும் வெஞ்சினத்துடன்'
என முடிக்கப்பட்ட
கடிதத்தின்
வாசகங்கள்
விடப்படுகின்றன
படிப்பவர்களின்
கற்பனை வன்முறைக்கு.

''கம்யூனிஸ்ட் கட்சியிலுமா ஊழல்?'' என்று புருவம் உயர்த்திக் கேட்க வைத்துள்ளது பினாரயி விஜயன் விவகாரம்.



பினாரயி விஜயன் கள் இறக்கும் தொழிலாளியின் மகன். வயது 65. கல்லூரியில் படிக்கும்போது கம்யூனிஸ சித்தாந்தங்களால் கவரப்பட்டு காம்ரேட் ஆனார். ஒன்றரை வருட காலம் ஜெயில் வாசம் அனுபவித்தவர். முன்பு கேரளாவில் காங்கிரஸ் ஆட்சி காலங்களில் கம்யூனிஸ்டுகள் வேட்டையாடப்பட்டனர். அப்போது தலைமறைவு வாழ்க்கையை நடத்தி, கட்சியை வளர்த்தவர். இவரது துணிச்சலான செயல்பாடுகள் காரணமாக, மாநிலம் முழுவதும் உள்ள கட்சித் தோழர்களுக்கு ஹீரோவாக உருவானார் விஜயன். 1998ல் கட்சியின் மாநிலச் செயலாளராக உயர்ந்த விஜயன் இன்று வரை அந்தப் பொறுப்பில் தொடர்கிறார்.

இது இவரது ஒரு பக்கம்தான். மற்றொரு பக்கம் ''இவர் ஒரு ஃபைவ் ஸ்டார் கம்யூனிஸ்ட்'' என்ற விமர்சனமும் உண்டு. மகள் வீணா, அமிர்தானந்தமயி நடத்தும் கல்லூரியில் படிக்கிறார். இதுவே சர்ச்சையாகிப் போனது. மகன் விவேக் லண்டனில் மானேஜ்மென்ட் படிக்கிறார். இதற்கு தொழிலதிபர் ஒருவர் உதவுகிறார் என்ற பேச்சும் உண்டு. கன்னூர் மாவட்டத்தில் உள்ள பினாரயி கிராமத்தில் இவர் கட்டியுள்ள அரண்மனை போன்ற வீடு தோழர்களை அதிர்ச்சியடைய வைக்கிறது. ''கம்யூனிஸ்ட் என்றால் எளிய வாழ்க்கைக்குச் சொந்தக்காரர்கள் என்ற இமேஜை உடைக்கிறாரே விஜயன்'' என்று, பழுத்த கம்யூனிஸ்ட்டான முதல்வர் அச்சுதானந்தனுக்கு வேதனை. இதுவே இப்போது இருவருக்கும் இடையில் பிளவாக அமைந்துவிட்டது. விஜயனுக்கு பிரகாஷ் காரத் முழு ஆதரவு. கட்சிக்குச் சொந்தமான கைரளி தொலைக்காட்சியில் அச்சுதானந்தனையே தாக்கி செய்திகள் வெளிவந்தன.

# துப்பாக்கி

சர்ச்சைகளின் நாயகன் விஜயன். ஒரு முறை சென்னை விமான நிலையத்தில் பெட்டியில் துப்பாக்கி, புல்லட்டுகளுடன் மாட்டிக்கொண்டார். மாத்ருபூமி பத்திரிகையின் ஆசிரியரைத் தாக்க சதி செய்தார் என்ற குற்றச்சாட்டும் உண்டு.

**சென்னை விமான நிலையத்தில் பெட்டியில், துப்பாக்கி புல்லட்டுடன் மாட்டிக்கொண்டார், பினாரயி விஜயன்!**

**1997-98**ல் கேரளாவில் இடதுசாரி

அரசில் மின்துறை அமைச்சராக இருந்தார் பினராயி விஜயன். அப்போது பள்ளிவாசல், செங்குளம், பன்னியார் ஆகிய இடங்களில் உள்ள நீர்மின் நிலையங்களைப் பழுது பார்த்து நவீனப்படுத்த, 374 கோடி ரூபாய் செலவில் லவ்வலின் (Lovelin) என்ற கனடா நாட்டு நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்யப்பட்டது. அந்த நிறுவனம் கேரள மக்கள் மீது உள்ள நல்லெண்ணத்தின் வெளிப்பாடாக 98 கோடி ரூபாய் செல


* பினராயி விஜயன்

# புல்லட் - தோழர்


* பிரகாஷ் காரத்

வில் தலைச்சேரியில் ஒரு புற்றுநோய் மருத்துவமனை கட்டித் தர ஒப்புக்கொண்டது. வேலை முடிந்தவுடன் பன்னிரண்டு கோடியை மட்டும் மருத்துவமனைக்குச் செலவழித்து விட்டு ஒதுங்கிக் கொண்டது. இதற்கிடையில் 2005ல் செலவைத் தணிக்கை செய்த இந்திய அரசு தலைமை கணக்கதிகாரி, ''374 கோடி வீணாகப் போய்விட்டது'' என்றும், ''எதிர்பார்த்தபடி, நீர் மின் நிலையங்கள் உற்பத்தியை அதிகரிக்கவில்லை'' என்றும் அறிக்கை கொடுத்தார். விவகாரம் பற்றிக் கொண்டது. உயர்நீதிமன்றத்தில் பொதுநல வழக்கு போடப்பட்டது. விஜயனைக் குற்றவாளியாகச் சேர்க்க முடிவு செய்து, கவர்னர் அனுமதி கோரப்பட்டது. மாநில அரசும் அதன் வழக்கறிஞரும் விஜயன் மீது குற்றச்சாட்டுக்கான முகாந்திரம் இல்லை என்று அறிக்கை கொடுத்தனர். அதை மீறி, கேரள கவர்னர் கவாய், விஜயன் மீது வழக்கு போட சி.பி.ஐ.க்கு இப்போது அனுமதி கொடுத்துவிட்டார். இது ஐ.மு. அரசின் அரசியல் பழிவாங்கல் நடவடிக்கையாகக் கருதப்படுகிறது.

''விஜயன் மீது எந்தத் தவறும் இல்லை'' என்பது கட்சி நிலைப்பாடு. வெளிப்படையாக இந்த அடிப்படையில் முதல்வர் அச்சுதானந்தன் செயல்பட்டாலும், 'மறைமுகமாக கவர்னரைத் தூண்டிவிட்டவர் அச்சுதானந்தன்தான்' என்று விஜயன் தரப்பு சொல்கிறது. சரிசெய்ய முடியாத நிலைக்குப் போய்விட்ட, இந்தப் பிரச்னையின் காரணமாக, கேரளாவின் இடதுசாரி அரசு, வரும் தேர்தலில் ஆட்சியைப் பறிகொடுப்பது உறுதி என்கிறார்கள். இதற்கிடையில் ஒரு பொதுக் கூட்டத்தில் விஜயன் மீது செருப்பு வீசப்பட்டது பரபரப்பைக் கூட்டியிருக்கிறது.

- ஸ்ரீ.நி.

# தவணைமுறை தற்கொலை

* திருந்தியவர்கள் குடும்பத்துடன் பங்கேற்கும் கருத்து முகாம்...

**அமிர்தம் சூர்யா**

கோவை ஸ்டேஷனுக்கு வெளியே சின்னராஜுவும் விஜயகுமாரும் சசியையும், அவள் அப்பாவையும் அழைத்துச் செல்ல ஆயத்தமாய் இருந்தனர். ''உனக்கு எப்படிம்மா இவ்வளவு ஃப்ரண்ட்ஸும் உதவிகளும்'' என்றார். ''இது எனக்கு இல்லைப்பா... இலக்கியத்துக்கும் தமிழுக்கும் கிடைக்கிற மதிப்பு'' என்றவளை, பெருமை பொங்க பார்த்தார் அப்பா. வந்திருந்தவர்களுடன் வெள்ளை நிற குட்டி ஜென் காரும் இருந்தது. பொமரேனியன் நாயைப் போல சாந்தமாய். பிரமாண்டமான தத்து வத்தின் போன்சாய் வடிவமான ஜென் பெயரை வாகனத்துக்குச் சூட்டியவன் கில்லாடிதான் என நினைத்துக் கொண்டான் சசி.

சசியின் அப்பாவுக்கு வணக்கமும் பரஸ்பர நல விசாரிப்பும் அரங்கேறியபின், ''சசி... வீட்டுக்குப் போய் குளிச்சிட்டு மதியம் ஒரு மணிக்கு மையத்துக்குக் கிளம்பிடலாம்'' என்றார் சின்னராஜ். ''ஏன் ராஜு நாளைக்கு சாவகாசமாய்ப் போனா என்ன?''

''இல்ல சசி.. மாதத்தின் கடைசி செவ்வாய்க்கிழமை மதியம் 2.30 மணிக்கு வெளியூர்க்காரர்களுக்கும், கடைசி வெள்ளிக் கிழமை உள்ளூர்க்காரர்களுக்கு மாலை 4.30 மணிக்கு நேரம் ஒதுக்கியிருக்காங்க. இந்த நேரத்தில் சிகிச்சை முடிச்சவங்களும் சிகிச்சையைத் துவங்கறவங்களும் தங்களோட அனுபவத்தை மனம்விட்டுப் பேசுவாங்க. அப்போ வெட்கமும் குற்ற உணர்ச்சியும் ஈகோவும் கரைஞ்சு போயிடும். அடுத்தவங்க அனுபவம் நமக்கு ஒரு கைடு லைன் தானே. அதைவிட நோயாளிகளுக்குள் பரஸ்பர கைகுலுக்கல் வந்திடும். இந்தப் பேச்சே ஒரு சிகிச்சைதான்'' என்றார் சின்னராஜ்.




சசிக்கு இது சுவாரஸ்யமாயிருந்தது. ஆன் செக்ஸ்டன் என்ற அமெரிக்கப் பெண்மணி (1928-74) குடிபோதைக்கும் குடும்ப நெருக்கடிக்கும் உள்ளாகி மனநிலை பிறழ்ந்து தற்கொலைக்கு முயன்றவர். அவரை மனநலக் காப்பகத்தில் சேர்த்தனர். எழுதுவது மனத்தைச் சரிப்படுத்தும் என்று நம்பிய மருத்துவர்கள்



தீவிரமான கவுன்செலிங்குக்குப் பின், ''உனக்கு கச்சிதமான மனம் இருக்கிறது. அதனுள் கொஞ்சம்... விரக்தி, சோகம், தனிமையெல்லாம் நிரம்பித் ததும்புது. அதெல்லாவற்றையும் எழுதி எழுதி கொட்டித் தீர்த்திடு''ன்னு பேப்பரையும் பேனாவையும் கொடுத்தனர். கிராமத்துப் பாட்டி தனிமையில், தனிமையைக் கொல்ல தனக்குத்தானே

# பிணைக்கப்பட்ட பறவைகள்!

பேசிக் கொள்ளும் சுயமான பேச்சு சிகிச்சை போல் இந்த எழுத்து சிகிச்சையால் ஆன் செக்ஸ்டன் உலகப் பிரசித்தி பெற்ற கவிஞரானார்.

**பிணைக்கப்பட்டுள்ள பறவைகள்**
**கத்திக் கத்திப் பைத்தியமாகின்றன...**
**கோதுமை வயல் அன்பாய் இல்லாததால்**
**காகங்கள்,**
**கிழவனின் பொய்களாய்**
**சட்டெனப் பறந்து போகின்றன**

என்று எழுதிய ஆன் செக்ஸ்டனின் வரியும் வாழ்வும் சசியின் மனசுக்குள் சம்மணமிட்டுக் கொண்டன. அப்பாவும் பறவை தான். அப்பா என்பது ஒற்றை பிம்பமல்ல. உலகிலுள்ள அனேக அப்பாக்கள்... குடியால் பிணைக்கப்பட்டுள்ளனர். அவர்களின் பிணைப்பு விடுபட வேண்டும். அப்பாக்களின் வயல்களும் அன்பாய் மாற வேண்டும். பிரார்த்தித்துக் கொண்டாள் சசி.

''யோசனை ரதத்தை நிறுத்திட்டு மகிழுந்துக்கு மாறலாமே'' என்றார் உடனிருந்த விஜயகுமார்.

பொள்ளாச்சி மகாலிங்கத்தால் துவக்கப்பட்ட கஸ்தூர்பா காந்தி நினைவு குடி நோய் போதை நீக்கும் சிகிச்சை மையம். கோவை, வரதராஜபுரத்தில் இயங்கிய அந்த மையத்துக்குப் போய்ச் சேர்ந்தனர். டாக்டர் ஆனந்த் மற்றும் டாக்டர் சீனிவாசன் ஆகியோரைச் சந்தித்து சில கேள்விகளை முன்வைத்தாள் சசி. அதற்கு...

''1994-ல் இந்த மையத்தில் சேர்ந்து 93 பேர் சிகிச்சை பெற்றனர். 2008-ல் மட்டும் 817 பேர் சேர்ந்து சிகிச்சை பெற்றனர். இதுவரை 5,800 பேர் இங்கு சிகிச்சை பெற்று குடியை விட்



• ஆன் செக்ஸ்டன்

டிருக்கின்றனர். இது மக்களிடையே குடிநோயிலிருந்து மீள வேண்டும் என்கிற விழிப்புணர்வின் வெளிப்பாடு. பத்து நாட்கள் இங்கு தங்கி சிகிச்சை மேற்கொள்ள வேண்டும். அனுமதிக்கப்பட்ட நோயாளிக்கு சைவ உணவும் மாத்திரையும் மட்டுமே. மாத்திரை சாப்பிடும் காலங்களில் குடி எண்ணம் வராது. மீறிக் குடித்தால் உடல் அதை ஏற்றுக்கொள்ளாது. மின் அதிர்ச்சி வைத்தியம் ஏதும் இல்லை. இந்த மாத்திரை போதை தரும் மாத்திரை அல்ல. இம்மாத்திரை எதிர்வினையற்றது. உடலுக்குத் தீங்கற்றது. இதற்குப் பின் கூட்டு கவுன்செலிங், பின் யோகா, தியானம் என

**எச்சரிக்கை**

**தற்கொலையின் 11வது தவணை:**

**மனநலக் காப்பகத்தில் சிகிச்சை பெறுவோரில் பெரும்பான்மையானோர் போதைக்கு அடிமையானவர்கள்தான் என்கிறது ஆய்வு. குடிநோயின் உச்சபட்ச எல்லை முடிவுறும்போது மனச்சிதைவு, மனப்பிறழ்வுக்கான எல்லை துவங்கி விடுகிறது.**



* டாக்டர் ஆனந்த்

**மாத்திரை சாப்பிடும் காலங்களில் குடி எண்ணம் வராது. மீறிக் குடித்தால், உடல் அதை ஏற்றுக் கொள்ளாது.**



* டாக்டர் சீனிவாசன்

வாழ்க்கை முறை மாறும். பிறகு ஒரு வருடம் தொடர் சிகிச்சை, இதை நீங்கள் வீட்டிலிருந்தே தொடரலாம். ஆனால் மாதம் ஒருமுறை இங்கு வர வேண்டும். செக்ஸ் வாழ்க்கை, தன்னம்பிக்கை பற்றி, ஆலோசனை முகாமும் உண்டு'' என்று கூறிய டாக்டர், சசியின் அப்பாவை தனி கவுன்செலிங் செய்தபின், பத்து நாட்கள் தங்கி சிகிச்சை எடுத்துக் கொள்ள சேர்த்துக்கொண்டது மையம். முதல் மாத்திரையை அப்பா விழுங்கினார்.

ஒருமுறை குடிநோயிலிருந்து மீண்டவர்களின் கூட்டத்தில், அவர்களின் அனுபவப் பகிர்வைக் கேட்டுப் பாருங்கள் என்று அழைத்துச் செல்லப்பட்டனர்.

தன்னை, தன் வாழ்வை ஒருமுறை ஒளிவுமறைவு இன்றி பிறர் முன் திறந்து காட்டும் நிகழ்வு அது. திருந்தியவர்க்கு உறவுகள் வார்த்தைகளால் வாசித்து வழங்கும் தாமிரப் பட்டயங்களின் சங்கமிப்பு முகாம். அந்தக் குரல்களின் பதிவு விசேஷமானது.

''குடிச்சு குடும்ப மானத்தைக் கெடுத்த மகன் பூபதி, இப்போ திருந்தி நல்லாயிருக்கான். இனிமேதான் அவனுக்குக் கல்யாணம் பண்ணனும். இப்ப அவனுக்குப் போட்டி போட்டு பொண்ணு கொடுப்பாங்க.''

**- ஹரி கிருஷ்ணன் (தந்தை)**

''மண்ணெண்ணெய் ஊத்தி எங்களைப் பத்த வைக்க முயற்சி செய்த அப்பா, திருந்தி எங்களைப் பத்திரமா காப்பாத்துறார். ரொம்ப சந்தோஷம். அப்பவே திருந்தியிருந்தா நான் பி.ஈ. முடிச்சிருப்பேன்.''

**- தம்பி, உக்கடம்**

''ஒருநாளைக்கு ரூ.200/- வரை குடிச்சதை நிறுத்திட்டேன். இப்ப ஒரு காரும் ஒரு வீடும் எனது சேமிப்பு. ஆறு வருடத்துக்குப் பிறகு இப்ப குழந்தை பிறந்திருக்கு. எல்லாம், குடி என்னை விட்டு அடியோடு கழன்ற பிறகு தான்.''



* ஜெகதீஷ்

**- ஜெகதீஷ்**

அடுத்து பேச சசியின் அப்பா எழுந்தார்.

**(அடுத்த இதழில் முடியும்)**

**படங்கள்: சின்னராஜ்**

# மு.ரா. முத்திரை



"தளராத தன்னம்பிக்கையும் கடுமையான உழைப்பும் சேர்ந்தால் வெற்றி நிச்சயம். அந்த வெற்றியை யாராலும் தடுக்க முடியாது."

இதுதான் மு.ரா.ரகுபதி நாயுடு சொல்லும் வெற்றிக்கான தாரக மந்திரம். திருவாரூரில் நம்பிக்கையின் சின்னமாக ஏராளமான வாடிக்கையாளர்களை ஈர்த்துள்ள 'மு.ரா. சன்ஸ்' ஜவுளிக் கடையின் ஆரம்பம் மிகவும் சாதாரணமானது. 1957ல் ஓடு வேய்ந்த சிறிய கட்டடத்தில் கடையைத் துவக்கினார். பல சமயங்களில் தமது தோளில் துணிகளைச் சுமந்து சென்று விற்றுள்ளார்.



வளர்ச்சிப் பாதையில் வேகமாகச் சென்று கொண்டிருந்த சமயத்தில் ஒரு விபத்து. இரண்டு ஆண்டுகள் படுக்கையை விட்டு நகர முடியாதபடி ரகுபதி நாயுடுவை கட்டிப் போட்டது அந்த விபத்து. சாதனையாளர்களை இதுபோன்ற விபத்துகளால் என்ன செய்துவிட முடியும்? அவரது சவாலான உழைப்பின் முன்பு அந்த விபத்து தோற்று ஓடிப்போனது.

ஜவுளித் துறையில் வெற்றிக் கொடியைப் பறக்க வைத்த ரகுபதி நாயுடு, அடுத்து மருந்து விநியோகம் பக்கம் திரும்பினார். அதையும் சிறப்பாகச் செய்து வருகிறது மு.ரா. சன்ஸ்.



ரகுபதி நாயுடுவுக்கு இரண்டு பிள்ளைகள். தந்தையின் எட்டடி சாதனையைப் பதினாறடியாக மாற்றும் முயற்சியில் பயணித்துக் கொண்டிருக்கிறார்கள். ரகுபதி நாயுடுவின் இளைய மகன் நந்தகோபால் 'முத்திரை தியானம்' வகுப்பை நடத்துகிறார். லயன்ஸ் கிளப்பின் மாவட்டத் தலைவராக இருக்கிறார்.

ஒவ்வொரு ஆண்டும் மகா சிவராத்திரி தினத்தில் திருவாரூர் தியாகேஸ்வரர் ஆலயத்தில் நடக்கும் 'நாட்டியாஞ்சலி' நிகழ்ச்சியை முழுப் பொறுப்பேற்று நடத்துகிறார்கள். வியாபாரம், ஆன்மிகம், சேவை என எல்லாவற்றிலும் கவனம் செலுத்தி முத்திரை பதித்து வருகிறது மு.ரா. சன்ஸ்!

# மாசிலாமணி



தன்னைத் தவறாக நினைத்துக் கொண்டிருக்கும் காதலியிடம், நாடகமாடி, தன்னை நிருபித்து காதலியுடன் கைகோக்கும் வழக்கமான ஃபார்முலாதான் மாசிலாமணி. ராணி அண்ணா நகரில் ஏற்படும் எல்லாப் பிரச்னைகளுக்கும் முதல் ஆளாக முன்னின்று, தேவைப்பட்டால் அடிதடியிலும் இறங்கி பிரச்னையைத் தனி ஆளாக நின்று முடித்து வைக்கும் மாசியை, பொறுக்கி எனப் புரிந்துவைத்திருப்பவள் திவ்யா. நாட்டியம் பயிலும் திவ்யாவிடம் மனத்தைப் பறிகொடுத்துவிட்டு அவளிடம் நல்ல பெயர் வாங்குவதற்காக, அவள் இல்லாத நேரமாகப் பார்த்து அவள் வீட்டில் இருக்கும் எல்லோரிடமும் நல்ல பெயர் வாங்குகிறான் மணி. திவ்யா மணியை விரும்புகிறாள், மாசியை வெறுக்கிறாள். மாசியும், மணியும் ஒருவன் என திவ்யாவின் முறை மாமன் இன்ஸ்பெக்டரான பூபதி நிருபிக்க, திவ்யாவின் முடிவு என்ன என்பதைச் சுற்றி வளைக்காமல் நேரடியாகவே சொல்லியிருக்கிறார் இயக்குநர் ஆர்.என். ஆர்.மனோகர். மாசியாக, நகுலும், திவ்யாவாக சுனேனாவும் சொன்ன வேலையைக் கச்சிதமாகச் செய்திருக்கிறார்கள்.

படத்தில் நம்மை வயிறு குலுங்கச் சிரிக்க வைக்க முயற்சித்திருக்கும் எம்.எஸ்.பாஸ்கரை மனமாரப் பாராட்டலாம். நகைச்சுவை மனிதருக்கு இப்போது நன்றாகவே கைகூடியிருக்கிறது. அதுவும் 'கடவுள் பாதி... மிருகம் பாதி'யில் தியேட்டரையே கலகலக்க வைக்கிறார். இன்ஸ்பெக்டராக வரும் பவனின் நடிப்பு ஈர்க்கிறது. கட்டுடலும், திருத்தமான முகமும் வாய்த்திருக்கிறவருக்கு இந்தப் பாத்திரம் பொருந்தவேயில்லை. 'வெற்றி'யின் சீரான ஒளிப்பதிவும், 'டோரா... டோரா' பாடலும் படத்துக்குக் கூடுதல் பலம். திரைக்கதையில் கொஞ்சம் சுவாரஸ்யத்தைக் கூட்டியிருக்கலாம், மாசிலாமணி - காமெடி வித்தை!

- கிராபியென் ப்ளாக்



"போழ் ஒத்த வெண்மதியம் சூடிப் பொலிந்து இலங்கு
வேழத்து உரி போர்த்தான் வெள் வளையாள் தான்வெருவ
ஊழித்தீ அன்னானை ஓங்கு ஒலிமாப் பூண்டது ஓர்
ஆழித்தேர் வித்தகனை நான் கண்டது ஆரூரே!"

- தேவாரம் நான்காம் திருமுறையில்
திருநாவுக்கரசர்



**வ**லன்' என்ற அசுரனை வெல்ல மானிடரின் உதவி தேவைப்பட்ட போது, இந்திரனுக்கு உதவியவன் சோழநாட்டு அரசனான முசுகுந்தச் சக்கரவர்த்தி. தன் வெற்றிக்குக் காரண மான முசுகுந்தனுக்கு இந்திரன் சிறப்பான பரிசைத் தர விரும்பினான். 'எதை வேண்டு மானாலும் கேள்! தருகிறேன்' என்று வாக்குறுதி யும் தந்துவிட்டான். இந்திரன் பூஜித்து வந்த சோமாஸ்கந்த விக்ரகத்தை தனக்குத் தருமாறு கேட்டான் முசுகுந்தன்! இந்திரனுக்குப் பெரும் அதிர்ச்சி! மகாவிஷ்ணுவால் பூஜிக்கப்பட்டு, வந்தது அந்த விக்கிரகம்! பின்னர் அவரே அதை இந்திரனிடத்தில் தர, இந்திரன் அதைப் பூஜித்து வந்திருக்கிறான். ஆகாச கங்கையால் அபிஷே கம் செய்து, கற்பக மலர்களால் அர்ச்சித்து வந்த அபூர்வ விக்கிரகம். என்ன செய்வது! வாக்கு கொடுத்தாகிவிட்டது! மீற முடியுமா? விஸ்வ கர்மாவை வரவழைத்து, அதேபோல் ஆறு விக்கிரகங்களைச் செய்து வரிசையாக வைத்து, "நீ விரும்பியதை எடுத்துக்கொள்" என்றானாம் இந்திரன். தெய்வானுக்கிரகத் தாலும் சோழ நாட்டின் பாக்கியவசத்தாலும் அசல் விக்கிரகத்தை அடை யாளம் காட்டினான் முசு குந்தன். அவன் சாமர்த் தியத்தை மெச்சி மற்ற ஆறு விக்கிரகங்களையும் சேர்த்து ஒரு தேரில் வைத்து, சகல மரியாதை



களுடன் பூமிக்கு அனுப்பி னானாம் தேவேந்திரன்.

**தி**ருவாரூர் முதலான ஏழு தலங்களில் அந்த ஏழு விக்ரகங்களையும் வைத்து கோயில் அமைத்து வழி பட்டுப் பேறு பெற்றான் முசுகுந்தன். விண்ணுல கில் இருந்து கொண்டு வந்த இந்த ஏழு சோமாஸ்கந்த விக்கிர கங்கள்தான் 'தியாக ராஜர்' என்ற பெயரில் சப்த விடங்க ஸ்தலங் களில் அருள்பாலிக்கின்

### தியாகராஜர்

**தி**யாகராஜர் என்று பெயர் வரக் காரணம் என்ன? பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுக்க முற்பட்டபோது, முதலில் தோன்றியது ஆலகால விஷம்தான். அமுதத்துக்கு 'நான்! நீ!' என்று அடித்துக்கொண்டவர்கள், ஆலகால விஷம் என்றதும் ஓட்டம் பிடித்தார்கள். மற்றவர்கள் வேண் டாம் என்று நிராகரித்ததை தாம் ஏற்று, தம் தொண்டையிலேயே தரித்துக்கொண்ட விட முண்ட கண்டனின் தியாகத்தால் மற்றவர்கள் பிழைத்தனர். இந்த தியாகத்தினால் அவர் 'தியாகராஜர்' ஆனார் என்று காஞ்சி மகாஸ்வாமிகள் சுவையாகக் கதை சொல்வார்கள்.

## போகராஜர்

தியாகராஜர் ஒரு சுகவாசி. காற்றுப் புகாத கருவறையில், இருட்டில் முணுக்முணுக் என்று எரியும் ஒற்றை தீபத்தின் ஒளியில் இருப்பவரல்ல அவர். விசாலமான மண்டபத்தில் ஜில்லென்ற தென்றல் காற்று தவழ்ந்து வர, ஆசுவாஸமாக அமர்ந்து காட்சியளிக்கிறார். தென்றல் வருவதற் கென்றே கல்லால் ஆன பலகணி (திருச்சாலகம் என்று இதற்குப் பெயர்) அவர் குடிகொண்டிருக்கும் மண்டபத்தில் உண்டு. ஜெகத்ஜோதியாய் மின்னும் சரவிளக்குகளின் ஒளியில், தங்கத் தகடு வேய்ந்த சந்தன மரத்தால் ஆன சிம்மாசனத்தில் வீற்றிருக் கிறார்.

றன. உளியால் செதுக்கப் படாத, விஸ்வகர்மாவினால் உருவாக்கப்பட்ட விக்கிரகம் என்பதால் 'விடங்கர்' (வி+டங் கர்=உளி படாது உருவானவர்) என்று பெயர் பெற்றார் தியாகராஜர்.

ராஜாவுடன் வந்த ராஜா ஆனதால் திரு வாரூர் தியாகராஜருக்கு ராஜோபசாரம்!

சிம்மாசனம் என்ன! சாமரம், கொடி, குடைகள்



**சுகந்தராஜர்!**

**வா**சனை இல்லாத பூக்களை அவருக்குச் சாற்றுவதில்லை. எல்லாம் மணம் மிகுந்த நறுமலர்களே! அவர் உகந்த மலர் செங்கழுநீர். அதனைப் பயிர் செய்வதற்கென்றே செங்கழுநீர் ஓடை (5 வேலி பரப்புள்ளது) திருவாரூரில் இருந்திருக்கிறது. (இன்று அதைக் கூறு போட்டு அடுக்குமாடிகள் கட்டப்பட்டுவிட்டது வேறு விஷயம்.)

என்ன! ஆலவட்டம் என்ன! திருவாரூர் தியாகராஜப் பெருமான் சன்னிதியில் மாலை வேளையில் சாயரட்சை பூஜையின்போது பார்க்க வேண்டுமே! சகலவிதமான ராஜோபசாரங்களும் ஏற்று கம்பீரமாக வீற்றிருப்பார். 'கம்'மென்று நறுமணம் வீசும் மல்லிகை, முல்லை, ஜாதி, இருவாட்சி, சண்பகம், பாதிரி, செவ்வந்தி, மருக்கொழுந்து என்று ஊரையே தூக்கும்

**திலகராஜர்!**

**ச**ந்தனம், தேவதாரு, அகில், சாம்பிராணி ஆகிய வாசனை திரவியங்களை ஊற வைத்து, சுண்டக் காய்ச்சி, வடிகட்டித் தயாராகும் 'கமகம' சாந்துப் பொட்டு அவர் காது தோடுகளை அலங்கரிக்க, பச்சை கற்பூரம், பன்னீர், குங்குமப்பூ, சந்தனம் இவற்றை அரைத்துச் செய்த கலவையை நறுந்திலகமாக நெற்றியில் அணிந்து, எப்போதும் காட்சியளிக்கிறார்.

## உளியால் செதுக்கப்படாத, விஸ்வகர்மாவினால் உருவாக்கப்பட்ட விக்கிரகம் என்பதால் 'விடங்கர்' என்று தியாகராஜர் பெயர் பெற்றார்

வாசனை! குங்கிலியம், சாம்பிராணி என்று தூபங்கள் வேறு! அடுக்கு தீபம், அலங்கார தீபம் என்று தீபங்களின் ஒளியில் ஜொலிப்பார் தியாகராஜர்! காணக் கண் கோடி வேண்டும்!

அவசரம் இல்லாமல் மந்திரங்களை மிகவும் நிதானமாக ஓதி நடைபெறுகிறது இந்த சோடசோபசார பூஜை. திருவந்திக்காப்பு என்று சிறப்பாகப் பேசப்படுகிறது. திருவாரூரில் அவசியம் பார்க்க வேண்டிய பூஜை இது. நாள்தோறும் தேவேந்திரனே அரம்பையர் புடைசூழ வந்து இதை நடத்துவதாக ஐதிகம்.

தேவர்கள் கறையான்களாக உருவெடுத்து உருவாக்கிய புற்றுதான் லிங்க வடிவமாகி, மூலஸ்தானத்தில் புற்றிடம் கொண்ட வன்மீகநாதராய் விளங்குகிறது. இவரது கருவறையிலேயே சோமகுலநாயகி என்ற பெயரில் செப்புத் திருமேனியாக அம்பிகை வீற்றிருக்கிறாள். ஆனால், மூலவரைக் காட்டிலும் தியாகராஜருக்கே உபசாரங்கள் அதிகம்! ○



பருப்பில்லாமல் கல்யாணமா? தெவிட்டாத தேரினைப் பற்றிய சுவையான செய்திகள் இல்லாமல் திருவாரூர் - நாகை மாவட்டச் சிறப்பிதழா?

திருவாரூர் தேர் சம்பந்தமான ஆன்மிகப் புதையல் ஒன்றை கல்கி வாசகர்களுக்கு வழங்க உடன் ஒப்புதல் அளித்தது பாரம்பரியமும் பண்பும் கொண்டு சரித்திரம் படைத்து வரும் சிட்டி யூனியன் வங்கி. தேர்த் திருவிழாவின்போது ஒவ்வொரு வருடமும், தண்ணீர்ப் பந்தல் அமைத்து திருவாரூர் பக்தர்களுக்குப் பணி செய்து வரும் CUB, *கல்கி திருவாரூர்- நாகை* மாவட்டச் சிறப்பிதழுக்காக நம்முடன் இணைந்தது இறையருள்.




# சிறப்பான வாழ்வுக்கு






எஸ்.பாலசுப்பிரமணியன்





"எங்கள் வங்கியின் முன்னாள் சேர்மன் வி.நாராயணன் கூறுவார். 'வங்கி பாதுகாப்பானதாக இருக்க வேண்டும். அப்படி தொடர்ந்து இயங்கினால்தான் வாடிக்கையாளர்களை வங்கி பாதுகாக்கும்!' இன்றுவரை அவரது வார்த்தைகளே வலிவுமிக்க தூண்களாக எங்களுக்கு அமைந்துள்ளன என்றால் அது மிகையல்ல. தமிழகத்தில் நகரங்கள் - கிராமங்கள் எனப் பாகுபாடின்றி மொத்தம் நூற்றுமுப்பத்து நான்கு இடங்களில் கிளைகள் அமைந்துள்ளன. ஆந்திராவில் இருபத்தொன்பது, கேரளாவில் பத்து, கர்நாடகாவில் பதினைந்து இடங்களில் கிளைகள் அமைந்து இயங்கி வருகின்றன. மகாராஷ்டிரா, குஜராத், பாண்டிச்சேரி, மேற்கு வங்காளம், புதுடெல்லி, உத்தரப்பிரதேசம் போன்ற மாநிலங்களிலும் CUB கிளைகள் செயல்படுகின்றன. இந்தியா முழுவதுமாக இருநூற்றெட்டு கிளைகள், வங்கிக் கிளை ஏ.டி.எம் மையங்கள் நூற்றுப் பதினேழு, வங்கிக் கிளை சாராத ஏ.டி.எம் மையங்கள் ஆறு... என வங்கியின் விழுதுகள் விஸ்தாரமாகியபடியே இருக்கின்றன.

வைப்புத் தொகை சேகரிப்பு, கடன் வழங்குதல் போன்றவற்றில் அதிக கவனம் செலுத்தப்படுகிறது. வாடிக்கையாளர்களின் தேவைகளுக்கேற்ப, இதர வங்கிகளை மிஞ்சும் வகையில் சேவைகளை அளித்து வருவதால், வாடிக்கையாளர்களின் எண்ணிக்கை அபரிமிதமாக இன்னும் வளர்ந்தபடியே இருக்கிறது!" எனக் கூறுகிறார் சிட்டி யூனியன் வங்கி சேர்மனும் தலைமை நிர்வாக அதிகாரியுமான எஸ்.பாலசுப்பிரமணியன்.




# CUB

ஆங்கிலேயர் காலத்தில் இருபது பெரியவர்கள் மக்களுக்கான வங்கி ஒன்று வேண்டும் என்று யோசித்தனர். யோசனையின் முடிவு 'கும்பகோணம் பாங்க் லிமிடெட்' என்ற வங்கியின் துவக்கமாயிருந்தது - அது 1904.

அரிய திட்டம், ஆனந்த சேவை, இடையறா முயற்சியால் தன்னோடு எடுத்துக் கொண்டது சிட்டி ஃபார்வர்டு வங்கியையும் யூனியன் வங்கியையும். இந்த மகா இணைப்

“வெளிநாட்டு வங்கிகள் மற்றும் புதிய தலைமுறை வங்கிகள் நவீன தொழில்நுட்பங்களை முழுமையாகக் கொண்டு, நாட்டின் மூலை முடுக்குகளில் நுழைந்து, மற்ற வங்கிகளுக்குப் பெரும் சவாலாக அமைந்தன. அந்தச் சூழ்நிலைகளிலும் நிதானமாகவும், கூர்நோக்குடனும் சீரிய திட்டமிடலுடனும் இயங்கியது CUB. வாடிக்கையாளர்களின் தேவைகளை உடனுக்குடன் நிறைவேற்றி, புதிய தொழில் நுட்பங்களைக் கைப்பற்றி சாதனைகளாக மாற்றி வளர்ச்சிப் பாதையில் ஏறுமுகமாகவே நடைபயில்கிறது சிட்டி யூனியன் வங்கி!” என்கிறார் வங்கியின் Executive Director என்.காமகோடி.

● என்.காமகோடி



புக்குப் பின் 1965-லிருந்து ‘கும்பகோணம் சிட்டி யூனியன் வங்கி’யாக புது அவதாரம் பூண்டது. குடத்தில் இட்ட விளக்காக இல்லாமல் ஆகாயச் சூரியனாய் அடுத்தடுத்த மாவட்டம், மாநிலம் என வங்கியின் கிளைகள் வெளிச்சமாய்ப் பரவின. வங்கியின் பரவல் அதிகமாக, கும்பகோணம் என்ற ஒற்றைச் சொல் விலகி, ‘சிட்டி யூனியன் வங்கி லிமிடெட்’டாக புதுப் பெயரை, பொலிவாகச் சூட்டிக் கொண்டது. தேர்ச்சியான CUB வாடிக்கையாளர்கள் இது தேசிய கவனத்துக்கான வணிக முயற்சி என்பதைத் தெளிவாகப் புரிந்திருந்தனர்.

1989-ல் கும்பகோணத்தில் வங்கிப் பணியாளர்கள் மற்றும் அதிகாரிகளின் பன்முகத் திறன் வளர்ச்சிக்கும் பணி மேம்பாட்டுக்குமென Staff Training College துவக்கப்பட்டது. சர்வதேச வங்கிகளுடன் வணிக ரீதியிலான செயல்பாடுகளுக்கு ரிசர்வ் வங்கி அனுமதியளிக்க 1990-லிருந்து வங்கியின் பணி இன்னும் விஸ்வரூபம் கொண்டது. சிட்டி யூனியன் வங்கியின் கிளைகள் அனைத்தும் Core Banking System மூலம் ஒன்றாக இணைக்கப்பட்டு துரித சேவை, உடனடி பரிமாற்றம் ஆகியவற்றை வாடிக்கையாளர்களுக்கு எளிதாக்கியது. இதற்கான நவீன தொழில் நுட்பத்தையும் தன்னோடு இணைத்துக் கொண்டதால் வாடிக்கையாளர்களின் மனநிறைவைத் தன்னோடு தக்க வைத்திருக்கிறது CUB.

**“வங்கி பாதுகாப்பானதாக இருக்க வேண்டும். அப்போதுதான் வாடிக்கையாளர்களை வங்கி பாதுகாக்கும்.!”**

இவ்வங்கியின் விழுதுகளாயிருக்கும் அதிகாரிகள், வங்கியின் ஆணிவேரா யிருக்கும் அம்சங்களை நம்முடன் பகிர்ந்து கொண்டுள்ளனர். ○





**சா**க்த தத்துவப்படி, திருவாரூர், பூமா தேவியின் இதயக் கமலமாக விளங்குகிறது. அதனால் இங்கு தனிக் கோயில் கொண்டு அரசோச்சுகிறாள் அன்னை கமலாம்பிகை. கோயிலின் விரிந்து பரந்த வளாகத்தின் ஈசான்ய (வட கிழக்கு) மூலையில் உள்ளது அவள் கோயில். அழகும் அருளும் பொழியும் திருவடிவம்! அபூர்வமான கோலம். பெரும்பாலும் நின்ற கோலத்திலும், சில இடங்களில் மட்டுமே அமர்ந்த கோலத்திலும் காட்சி தரும் அம்பிகை, இங்கு அமர்ந்த கோலத்திலும் அபூர்வ கோலம் காட்டுகிறாள்! வலது காலை இடது கால் மேல் போட்டுக் கொண்டும், தொங்க விட்ட திருப்பாதங்களைப் பின்னிக் கொண்டும் அமர்ந்திருக்கும் வடிவம். இந்த ஆபூர்வ வடிவம் பிராணாயமத்தின் விளக்க வடிவம் என்றும், அம்பிகை அமர்ந்திருக்கும் கோலம் 'குட்டிகாசனம்' என்னும் யோக நிலை என்றும் பழைய நூல்கள் கூறுகின்றன. வலது திருக்கரத்தில் செங்கழுநீர்ப் பூவை ஏந்தி, இடது திருக்கரத்தை தொடையில் பதித்து, வலப்புறம் திரும்பி அமர்ந்திருந்தாலும் அருள்பொழியும் முகத்தை நம்மை நோக்கித் திருப்பி தரிசனம் தருகிறாள் அம்பிகை.

# கமலாம்பிகையின் கருணை முகம்!

மிகச் சிறிய உருவானாலும் கம்பீரமான உருவம். யோக வடிவமான ஞானாம்பிகை!

ஸ்ரீசக்ரத்தின் மத்தியில் பிந்துஸ்தானத்தில் வீற்றிருக்கும் லலிதா மகா திரிபுரசுந்தரியே கமலாம்பிகையாக இங்கு அருள்பாலிக்கிறாள். ○





தியாகராஜ ஸ்வாமி எப்போதெல்லாம் தமது இருப்பிடத்திலிருந்து வெளியே எழுந்தருள்கிறாரோ, அப்போதெல்லாம் ஆடிக்கொண்டேதான் வருவார்! அவரைத் தூக்கி வரும் ஸ்ரீ பாதம் தாங்கிகள், அவரை அவரது பீடத்தோடு அப்படியே மணித்தண்டு என்கிற புள்ளத் தண்டில் பொருத்தி வைத்து, முன்னும் பின்னுமாகவும் பக்கவாட்டுகளிலும் அசைந்து அசைந்து ஆடியபடி தூக்கி வருவார்கள். குலுக்கிக் குலுக்கி அவர்கள் மேள இசைக்கு ஏற்ப ஆடுவது, கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

இந்த ஆட்டத்தைத்தான் அஜபா நடனம் என்பார்கள். ஏழு விடங்க ஸ்தலங்களிலும் ஒவ்வொரு விதமான நடனம் வழக்கில் இருக்கிறது. திருவாரூருக்குரியது அஜபா. ஜபம் என்றால் மந்திரம் என்று பொருள். அ-ஜபம் என்றால் ஜபிக்காத மந்திரம் என்று அர்த்தம். நாம் விடுகிற மூச்சுக் காற்றுகூட நம்மை அறியாமலே நாம் ஜபிக்கும் மந்திரம் என்கிறது யோக சாஸ்திரம். இந்த மந்திரத்துக்கு ஹம்ஸ மந்திரம் என்று பெயர்.

பாற்கடலில் பள்ளிகொண்ட மஹாவிஷ்ணு, தமது மார்பிலேயே தியாகராஜாவை வைத்துப் பூஜித்து வந்தார். அவரது மூச்சுக் காற்றுக்கு ஏற்ப அந்த விக்கிரகம் எழுவதும் விழுவதுமாக அசைந்த வண்ணம் இருந்தது. இப்படி மஹாவிஷ்ணுவின் மூச்சுக்காற்றுக்கேற்ப அசைந்து ஆடியதையே அஜபா நடன அசைவுகள் குறியீடாக உணர்த்துகின்றன.



# தியாகராஜா... தீகி...தீகி..!

ஆகவே இந்த அஜபா, சாமானிய நடனமல்ல, மஹாவிஷ்ணுவின் மூச்சுக் காற்றுக்குப் பரமேசுவரன் ஆடும் கனி நடனம்! (தியாகராஜர் சன்னிதிக்கு இடப்புறமுள்ள வாயிலின் கதவில், மஹா

விஷ்ணு தியாகேசரை மார்பில் வைத்துப் பூஜிக்கும் காட்சி அமைக்கப்பட்டுள்ளது.)




**ப**ங்குனி மாதம் வசந்த உத்ஸவத்தின்போது தேருக்கு எழுந்தருளுகையிலும், தேரோட்டம் முடிந்து பக்த காட்சியின்போதும் இந்த ஆட்டத்தை தரிசிக்கலாம். சாதாரணமாக பக்தர்கள்தானே பெருமானை வலம் வந்து வணங்குவார்கள்? இங்கே, திருவாரூரில் தியாகராஜப் பெருமான் பக்தர்களை வலம் வருகிறார்! தேரோட்டம் முடிந்து, பிராயச்சித்த அபிஷேகம் ஆனவுடன் திருவிழாவின் நிறைவாக மகாபிஷேகம் நடைபெறும். அதன் பிறகு முசுகுந்தார்ச்சனை நடக்கும். வாண வேடிக்கைகளுக்கு மத்தியில் தியாகராஜர் புறப்படுவார். ''தியாகராஜா தீகி தீகி! தியாகராஜா தீகி தீகி!'' என்று அஜபா நடன தரிசனம் கொடுத்தபடியே பக்தகாட்சி மண்டபத்தை மூன்றுமுறை வலம் வருவார். மண்டபத்தில் கூடியிருக்கும் மக்கள் பரவசத்துடன், ''தியாகேசா! தியாகேசா!'' என்று கைகூப்பித் தொழ, அவர்களைச் சுற்றி வலம் வந்து தம் இருப்பிடத்துக்குத் திரும்புவார் தியாகராஜா! ○



**தியாகராஜா தீகி தீகி...**
**தியாகராஜா தீகி தீகி...**
**என்று அஜபா நடன தரிசனம் கொடுத்தபடியே பக்தகாட்சி மண்டபத்தை மூன்றுமுறை வலம் வருவார் தியாகராஜா**





'திருவாரூர்' கோயிலின் இந்திர கோபுரத்தை விட்ட கோபுரம் எனச் சொல்கின்றனர். இந்திரனுக்கு சாபம் விடப்பட்டு, அது நீங்கிய இடம் என்பதால் அந்தப் பெயர். கோபுரத்தின் அளவிலும், வாசலின் அளவிலும் கொஞ்சம் சிறியது. இருப்பினும் உற்சவ காலங்களில், தியாகராஜா உட்பட உற்சவ சுவாமிகள் அனைவருமே இந்த விட்ட வாசல் வழியாகத்தான் திருவீதி உலாவுக்கு வெளியே வருகின்றனர்.

விட்ட கோபுரத்தின் எதிரே கோயிலுக்கு வெளியே, மனுநீதிச் சோழனின் கல்தேர் காட்சியளிக்கிறது. இறந்து கிடக்கும் கன்று, அதனை முகர்ந்து பார்க்கும் தாய்ப்பசு. எழிலார்ந்த கல்தேர். ஒரு சக்கரத்தின் அடியில் மன்னன் மகன். கி.பி. 9-10ம் நூற்றாண்டுகளில் கட்டப்பட்ட கல் தேரும், கல்லிலே பசுவும் கன்றும் அவசியம் காணத்தக்கன. கல் தேரின் கல் சக்கரங்கள் ஒட்டுக்கல் வேலைப்பாடுடையன. கல் சக்கரத்தின் கடையாணிகூட கல்லிலே கடைந்து போடப்பட்டிருக்கும்.

# தேர்ந்து அமைந்த திருத்தலம்!



திருக்கோயிலின் மூலவர் 'புற்றிடங் கொண்ட பெருமான்' வன்மீகர். அருகே அன்னை சோமகுளாம்பிகை. இறைவன் சூரிய குலம். அம்பாள் சந்திர குலம். மூலவர் சன்னிதிக்கு வலதுபுறத்தில் தனி சன்னிதியில் தியாகராஜா வீற்றிருக்கிறார். இந்த ஆலயத்தில் சிறப்பு பூஜைகள் பெறுபவர் இவரே.

மூன்றாவது பிராகாரத்தில் வடமேற்கு திசையில் ஈசான்யத்தை நோக்கி அமைந்துள்ளது கமலாம்பிகை சன்னிதி. இங்கு அம்பிகை சிரசில் சர்வேஸ்வரனைப் போன்று கங்கையையும், பிறையையும் சூடிக்கொண்டு யோக வடிவில் அமர்ந்திருக்கிறாள். இவள் மூன்று தேவியரின் சங்கமம்.

கோயிலின் உள்ளே எட்டு துர்க்கைகள். முதல் பிரகாரத்தில் பிரதான துர்க்கையை சேர்த்து மூன்று, இரண்டாம் பிரகாரத்தில் நான்கு, கமலாம்பாள் சன்னிதியில் ஒன்று. தோளில் சூலம் கொண்டிருப்பவள் ரௌத்ர துர்க்கை.

வாதாபி விநாயகர், வீதிவிடங்க விநாயகர், வல்லப கணபதி, ஐங்கலக் காசு விநாயகர், மாற்றுரைத்த விநாயகர், உச்சிஷ்ட கணபதி என பன்முக விநாயகர்களும் கோயிலிலும், கமலாலயக் குளக் கரையிலும் சன்னிதி கண்டுள்ளனர்.

மூலஸ்தானத்து சோமகுளாம்பாள் படி தாண்டா பத்தினி. கும்பாபிஷே

கம் நடைபெறும் அன்று மட்டும் அதி காலை நேரத்தில் யாக சாலை சென்று காலை வேளையில் சன்னிதி வந்து சேர்ந்து விடுவாள். எந்த உற்சவங்களி லும் சன்னிதி விட்டு வெளியே செல்வதில்லை சோம குளாம்பாள்.

"ஒரு காலத்தில் திருநள்ளாறு, திருக் காளவாசல், திருக்குவளை, திருவாய்மூர், திருநாகை, திருமறைக்காடு ஆகிய ஆறு ஊர்களிலிருந்தும் சாமிகள் புறப்பட்டு வந்து திருவாரூர்க் கோயிலின் ஆயிரங்கால் மண் டபத்தில் ஆடியதாகச் சொல் லப்படுகிறது.



கமலாலயத் திருக்குளத்தின் மையப் பகுதியில் நாகநாதர் கோயில் ஓர் ஏக்கர் பரப்பு. தெப்பத் திருவிழாவின்போது ஆயிரம் பேர் அமரக்கூடிய பெரிய தெப்பம் திருக்குளத்தின் உள்ளே சுற்றி வரும். தேரோட்டத்துக்கு அடுத்து தெப்பம்.

சிவபெருமான், 'நான் இந்த ஊர்க் காரன்!' என்று சொன்னது திரு







## ஆயிரம்பேர் அமரக்கூடிய பெரிய தெப்பம் திருக்குளத்தின் உள்ளே சுற்றி வரும்

வாரூர் மண்ணில்தான். பூலோகம், கைலாசம், ஸ்ரீநகரம் எனத் தொடங்கி பதினெட்டு பெயர்கள் இந்த ஊருக்கு உண்டு. சிவனே தேர்ந்து அமைத்துக்கொண்ட திருத் தலம் திருவாரூர்!'' என்கிறார் அர்ச்சகர் ஸ்ரீகண்டன்.



# ஆரூர்ப் பூங்கோயில்

திருவாரூர் கோயிலை தினம் ஒருமுறை வலம் வருபவர்களை சர்க்கரை நோய் அண்டவே அண்டாது! அவ்வளவு விசாலமான பரப்பு! 'கோயில் ஐந்து வேலி, குளம் ஐந்து வேலி, செங்கழுநீர் ஓடை ஐந்து வேலி' என்று சொலவடையே உண்டு திருவாரூர் குறித்து. (ஐந்து வேலி என்பது சுமார் 35 ஏக்கர்!)

எல்லாவற்றுக்கும் முந்திய காலத்திலேயே இந்தக் கோயில் புராணங்களிலும் தேவாரத்திலும் பேசப்படுகிறது!

ஒருவனாய் உலகத்து நின்ற நாளோ!
திசை எட்டும் தெரிப்பதற்கு முன்னோ
பின்னோ!
தேசம் உமை அறிவதற்கு முன்னோ
பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே!

என்று ஆரூர்ப்பெருமான் அநாதியானவன் என்று பாடி, பதிவு செய்கிறார் அப்பர் சுவாமிகள்!

கி.பி. 12-13ம் நூற்றாண்டில் மூன்றாம் குலோத்துங்க சோழனால் கட்டப்பட்ட கிழக்கு கோபுரம் 7 நிலைகளைக்கொண்டு 118 அடி உயர்ந்து நிற்கிறது. தெற்கு கோபுரம் பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் மேற்கு கோபுரம் 15ம் நூற்றாண்டிலும் அமைக்கப்பட்டவை. 94 அடி உயரமுள்ளது வடக்கு கோபுரம். ஆனால், இவை

**இசை முழக்கம்:** தந்தத்தால் கடைந்து வெள்ளியால் இழைக்கப்பட்ட பாரி நாயனம் திருவாரூரைத் தவிர வேறு ஊரில் இசைக்கப்பட்டதில்லையாம்! (தில்லானா




மோகனாம்பாள் கதையில் வரும் பாரி நாயனம்தான்!) திருவாரூருக்கே உரிய பூத நிருத்தத்தின்போது வாசிக்கப்படும் சுத்தமத்தளம், சாயரட்சை பூஜையின் போது வாசிக்கப்படும் பஞ்சமுக வாத்யம் என்று விசேஷமான வாத்யக் கருவிகள் தியாகராஜா கோயிலின் நித்ய பூஜை உத்ஸவங்களில் முழங்கி வந்துள்ளன.

**செவ்வந்தித் தோடழகர்:** செவ்வந்திப் பூக்களை இறுக்கமாகக் கட்டி வட்டவடிமான வளையம் போல் செய்து, அதன் நடுவில் வெட்டி வேரைப் பந்தாகச் சுருட்டி வைத்து, அழுத்தமாகக் கட்டி, ஜரிகையால் சுற்றி, தயாரிக்கப்படும் தோடு தியாகராஜாவின் இரு காதுப் புறங்களையும் தினந்தோறும் அழகு செய்கிறது.



செவ்வந்திப் பூக்களால் தயாரிக்கப்பட்ட தோடுகள், தியாகராஜாவின் இரு காதுகளையும் தினந்தோறும் அலங்கரிக்கின்றன!

**வீர கட்கம்:** தியாகராஜரின் திருமேனிக்கு முன்னால் இருபுறமும் நீண்ட பட்டாக்கத்தி சாய்வாக வைக்கப்பட்டிருப்பதைப் பார்த்திருப்பீர்களே! அதுதான் வீர கட்கம்! வீர கண்டயம் என்றும் வீர வண்டயம் என்றும் பெயர் உண்டு!

தியாகராஜா தேருக்கு எழுந்தருளும் முன்னாலேயே இந்த வீரகட்கம் தனியாகப் பூஜிப்பட்டு தேருக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. தியாகராஜாவுக்கே உரிய முக்கிய அடையாளப் பொருள் இந்த வீர கட்கம்.

**முன்னழகும் பின்னழகும்:** செவ்வந்தித் தோடழகர், திருவந்திக் காப்பழகர், கம்பிக் காதழகர், கிண்கிணிக் காலழகர், முன்னிலும் மும்மடங்குப் பின்னழகர்... என்று தியாகராஜாவின் அழகைப் பட்டியலிட்டுக் கொண்டே போகிறது ஒரு பாடல். தியாகராஜர் திருத்தேருக்கு எழுந்தருளும்போதும், பக்தர் காட்சியின்போது, அவரது பின்னழகை எல்லோரும் கண்டு களிக்கலாம்! மணிகள் இழைத்து ஜடையுடன் கூடிய பின்னலும், குஞ்சலமுமாக, ஒரு பெண்ணின் ஜடையலங்காரத்துடன் காட்சியளிக்கிறார்! ○

---

**திருவாரூருக்கு அருகில் உள்ள வைணவ ஸ்தலங்கள்:**
திருக்கண்ணபுரம், திருக்கண்ணங்குடி
திருக்கண்ணமங்கை, நாகப்பட்டினம், திருச்சிறுபுலியூர்



"திருவாரூர் தேரழகு;
திருவிடைமருதூர் தெருவழகு;
மன்னார்குடி மதிலழகு;
வேதாரண்யம் விளக்கழகு"

என்பது தமிழ்நாட்டில் வழங்கி வரும் வழக்கு.

# ஆழித்தேர் வித்தகன்

தேர் என்றால் அது திருவாரூர்த் தேர்தான். ''ஆழித்தேர் வித்தகனை யான் கண்டது ஆரூரே'' என்று அப்பர் பெருமானே இந்த நிகழ்ச்சியைப் பதிவு செய்திருக்கிறார்.

திருவாரூர் தேர் மிகப் பிரமாண்டமானது. இலுப்பை மரத்தால் ஆன தேரின் அடிப்பாகம் கலை நயம் மிக்க மரச் சிற்பங்களால் ஆனது. இதுவே முப்பது அடி உயரம். இதன்மீது பனை மரச் சப்பைகளும் மூங்கில்களும் கொண்டு அமைக்கப்படும் பகுதி 48 அடி. அதன் மீது மூங்கிலால் கூடு போல வேய்ந்து, அதன் மீது தேர்ச் சீலைகளைப் போர்த்த அமைக்கப்படும் விமானம் 12 அடி! கலசம் மட்டுமே 6 அடி. ஆக மொத்தம் 96 அடி உயரம் உள்ளது இந்த பிரமாண்டமான தேர்!

அலங்கரிக்கப்பட்ட தேரின் எடையே முன்னூறு டன் இருக்குமாம்! இந்தத் தேரை இழுப்பது போன்ற பாவனையில் எம்பிக் குதிக்கும் 4 குதிரைகள் ஒவ்வொன்றும் 30 அடி நீளம்.

இந்தக் குதிரைகளை ஓட்டும் சாரதியாக பிரம்மா. யாளிகள், பாம்புகள், துவார பாலர்கள் என்று 68 அலங்காரப் பொருட்களால் தேரின் அழகும் கம்பீரமும் கூடுகின்றன!



முன்பெல்லாம் எட்டுச் சக்கரங்களுடன் இந்தத் தேர் பவனி வருமாம். நான்கு தேர் வடங்கள்! ஒவ்வொன்றும் 426 அடி நீளம்! 21 அங்குலம் பருமன்! தேரை இழுக்க சுமார் இரு பதாயிரம் பேர் தேவைப்பட்டனர். தேர் கிளம்புவதற்கு மட்டுமே நாள் குறிப்பார்களாம். பங்குனி ஆயில்யத்தில் தொடங்கும் தேரோட்டம். தேர் நிலைக்கு வர எத்தனை நாட்கள் ஆகுமோ தெரியாது என்பதால், தேரோட்டம் முடிந்த பிறகு வரும் மற்ற நிகழ்ச்சிகளை நாள் குறிக்காமலேயே விட்டு விடுவார்களாம்!

தென்னங் குலைகள், பனங்குலைகள், ஈச்சங் குலைகள், வாழைக் குலைகள், வாழை மரங்கள், கொடிகள், தோரணங்கள், விதானங்கள், சித்ர வேலைப்பாடு மிகுந்த தேர்ச்சிலைகள், தொம்பைகள் என்று சர்வாலங்காரத்துடன், மணிகள் ஒலிக்க தேர் நகர்ந்து வருவது கண்கொள்ளாக் காட்சி. முன்பெல்லாம் மூலை திரும்புவதற்காக வடம் பிடிப்பவர்கள் படாதபாடு படுவார்கள். தேரோடும் வீதியையும் தாண்டி தேர்வடம் போகும் தெருவுக்கு 'வடம் போக்கி' என்றே பெயர்.




கமலாலயத்துக்கும் கோயில் மதில் சுவருக்கும் இடையேயான குறுகிய வீதி வழியே பிரமாண்டமான தேர் நகர்ந்து செல்வது எதிர்க் கரையில் இருந்து பார்த்தால் அழகாக இருக்கும். இத்தனை குறுகிய பாதையைக் கடந்துவிட்டால் தேர் நிலைக்கு வந்து சேருவதற்குச் சமம் என்று உள்ளூர்வாசிகள் சொல்கிறார்கள்.

காலப்போக்கில் மக்களின் ஆர்வம் வேறுவிதமாய்த் திசை திரும்ப, கோயில் வருமானம் குறைந்துவிட, தேரோட்டம் ஒரு கட்டத்தில் நின்றே போய்விட்டது. முதல்வர் கருணாநிதி முயற்சியால் (1970ல்) மீண்டும் தேரோட்டம் துவக்கப்பட்டது.

திருச்சி பெல் நிறுவனத்தின் அதிகாரிகள் சிலர் முயற்சியால் தற்போது இரும்புச் சக்கரங்களும், ஹைட்ராலிக் பிரேக்கும் பொருத்தப்பட்டு, முட்டுக்கட்டை, உலுக்கு மரம் இவற்றின் உதவியின்றி தேரோட்டம் நடைபெறுகிறது. புல்டோசர்களும் டிராக்டர்களும் பக்தர்களின் சிரமத்தைப் பங்கு போட்டுக் கொள்ள, கோலாகலமாக நடைபெறுகிறது தேரோட்டம்.

## அலங்கரிக்கப்பட்ட தேரின் எடையே முன்னூறு டன் இருக்குமாம்!



'கிரீஸ்' தடவப்பட்ட இரும்புப் பலகைகளின் மேல் தேரை நிற்க வைத்து, புல்டோசரால் ஓர் இடி இடித்து ஒரு தள்ளு தள்ளினாலே தேர் குலுங்கிக்கொண்டு திரும்பிவிடுகிறது! ஆர்வத்தால் மக்கள் வடம் பிடித்து இழுக்கிறார்களே தவிர தேர் ஓடுவது புல்டோசர் புண்ணியத்தினால்தான். நாட்கணக்கில் ஓடிய தேர், இப்போதெல்லாம் மணிக்கணக்கில் நிலைக்கு வந்துவிட முடிகிறது. ஆனாலும், சாலைகளின் மேடு பள்ள அமைப்

## பிரபஞ்சத்தின் வடிவம் ஆழித்தேர்!

படை வீரர்களின் தகுதியையும், அந்தஸ்தையும் குறிக்க மகாபாரதத்தில் 'அதிரதன்', 'மகாரதன்' என்ற பட்டங்கள் வழங்கப்பட்டன. தேர் ஏறிப் பொருதல் வீர லட்சணம்; ராஜ லட்சணம். அதுவே இறைவனுக்கும் சமர்ப்பிக்கப்பட்டது. இதுவே கோயில்களில் நடக்கும் தேர்த் திருவிழாவுக்கு மூலமாக இருந்திருக்கலாம்.

தேவேந்திரன் ஏழு தியாகராஜர் திருமேனிகளையும் ஒரு தேரில் வைத்து பூமிக்கு அனுப்பியதாகப் புராணம் கூறுகிறது. அன்று முதல் திருவாரூரில் இந்தத் தேரோட்டம் விமரிசையாகிவிட்டது. இந்தத் தேரை சமுத்ரராஜன் தன்னில் இருந்து உருவாக்கினானாம். அதனால் இதற்கு ஆழித்தேர் என்று பெயர் வந்ததாம்! (ஆழி = சமுத்ரம், கடல்) தத்துவ நோக்கில் தேரினைப் பிரபஞ்ச வடிவானது என்று பேசுகின்றனர். இதன் கீழ்த்தட்டுகள் ஏழும், ஏழு பாதாள லோகங்கள். மையப்பகுதி பூலோகம். மேலுள்ள விதானப்பகுதி மேல் உலகங்கள். பருவங்களே இதன் சக்கரங்கள். படைக்கும் தொழில் உடைய பிரம்மாவே இதன் சாரதி. நான்கு வேதங்களே குதிரைகள். வேதத்தின் ஆறு அங்கங்களே தேர்க்கயிறுகள். 64 கலைத் தத்துவங்கள் 64 கால்கள். மேலுள்ள கலசம் சிவலோகம். ஒற்றைக் குடை பரவெளி. ஆக இந்தப் பிரபஞ்சத்தின் வடிவமே இந்த ஆழித்தேர்.

## இந்தத் தேரை இழுப்பது போன்ற பாவனையில் எம்பிக் குதிக்கும் 4 குதிரைகள் ஒவ்வொன்றும் 30 அடி நீளம்



பினால் அவ்வப்போது தேர்ச்சக்கரம் பூமியில் ஆழ்ந்து போய் நகர முடியாமல் திண்டாடுவதும் உண்டு. மாசி மகம் முடிந்து ஹஸ்தத்தில் கொடியேற்றம் தொடங்கி பங்குனிப் பூசத்தில் தியாகராஜா தேர் ஏறி, ஆயில்யத்தில் தேரோடி, உத்திரத்துக்குள் நிலைக்கு வர வேண்டும். இது தான் மரபு. அப்படி வரவில்லையானால் பங்குனியின் உத்திரபாத தரிசனம் தேரிலேயே நடக்குமாம்! அந்த மரபுகள் எல்லாம் கனவாகி, நினைத்த நேரத்துக்குத் தேரோட்டம் நடைபெறுவது என்பது இப்போது தியாகராஜாவுக்கே பழக்கமாகிவிட்டது! ○

# கமலாலயம்






**கோ**யில் திருக்குளம் கமலாலயம். விரிந்து பரந்த குளம், 5 வேலி (30 ஏக்கர்) பரப்புள்ளது. எப்போதும் நீர் நிரம்பி, காற்றினால் உண்டாகும் சிற்றலைகள் பரப்பில் தவழ ரம்யமாகக் காட்சி அளிக்கிறது கமலாலயம். இதன் நடுவில் உள்ள கோயில் 'நடு வணாங்கோயில்' என்று அழைக்கப்படுகிறது. இதில் நாகநாத சுவாமி வீற்றிருக்கிறார். இவரை வணங்குவோர் கால சர்ப்பதோஷம் நீங்கப் பெறுவர் என்பது நம்பிக்கை. கமலாலயக் கரையில் இருந்து படகின் மூலமே இந்தக் கோயிலை அடைய வேண்டும்.

இந்தத் திருக்குளத்தில் 64 தீர்த்தக் கரைகள் புண்ணிய தீர்த்தங்களாக விளங்குகின்றன. முத்துஸ்வாமி தீக்ஷிதர் தம் நவாவரணக் கீர்த்தனைகளில் இக்கமலாலயம் பற்றி மிகச் சிறப்பாகப் பாடுகிறார். இதன் கரையில் கமலாம்பிகை வீற்றிருப்பதாலேயே இது மற்ற எல்லாப் புண்ணிய தீர்த்தங்களிலும் மேலானது என்கிறார் தீக்ஷிதர்!

சுந்தரர் இறைவன் தனக்குத் தந்த பொற்காசுகளை மணிமுத்தாற்றில் போட்டு, கமலாலயத்தில் எடுத்துக்கொண்டதாக பெரிய புராணம் பேசுகிறது. இதன் கரையில் யஞ்ஞேஸ்வரர், மாற்றுரைத்த விநாயகர் ஆகிய கோயில்கள் இருக்கின்றன.



# செவிக்கு உணவில்லாதபோது...

**நா**ள் முழுவதும் வேதகோஷம், தேவார இன்னிசை, வாத்ய கோஷம் இவற்றுக்கிடையே திளைத்துவரும் தியாகராஜாவுக்கு வாய்க்கு ருசியாக பண்ணிப் போட கோயில் பரிவாரங்களில் சமையல் கலைஞர்கள் இருக்கிறார்கள். நெய்த் தேன்குழல் ரொம்ப விசேஷம். சும்மா பேருக்கு இரண்டு சுற்றுப் பிழிந்தது அல்ல. பெரிய சந்தனக் கல் அளவுக்கு இருக்கும் இந்தப் பிரசாதம் வேண்டுமானால், முன்னாலேயே சொல்லி வைத்து ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். சாயரட்சை பூஜையில் நிவேதிக்கப்படும் இந்த நெய்த் தேன்குழலுக்கு அவ்வளவு 'டிமாண்ட்'! கிரிக்கெட் பந்து அளவில் உருண்டையாகப் பிடித்து வைத்த பிட்டு, பெரிய அளவு சுகியன், தட்டுத் தட்டாய் அதிரசம், வடை என்று நைவேத்தியப் பட்டியல் நீள்கிறது!





முசுகுந்தார்ச்சனை, முகுந்தார்ச்சனை ஆகிய விசேஷ அர்ச்சனைகளின்போது அண்டா அண்டாவாக சர்க்கரைப் பொங்கல், வெண்பொங்கல், சம்பா அன்னம், புளியோதரை, தயிரன்னம், பாயஸம், பட்சண வகைகள் என்று நிவேதிக்கப்படுகின்றன. குழித் தளிகை என்று பொரியல், கூட்டு, குழம்பு, தோசை, துவையல், பருப்பு, பாயஸம் என தடபுடலான மெனுவும் உண்டு.

இத்தனை ஆடம்பர உணவினால் வயிறு பாடாய்ப் படுத்தாதோ என்றால் அதற்கும் மருந்து வைத்திருக்கிறார். பாகற்காய் கறியும் தூதுவளைக் கீரை மசியலும் கூட இங்கு பிரசித்தம்! 'எண்ணெய்க் குளியல்' என்ற விசேஷமான அபிஷேகத்துக்குப் பிறகு பத்தியச் சாப்பாடு இது! இதற்கென்றே பாகற்காய்த் தோட்டம் ஒரு காலத்தில் பராமரிக்கப்பட்டு வந்ததாம்!

இது தவிர, வீதிவலம் வந்த அசதி தீர சுக்கு, மிளகு, திப்பிலி, வெல்லம் கலந்த உருண்டைகள் நான்கை விழுங்கி, பானகத்தையும் ஒரு மடக்கு குடித்து விட்டு ஆயிரக் கால் மண்டபத்தில் போய் 'அப்பாடா' என்று உட்கார்ந்துவிடுவாராம் தியாகராஜா!

# பேராயிரம் உடைய பெம்மான்

முசுகுந்தச் சக்கரவர்த்தி தியாகராஜருக்கு சஹஸ்ரநாமம் ஓதிச் செய்த அர்ச்சனை முசுகுந்தார்ச்சனை. இது விழாக்காலங்களில் செய்யப்படுவது மட்டுமல்லாமல், பக்தர்கள் வேண்டுகோளுக்கு இணங்கியும் செய்யப்படுகிறது. இந்திரனுடைய பூஜையின்போது அவனால் இயற்றப்பட்ட இந்திரார்ச்சனை, தினம்தோறும் திருவந்திக் காப்பு என்னும் சாயரட்சை பூஜையின் போது நடைபெறுகிறது. இந்திரனுக்கு முன்னால் தியாகராஜரைப் பூஜித்து வந்த மகாவிஷ்ணுவால் இயற்றப்பட்டது முகுந்தார்ச்சனை. இதுவும் பக்தர்கள் கைங்கர்யமாக அவ்வப்போது நடைபெறும். ஆவணி மூலத்தன்று விசேஷமாக பக்தர்களால்





நடத்தப்படுகிறது! இந்த மூன்று சகஸ்ரநாமத்திலும் தியாகராஜாவின் பிரத்தியேகமான விசேஷங்கள், கோலாகலங்கள் வர்ணிக்கப்படுகின்றன. இந்த நாமாவளிகள் புத்தக ரூபமாக வெளியிடப்படுவதில்லையாம். தலைமுறை தலைமுறையாக கையெழுத்துப் பிரதியாகத்தான் இதை வைத்துப் பாதுகாத்து வருகிறார்கள். பெரிய நோட்டு புஸ்தகத்தில் எழுதி வைத்துக்கொண்டு, நிதானமாக ஒவ்வொரு நாமாவளியாகப் படித்து அர்ச்சனை செய்கிறார்கள். படிப்பவர் ஒருவர் அர்ச்சனை செய்பவர் இன்னொருவர் என்று பாராயணத்திலும் அழகுணர்ச்சி குன்றாத அர்ச்சனையிலும் தனித் தனி கவனம் செலுத்துவதும், பூக்களை வீசாமல், நேர்த்தியாக அலங்கரிப்பதும் என்று இரண்டு மணி நேரமாவது நடக்கிறது இந்த அர்ச்சனை. நிறைவான அனுபவம்! ○



**மூலாதார கணபதி:** விராட் புருஷனுடைய மூலாதாரமாக விளங்குகிறது திருவாரூர். அதனால் இந்த ஸ்தலத்து விநாயகர் பெயர் மூலாதார கணபதி. இவர் யோக நிலையில் உண்டாகும் சித்திகளை அருளுபவர். இவரைத் தவிர, நடுக்கந் தீர்த்த விநாயகர், ஆகாச விநாயகர், வீதி விடங்க விநாயகர், வல்லப விநாயகர் என்று பல பெயர்களுடன் ஆங்காங்கே அருள்பாலிக்கிறார்.

**பிரம்ம நந்தி:** இந்த நந்திகேசுவரருக்கு அருகம்புல் சாத்தி அதை பசுக்களுக்குக் கொடுத்தால் நிறைய பால் கறக்குமாம்! இவரைச் சுற்றி தொட்டி கட்டி நீர் நிரப்பினால் மழைவளம் பெருகுமாம்.

**ருணவிமோசனர்:** உள் பிராகாரத்தில் அபூர்வ



# பலன் தரும் பிரார்த்தனைகள்

மாக தெற்கு முகமாக உள்ள சிவலிங்கம். தெற்கு முக லிங்கம் தாந்திரீக வழிபாட்டுக்கு உகந்தது. இவர் சன்னிதியில் உப்பு வாங்கிக் கொட்டினால் கடன் தொல்லைகள் தீரும்.

**விஸ்வகர்மேஸ்வரர்:** தேவர்களின் கட்டடக் கலை நிபுணர் விஸ்வகர்மா. இவர்தான் தியாகராஜரின் உருவங்களை சிருஷ்டி செய்தவர். இவர் பூஜித்த லிங்கமான விஸ்வகர்மேஸ்வரர் வாஸ்து தோஷத்தை நீக்குபவர். இவர் சன்னிதியில் செங்கல் வைத்துப் பூஜை செய்து, அதைக் கொண்டு






புதுவீடு கட்டினால் விரைவில் நிறை வடையும். வீட்டிலும் வளங்கள் பெருகும்.

**ரௌத்ர துர்க்கை:** இந்த அம்பிகைக்கு எரிசினக் கொற்றவை என்று அழகான தமிழ்ப்பெயர். தெற்கு பிராகாரத்தில் தனிக்கோயில் கொண்டு விளங்கும் இந்த அம்பிகை சக்தி வாய்ந்தவர். திருமணத் தடைக்குக் காரணமான தோஷங்களை நிவர்த்தி செய்து மங்களம் அருளும் தேவி.

**நவக்கிரகங்கள்:** திருவாரூர் கோயிலில் நவகிரகங்கள் வரிசையாகக் காட்சி தருகின்றனர். கோள்களின் வக்கிரம் நீங்கி, சாந்த மூர்த்திகளாக அவர்கள் அருள்பாலிப்பதால் இங்கு நவகிரக தோஷம் இல்லையாம்.

**அட்சர பீடம்:** கமலாம்பாள் சன்னிதி பிராகாரத்தில் உள்ள இந்த அட்சர பீடம் தேவி உபாஸகர்களில் முதன்மை ஸ்தானத்தில் உள்ள அகஸ்தியரால் ஸ்தாபிக்கப் பட்டது. பீடமும் திருவாசியும் மட்டுமே விளங்கும் இதன் மீது 51 அட்சரங்கள் அவற்றுக் குரிய தேவிகளின் சக்திகளோடு சேர்த்து மந்திர ரூபத்தில் ஆவாஹனம் செய்யப்பட்டு உள்ளன. இந்த பீடத்தின் மத்தியில் மூலஸ்தானத்தில் தரிசித்த கமலாம்பிகையை தியானத்தால் இருத்திப் பார்க்க வல்லவர்கள் மந்திர சித்திகளைப் பெறுவர். ○







## தியாகராஜ லீலை:

மதுரை சொக்கநாதரின் திருவிளையாடல்கள் 64 என்றால் திருவாரூர் தியாகராஜரின் லீலைகள் 364. தியாகராஜ லீலை என்ற வடமொழி நூல் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. ஆனால், இப்போது இந்த நூல் கிடைப்பதில்லை. மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் செய்யுள் வடிவில் தியாகராஜ லீலையை எழுத முற்பட்டு 13 லீலைகளை எழுதி முடித்தார். 14வது லீலையை எழுதிக் கொண்டிருக்கும்போது இந்த நூல் முற்றுப்பெறாமல் அவர் இறைவனடி சேர்ந்துவிட்டார். 'கமலாலயச் சிறப்பு' என்றும் ஒருநூல் இருப்பதாகத் தெரிகிறது.

யோகஸ்தானங்களாகக் கருதப் படும் ஸப்த (ஏழு) விடங்க ஸ்தலங்கள்:

1. மூலாதாரம் - திருவாரூர் - வீதிவிடங்கர்
2. சுவாதிஷ்டானம் - திருக்காரவாசல் - ஆதிவிடங்கர்
3. மணிபூரகம் - நாகப்பட்டினம் - சுந்தர விடங்கர்
4. அநாகதம் - திருநள்ளாறு - நகவிடங்கர்
5. விசுத்தி - திருக்குவளை - அவனிவிடங்கர்
6. ஆஞ்ஞா - வேதாரண்யம் - புவனி விடங்கர்
7. சகஸ்ராரம் - திருவாய்மூர் - நீலவிடங்கர்

## ஏழு நடனங்கள்:

**1. அஜபா நடனம் 2. குக்குட நடனம் 3. பாராவார தரங்க நடனம் 4. உன்மத்த நடனம் 5. பிருங்க நடனம் 6. ஹம்ஸபாத நடனம் 7. கமல நடனம்**

## திருவாரூர் சுற்றுவட்டாரத் தலங்கள்

1. திருநெய்ப்பேர் எனும் எமப் பேரூர்
2. திருக்காரவாசல் எனும் திருக்காராயில்
3. திருநாட்டியத்தான்குடி
4. திருநெல்லிக்கா
5. திருத்தெங்கூர்
6. திருக்கன்றாப்பூர்
7. வலிவலம்
8. திருக்கைச்சினம்
9. திருக்குவளை திருக்கோளிலி
10. திருவாய்மூர்
11. திருத்துறைப் பூண்டி

# நின்ற நிலையில்

தொடராது தேரழகு

12. சிக்கல்
13. எட்டுக்குடி
14. எண்கண்
15. கீழவேளூர்
16. நாகப்பட்டினம்
17. குடவாயில்
18. திருச்சேறை
19. திருநாலூர் மயானம்
20. திருவிற்குடி
21. திருப்புகலூர்
22. திருச்செங்காட்டங்குடி
23. திருமருகல்
24. நன்னிலம்
25. இராமநந்தீஸ்வரம்

மகாராஜாவின் அந்தஸ்தில் தியாக ராஜா வீற்றிருப்பதால் அவர் முன்னுள்ள நந்தி கேஸ்வரர் நின்ற நிலையில் காட்சி அளிக்கிறார். ராஜாவின் முன்னால் காலை நீட்டிக்கொண்டு படுப்பது மரியாதைக் குறைவல்லவா!

தியாகராஜர் வீற்றிருக்கும் இடத்தில் இருந்து, நந்திதேவர் நின்றிருக்கும் இடம் வரை மகாவிஷ்ணு சயனக் கோலத்தில் இருப்பதாக ஐதிகம். (அவர் மார்பு உள்ள இடத்தில்தான் தியாகராஜர் வீற்றிருக்கிறார்) அதனால் இந்த இடத்தைக் குறுக்காகத் தாண்டக்கூடாது என்பது நியதி.




திருவாரூரில் பிறந்தாலே முக்தி என்பதால், யமனுக்கு இங்கே யம வாதை என்கிற தண்டனை விதிக்கிற வேலை இல்லையாம். அதனால் ஆரூர் கோயிலுக்கு வரும் பக்தர்களுக்கு சிவபுண்ணியத்தைக் கணக்கிட்டு வழங்கும் சண்டேச பதவியை இங்கு யமதர்மராஜன் வகிக்கிறார். இங்கே இவருக்கு 'யம சண்டேசர்' என்று திரு நாமம்!

திருவாரூரின் ஸ்தல விருக்ஷம் சிவப்புப் பாதிரி மரம். இன்றும் கோயிலில் இது தழைத்து செழித்து விளங்குகிறது!

இறைவன் சுந்தரருக்கு அளித்த பொன்னை உரைத்துப் பார்த்து சர்டிஃபிகேட் தந்த விநாயகர் மாற்று உரைத்த விநாயகர்- இவர் கமலாலயக் குளக்கரையில் தனிக் கோயிலில் வீற்றிருக்கிறார். ●

# நந்தி!





# இந்திரன்

அசலேஸ்வரர்:- ஆரூர் கோயிலுக்குள் விளங்கும் தனிக்கோயில்களில் அசலேஸ்வரமும் ஒன்று. இராஜராஜ சோழன் தஞ்சையில் பெரிய கோயில் கட்டியபோது இந்தக் கோயிலையே முன் மாதிரியாகக் கொண்டான் என்று சொல்வார்கள்.

தேவாசிரிய மண்டபம்: ஆயிரம் தூண்களை உடைய மண்டபம் தேவாசிரிய மண்டபம். இங்கு எப்போதும் சிவனடியார்கள் கூடியிருப்பார்களாம். சுந்தரர் ஒருசமயம் அவர்களை வணங்காமல் சிவதரிசனம் செய்யக் கோயிலுக்குச் சென்றபோது, பெருமான் அந்த அடியவர்களை வணங்குவதே தன்னை வணங்குவதற்கு ஒப்பாகும் என்று உணர்த்தி 'தில்லைவாழ் அந்தணர்' என்று அடியெடுத்துக் கொடுக்க, அடியவர் பெருமையை வரிசைப்படுத்தித் திருத்தொண்டத் தொகையை சுந்தரர் பாடியதாக வரலாறு. இதுவே பெரிய புராணத்தின் மூலநூல்.

சந்திரசேகரர்: உமையுடன் கூடிய உத்ஸவ மூர்த்தியான சந்திரசேகர்தான் உத்ஸவ காலங்களில் வாகனங்களில் எழுந்தருளுபவர். தியாகராஜருக்கு தேர் பவனி மட்டுமே!

காட்சி கொடுத்த நாயனார்: மனு நீதிச் சோழனுக்கு காட்சி தந்த கோலத்தில் விளங்கும் அற்புதமான செப்புத் திருமேனி காட்சி கொடுத்த நாயனார். சோழர் காலக் கலைத் திறனுக்கு

# ஏமாந்தான்!




ஒப்பற்ற சான்று!

விடங்கர் : நித்தியப்படி அபிஷேகம் கொள்பவர் விடங்கர் என்ற மரகதலிங்கம். வெள்ளியால் ஆன சதுரமான ஆவுடையார் மீது அரை சாண் உயரமுள்ள பாணம் மரகதக் கல்லால் ஆனது. ஒருநாளைக்கு மூன்று காலம் அபிஷேகம் நடைபெறும் வேளையில் மட்டுமே இவரைத் தரிசிக்கலாம். மற்ற நேரங்களில் வெள்ளிப் பேழையில் பத்திரமாகப் பூட்டி பாதுகாக்கப்படும். விலைமதிக்க முடியாத பொக்கிஷம். (இதேபோல மற்ற ஆறு விடங்க ஸ்தலங்களிலும் மரகத லிங்கங்கள் இருந்தன. நம் துரதிர்ஷ்டம் அவற்றில் பெரும்பாலானவை களவு போய்விட்டன. அவர்கள் எல்லாம் எங்கேயிருந்து கொண்டு யாருக்கெல்லாம் அருள்பாலிக்கிறார்களோ!)

இந்திரன் ஏமாந்தான் : ஏதோ கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வேண்டுமே என்றுதான் இந்திரன் தியாகராஜரை முசுகுந்தனோடு அனுப்பிவிட்டான். மீண்டும் தேவலோகத்துக்கே வர வேண்டும் என்று தியாகராஜரைக் கேட்டுக்கொண்டானாம். அவரும், ''சரி கிழக்கு கோபுர வாசலில் காத்திரு. வந்து விடுகிறேன்'' என்று சொல்லிவிட, அங்கேயே இன்னும் காத்திருக்கிறானாம் இந்திரன்! அவனுக்குப் போக்கு காட்டிவிட்டுப் பக்கத்தில் உள்ள 'விட்டவாசல்' வழியே தியாகராஜர் வெளியே வருவதும் போவதுமாக இருக்கிறாராம்! ஏமாந்த சோணகிரியாக இந்திரன் இன்றும் காத்துக் கொண்டிருக்கிறான்!

# ஆழித்தேர் - அரிய

தெவிட்டாத தேரழகு

● திருவாரூர் ஆழித்தேர் எந்த ஆண்டு உருவாகியிருக்கும் என்கிற கல்வெட்டுச் சான்றுகள் ஏதுமில்லை. ஆனால், இறைவனடியார்களின் பாடல்களில் நிறைய இடம்பிடித்துள்ளது ஆழித்தேர்.

● திராவிடச் சிற்பங்களின் சிறப்புமிக்க ஒன்றென 'என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா' பதிவு செய்துள்ளது. சென்னை வள்ளுவர் கோட்டத்திலுள்ள தேர் திருவாரூர் தேர் உருவில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

● சுமார் இருபது ஆண்டுகள் தேரோட்டம் நடத்தப்படவில்லை எனக் கூறப்படுகிறது. அந்தக் காலகட்டங்களில் தேர் மறுசீரமைக்கப்பட்டது. வட பாதிமங்கலம் வி.எஸ்.தியாகராஜ முதலியார் முயற்சியால் மரச் சக்கரங்களுக்குப் பதிலாக இரும்புச் சக்கரங்கள் பொருத்தப்பட்டன.

● அறுபது ஆண்டுகளுக்கு முன்பு தேர் நிலைக்கு வர மூன்று மாதங்கள் ஆயிற்றாம். தேரோட்டத்தின்போது பாதி வழியில் தேர் அச்சு முறிந்து போய்விட்டது. பாலக்காடு சென்று புதிதாக தேர் அச்சு செய்து வாங்கிவந்து பொருத்தி, மீண்டும் தேர் இழுத்து நிலைநிறுத்தினார்களாம்.

● தேரோட்டத் திருநாளின்போது, தமிழகம் எங்கிலுமிருந்து திருவாரூர் வந்து கூடுகின்ற பக்தர்களின் எண்ணிக்கை சுமார் ஒன்றரை லட்சம் இருக்கும்.

● ஒரு வருட தேரோட்டத்தின் மொத்தச் செலவு சுமார் எட்டு லட்ச ரூபாயிலிருந்து பத்து லட்ச ரூபாய்க்குள் எனக் கூறப்படுகிறது.

● திருவாரூர் கோயிலில் மொத்தம் ஐந்து தேர்கள்... இவை கிழக்கு வீதியில் அடுத்தடுத்து நிலை நிறுத்தி வைக்கப்பட்டுள்ளன. விநாயகர் தேர், சுப்பிர மணியம் தேர், ஆழித்தேர், நீலோத்பலாம்பாள் தேர், சண்டிகேஸ்வரர் தேர் என்பன பெயர்கள்.

● தேர்த் திருவிழாவின் முதல்நாள் இரவே, தியாகராஜர் ஆழித்தேர் பீடம் சென்றடைந்திருப்பார். மேல் தட்டுகளில் அஷ்ட லட்சுமிகள், நவக்கிரகங்கள் என தேர் பீடத்தின் மீதே ஒரு ஆலய அமைப்பு உருவாகி இருக்கும்.

● தேரோட்டத் திருநாளன்று அதிகாலை ஐந்து மணிக்கெல்லாம் முதன் முதலாக விநாயகர் தேரும் அடுத்து சுப்பிரமணியர் தேரும் ஊர்ந்து செல்லத் துவங்கிவிடும். அதன் பின்னரே காலை ஆறு மணிவாக்கில் ஆழித்தேர் வடம் பிடித்து இழுக்கப்படும். ஆழித்தேருக்குப் பின்னாடியே நீலோத்பலாம்பாள் தேரும், சண்டிகேஸ்வரர் தேரும் பக்தர்களால் இழுத்து வரப்படும்.

● தேரோடும் வீதிகளான கீழ வீதி, தெற்கு வீதி, மேல வீதி மற்றும் வடக்கு வீதிகள் வழியாக ஆழித்தேர், தேரோட்டம் காணும். அப்போது வீதிகளின் நான்கு மூலைகளிலும் அலுங்கிக் குலுங்கி அசைந்தாடி மெல்ல வளைந்து ஆழித்தேர் திரும்புவது பேரழகு! தெவிட்டாத தேரழகு! ○



ஒவ்வோர் ஆண்டும் ஆழித் தேரோட்டம், ஏப்ரல் - மே மாதங்களில் நடைபெற்று விடும். இந்த வருடம் சற்று தாமதம். நகராட்சியின் மீது எல்லோரது பார்வையும் திரும்பியது. காரணம், பாதாளச் சாக்கடை வேலைகள்!

''தேரோடும் வீதிகள் நான்கு. கீழ வீதி, தெற்கு வீதி, மேல வீதி, வடக்கு வீதி. இதில் கீழ வீதி சாலையும், வடக்கு வீதி சாலையும் நெடுஞ்சாலைத்துறை பொறுப்பில் உள்ளது. அந்த வீதிகளில் பாதாளச் சாக்கடை வேலைகள் நிறைவு பெற்றுள்ளன. அதற்கெனத் தோண்டப்பட்ட பகுதிகளில் கான்கிரீட் தளம் அமைக்கப்பட்டு வருகிறது. நெடுஞ்சாலைத்துறை அந்தப் பணிகளில் ஈடுபட்டுள்ளது. இன்னும் ஒரு சில தினங்களில் (இந்த இதழ் வெளியாகும்போது - நிறைவு பெற்று விடும்) கீழ வீதியும் வடக்கு வீதியும் தேரோட்டத்துக்குத் தயாராகி விடும்.

தெற்கு வீதி சாலையும், மேல வீதி சாலையும் நகராட்சியின் பொறுப்பில் உள்ளன. இந்த இரண்டு வீதி சாலைகளிலும் பாதாளச் சாக்கடை வேலைகள் துவங்கப்படவே இல்லை. அதனால் தெற்கு வீதியும் மேல வீதியும் தேரோட்டத்துக்குத் தயாராகவே உள்ளன.

தேரோட்டத்துக்கு வசதியாக ஆக்கிரமிப்பு அகற்றுதல், சாலை பராமரிப்புப் பணிகள் போன்றவற்றில் நகராட்சிப் பணியாளர்கள் ஈடுபடுத்தப்பட உள்ளனர். சுகாதாரத் துறையின்

# ஆழித்தேரோட்டமும்... நகராட்சியும்!

## தேரோட்டத்தின்போது கோயிலுக்குப் பக்கத்தில் தற்காலிகக் கழிவறைகள், குடிநீர்த் தொட்டிகள் ஏற்படுத்தப்படும்!





பங்கு மிக முக்கியம். நோய்த் தொற்று ஏற்படாமலிருக்கு நான்கு வீதிகனின் மூலைகளிலும் மருத்துவ முகாம்கள் இயங்க உள்ளன. தேரோட்டத்தின்போது தேருக்குப் பின்னால், நடமாடும் மருத்துவ ஊர்தி சகல வசதிகளுடனும் செயல்படும்.

தற்காலிகக் கழிவறைகள், தற்காலிகக் குடிநீர்த் தொட்டிகள் தேவையான பகுதிகளில் ஏற்படுத்தப்படும். அரசு மருத்துவமனை ஆம்புலன் ஸூம், தீயணைப்புத்துறை வாகனமும் தயார் நிலையில் வைத்திருக்கப்படும். நகராட்சி சம்பந்தப்பட்ட வேலைகளில் தனி கவனம் செலுத்தி, ஆழித்தேர் திருவிழாவுக்கான ஏற்பாடுகள் விரைந்து முடிக்கப்படும்!'' என்கிறார் திருவாரூர் நகராட்சி ஆணையர் ஏ.கே.சிவகுமார்.






சிதம்பர ரகசியம் போல தியாகராஜாவுக்கும் ஒரு ரகசியம் இருக்கிறது. தியாகராஜர் சோமாஸ்கந்த மூர்த்தி ஆனாலும் (உமையுடனும் கந்தனுடனும் கூடிய பெருமான்) சாதாரண நாட்களில் தியாகராஜாவின் முகமும், அருகில் 'கொண்டியம்மன்' என்ற பெயருடன் அம்பிகையின் முகமும் மட்டுமே தரிசனம் ஆகும். பங்குனி உத்திரத் திருநாளன்று வலது பாத தரிசனமும் மார்கழித் திருவாதிரைத் திருநாளிலுமே இடது பாத தரிசனமும் காணக் கிடைக்கும். அப்போது கந்தப் பெருமானின் உருவமும் காணலாம். கழுத்து முதல் பாதம் வரை எப்போதுமே 'தியாக பரிவட்டம்' என்று பதினெட்டு பரிவட்டங்களால் சுற்றப்பட்டு மறைவாகவே இருக்கும் திருமேனி தியாகராஜரின் திருமேனி! ''முகத்தை மட்டும் காட்டும் மூடு மந்திரம் ஏதுக்கையா'' என்று ஒருவர் பாடியிருக்கிறார்! தியாகராஜாவின் மார்பில் மந்திரம் எழுதப்பட்ட யந்திரம் உள்ளது என்றும் அதன் சக்தியை யாரும் தாங்க முடியாது என்பதால் எப்போதும் மூடி மறைக்கப்பட்டிருக்கிறது என்றும் சொல்வதுண்டு. பரிவட்டங்களால் மூடப்பட்ட திருமேனியின் மீது தான் ஆடை ஆபரணங்கள் எல்லாம்! வருஷத்தில் எட்டு முறை நடைபெறும் அபிஷேகம்கூட கட்டிய துணியோடுதான்! ஆனால் ஒரே துணியை கட்டியதில்லை. ஒவ்வொரு முறையும் பரிவட்டம் மாற்றப்படுகிறது!

# தியாகராஜா ரகசியம்!

### எட்டு அபிஷேகம்

சித்திரை, ஆடி, ஐப்பசி, தை ஆகிய மாதப் பிறப்பு தினங்களிலும், பங்குனி உத்திரம், மார்கழி திருவாதிரை ஆகிய பாத தரிசன நாட்களிலும், தேர்த் திருவிழா முடிந்து பிராயச்சித்தாபிஷேகமும், பக்த காட்சியன்று ஓர் அபிஷேகமுமாக எட்டு அபிஷேகங்கள் தியாகராஜருக்கு. இடையில் கிரகண சஷ்ண்ய காலம் வந்தால் அன்றும் அபிஷேகம் உண்டு.



கட்டுரைகள்:
**த.கி.நீலகண்டன்,**
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**
தகவல்கள் உதவி:
**வி.டி.நாராயணன்,**
**திருவாரூர்,**
**பூசை.ச.அருணவசந்தன்,**
ஆசிரியர், சிவமஞ்சரி
படங்கள் உதவி :
**இந்திரமணாளன்**

தெய்வீக தரிசனம்

28.06.2009

இதழுடன் இணைப்பு

32 பக்கங்கள்

# கல்கி

## தெவிட்டாத தேரழகு!

இணைந்து வழங்குவோர்:



Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 - 11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.

கடலில் நீந்தும் பசு!





# பண்டிகை கோலாகலம்!

* வயிற்றில் முளைத்த செடி!



கதைகள், கவிதைகள், பரிசுப் போட்டி...

# கோகுலம்

ஜூலை 2009 விலை ரூ.8/-

குழந்தைகளின் குதூகலம்!

Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 " Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11" Registered as a Newspaper in Srilanka.



# உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு
# தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் ஸின்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸின்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே ஸின்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




மேனிப் பராமரிப்பு என்றென்றும்